# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு  தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



***‘‘புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம் நாட்டுக்கும் முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்’’***

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

*கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமுகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமுகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக்கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளுவதற்கு நீங்கள் பலம்பெற வேண்டும் என்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.*

*இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன் மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்களது ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை உங்களுக்கு அரசினால் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறிவரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகிற்கும் செயற்றிறன் மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.*

*அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக்கூடிய நிதிக்குப் பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.*

**அகில விராஜ் காரியவசம்**
***கல்வி அமைச்சர்***

## முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீன மயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க** — **கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்,**
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்..

## வழிகாட்டல்

**டப்ளியு.ஏ. நிர்மலா பியசீலி** — **கல்வி வெளியீட்டு ஆணையாளர்**
(அபிவிருத்தி),
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

**அஷ்ஷெய்க் எம்.ரீ. அப்துர் ரஹ்மான்** — **உதவிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்,**
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## எழுத்தாளர் குழு

**அஷ்ஷெய்க் எம்.எச்.எம். புஹாரி** — **ஆசிரிய ஆலோசகர்,**
வலயக் கல்விக் காரியாலயம்,
மினுவங்கொடை.

**ஜனாப் எம்.எஸ்.எம். பூஸரி** — **பிரதி அதிபர்,**
அல் பத்ரியா ம. வி. கஹட்டோவிட்ட.

**ஜனாப் எம்.எச்.எம். நாளிர்** — **வளவாளர் (ஓய்வுநிலை),**
தேசிய கல்வி நிறுவகம், மஹரகம.

**அஷ்ஷெய்க் ஏ.பீ.எம். அப்பாஸ்** — **சிரேஷ்ட விரிவுரையாளர்,**
நளீமியா இஸ்லாமியக் கலாசாலை,
பேருவளை.

**அஷ்ஷெய்க் எம்.எம். பஸ்லுர் ரஹ்மான்** — **சிரேஷ்ட ஆசிரியர்,**
பாபுஸ் ஸலாம் ம.வி, நாம்புலுவ, பஸ்யால.

**மௌலவி யூ.எல்.ஏ. அமீர்** — **விரிவுரையாளர்,**
அரபு, இஸ்லாமிய நாகரிகப் பிரிவு,
கொழும்பு பல்கலைக்கழகம்.

**மௌலவியா எம்.ஐ.எஸ். ஸுஹாரா** — **ஆசிரியை,**
கைரியா முஸ்லிம் மகளிர் கல்லூரி,
கொழும்பு 9.

**ஜனாப் ஏ.ரீ.எம். நிஜாம்** — **ஆசிரிய ஆலோசகர்,**
வலயக் கல்விக் காரியாலயம், புத்தளம்.

**அஸீமா ஹுஸைன்** — **சிரேஷ்ட ஆசிரியை,**
டீ.எஸ். சேனாநாயக்க கல்லூரி, கொழும்பு 7.

## பதிப்பாசிரியர் குழு

| | |
|---|---|
| **கலாநிதி எம்.ஏ.எம். சுக்ரி** | **பணிப்பாளர்,**<br>நளீமிய்யா இஸ்லாமியக் கலாசாலை,<br>பேருவளை. |
| **அஷ்ஷெய்க் எம்.எஸ். அப்துல் பாரி** | **முதுநிலை விரிவுரையாளர்,**<br>அரபு, இஸ்லாமிய நாகரிகப் பிரிவு,<br>பேராதனை பல்கலைக்கழகம். |
| **அஷ்ஷெய்க் எம்.ஆர்.எம். இர்ஷான்** | **பிரதிக் கல்விப் பணிப்பாளர்,**<br>தேசிய பாடசாலைகள் பிரிவு, கல்வி அமைச்சு. |
| **அஷ்ஷெய்க் ஜே.எம். ஜஸார்** | **விரிவுரையாளர்,**<br>இஸ்லாம் அரபுப் பிரிவு,<br>தேசிய கல்வி நிறுவகம், மஹரகம. |
| **ஜனாப் எம்.எம்.எம். ஸாபிர்** | **சிரேஷ்ட விரிவுரையாளர்,**<br>அரபு, இஸ்லாமிய நாகரிகப் பிரிவு,<br>கொழும்பு பல்கலைக்கழகம். |
| **அஷ்ஷெய்க் எம்.ரீ. அப்துர் ரஹ்மான்** | **உதவிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்,**<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |

## மொழிப் பதிப்பு

| | |
|---|---|
| **ஜனாப். எம்.எம்.எம். இல்யாஸ்** | **ஆசிரிய ஆலோசகர்,**<br>வலயக் கல்விக் காரியாலயம், கம்பஹா. |

## சரவை பார்த்தல்

| | |
|---|---|
| **அஷ்ஷெய்க் எம்.எம். ஸப்ரி மக்கீன்** | **அபிவிருத்தி அலுவலர்,**<br>அனைவருக்கும் கல்வி பிரிவு, கல்வி அமைச்சு. |

## இறுதி மதிப்பீடு

| | |
|---|---|
| **மௌலவி எம்.என்.எம். இஜ்லான்** | **பணிப்பாளர்**<br>பாதிபிய்யா அரபுக்கல்லூரி,<br>கஹட்டோவிட்ட,<br>**பிரதம கதீப்**<br>கொழும்பு பெரிய பள்ளிவாசல். |
| **மௌலவி எம்.ரீ. இக்பால்** | **ஆசிரிய ஆலோசகர்,**<br>வலயக் கல்விக் காரியாலயம், கொழும்பு 2. |

## கணினி வடிவமைப்பு

| | |
|---|---|
| **எச்.எப். ரிஸ்னா** | **கணினி வடிவமைப்பாளர்,**<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |

## தளக்கோலம், படங்கள், அட்டை வடிவமைப்பு

| | |
|---|---|
| **ஜனாப் எம்.டப்ளியூ.ஏ. அஸார்** | **கணினி வடிவமைப்பாளர்,**<br>மீள்பார்வை ஊடக மையம்,<br>கொழும்பு 9. |

# உள்ளடக்கம்


| | | |
|---|---|---|
| 1. | அகீதா | 1 |
| 2. | அஹ்லுஸ்ஸுன்னா வல்ஜமாஆ | 4 |
| 3. | அத் தவ்ஹீத் | 8 |
| 4. | ஈமானைப் பாதிக்கும் அம்சங்கள் | 11 |
| 5. | இறுதி நபித்துவம் | 16 |
| 6. | அல் கழாஉ வல் கத்ர் | 21 |
| 7. | ஸக்காத் | 26 |
| 8. | நோன்பின் தாற்பரியங்கள் | 36 |
| 9. | ஹஜ்ஜும் உம்ராவும் | 41 |
| 10. | இஸ்லாத்தின் புனிதஸ்தலங்கள் | 47 |
| 11. | நற்பண்புகள் தொடர்பான இஸ்லாமியக் கண்ணோட்டம் | 56 |
| 12. | இஸ்லாமிய ஒழுக்க மேம்பாடு | 65 |
| 13. | ஆன்மீக மேம்பாட்டுக்கான வழிமுறைகள் | 70 |
| 14. | அல் குர்ஆன் | 76 |
| 15. | அஸ் ஸுன்னா | 83 |
| 16. | அல் இஜ்திஹாத் | 87 |
| 17. | பிக்ஹுக் கலை | 90 |
| 18. | கலீபா அபூபக்கர் றழியல்லாஹு அன்ஹு | 95 |
| 19. | கலீபா உமர் றழியல்லாஹு அன்ஹு | 100 |
| 20. | கலீபா உஸ்மான் றழியல்லாஹு அன்ஹு | 104 |
| 21. | கலீபா அலி றழியல்லாஹு அன்ஹு | 108 |
| 22. | இலங்கை முஸ்லிம்களின் வரலாறும் பங்களிப்பும் | 113 |
| 23. | இலங்கை முஸ்லிம் முன்னோடி 1 (எம்.ஸி. சித்திலெப்பை) | 120 |
| 24. | இலங்கை முஸ்லிம் முன்னோடி 2 (ரீ.பீ. ஜாயா) | 126 |
| 25. | பொருளீட்டல் தொடர்பான இஸ்லாத்தின் போதனைகள் | 130 |
| 26. | இஸ்லாமிய நிதியியல் | 137 |
| 27. | திருமணம் | 141 |
| 28. | முன்மாதிரி இஸ்லாமியக் குடும்பம் | 150 |
| 29. | தலாக்கும் இத்தாவும் | 156 |
| 30. | உலக வாழ்வு பற்றிய இஸ்லாமியக் கண்ணோட்டம் | 163 |
| 31. | இஸ்லாமும் தொடர்பூடகங்களும் | 167 |
| 32. | உம்மத் பற்றிய கண்ணோட்டம் | 176 |

# முக்கிய குறிப்பு

பாடத்தில் இடம்பெற்றுள்ள அறபுப் பதங்களைப் பிழையின்றி உச்சரித்து வாசிக்கும் பொருட்டு ஒவ்வொரு பாட இறுதியிலும் அப்பாடத்தில் இடம்பெறும் முக்கிய அறபுச் சொற்கள் அறபு மொழியிலேயே தரப்பட்டுள்ளன.

எனவே ஆசிரியரின் உதவியோடு சரியான அறபு உச்சரிப்புடன் அவற்றை வாசிக்க முயற்சிக்கவும்.

எழுத்தாக்கக் குழு

# 1

# அகீதா

ثُمَّ أَرْسَلْنَا رُسُلَنَا تَتْرَا كُلَّ مَا جَآءَ أُمَّةً رَّسُوْلُهَا كَذَّبُوْهُ فَأَتْبَعْنَا
بَعْضَهُمْ بَعْضًا وَّجَعَلْنٰهُمْ أَحَادِيْثَ فَبُعْدًا لِّقَوْمٍ لَّا يُؤْمِنُوْنَ

'பின்னரும் நாம் நம்முடைய தூதர்களைத் தொடர்ச்சியாக அனுப்பி வைத்தோம். ஒரு சமுதாயத்திடம் அதன் தூதர் வந்த போதெல்லாம், அவர்கள் அவரைப் பொய்யாக்கவே முற்பட்டார்கள்; ஆகவே நாம் அச்சமூகத்தாரையும் (அழிவில்) ஒருவருக்குப் பின் ஒருவராக்கி நாம் அவர்களை(ப் பின்வருவோர் பேசும் பழங்) கதைகளாகச் செய்தோம். எனவே, நம்பிக்கை கொள்ளாத மக்களுக்கு (அல்லாஹ்வின் ரஹ்மத்) நெடுந் தொலைவேயாகும்' (23 அல் முஃமினூன்: 44)

அகீதா என்ற பதம் எத்தகைய சந்தேகத்திற்கும் இடமின்றி உறுதியாக நம்பி ஏற்றுக் கொள்ளல் என்ற கருத்தைத் தருகிறது. இஸ்லாமியப் பரிபாஷையில் அர்கானுல் ஈமான் என்ற அடிப்படை இஸ்லாமிய நம்பிக்கைகளையும் அவை தொடர்பான விடயங்களையும் அகீதா என வழங்குவர். இது அல்அகாயித் எனும் பன்மைச் சொல்லினாலும் வழங்கப்படுவதுண்டு.

உலகில் தோன்றிய எல்லா நபிமார்களும் றஸூல்மார்களும் ஒரே அகீதாவையே போதித்தார்கள். இவ்வுண்மையை அல்குர்ஆன் பின்வருமாறு சுட்டிக்காட்டுகிறது. *'(விசுவாசிகளே) நூஹ்க்கு எதனை அவன் உபதேசித்தானோ அதனையே உங்களுக்கும் அவன் (தீன்) மார்க்கமாக்கி இருக்கிறான். ஆகவே (நபியே) நாம் உமக்கு வஹி மூலம் அறிவிப்பதும் இப்றாஹீம், மூஸா, ஈஸா ஆகியோருக்கு நாம் உபதேசித்ததும் என்னவென்றால் மார்க்கத்தை (தீனை) நிலையாகக் கொள்ளுங்கள். அதில் பிரிவினை செய்து கொள்ளாதீர்கள்...' (42 அஷ்ஷூறா-13)*

மனித வரலாற்றின் எல்லாக் காலங்களிலும் இறைத் தூதர்களால் போதிக்கப்பட்ட அகீதா ஒன்றாகவே இருந்தது. ஆயினும் கால இட மாற்றங்களுக்கு ஏற்பவும் சந்தர்ப்ப

சூழ்நிலைகளைப் பொறுத்தும் ஷரீஆ (சட்ட விதிமுறை) மாற்றம் கண்டு வந்துள்ளது. எனினும் நபிமார்களுக்குப் பின் வந்த மக்கள், இறைத் தூதர்கள் போதித்த அகீதாவில் களங்கம் ஏற்படுத்தினர். இவ்வாறான சந்தர்ப்பங்களில் எல்லாம் அல்லாஹ் நபிமார்களையும் றஸூல்மார்களையும் அனுப்பி சீரான அகீதாவைப் போதித்தான்.

இதன் தொடரில் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் வழிகாட்டலுக்கு அமைய அகீதாவைப் போதித்தார்கள். அவர்கள் போதித்த அகீதா அல்குர்ஆனிலும் ஸுன்னாவிலும் அடங்கியுள்ளது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது காலத்திலும் ஸஹாபாக்கள் காலத்திலும் இஸ்லாமிய அகீதா சீரான நிலையிலேயே காணப்பட்டது. அவர்கள் அது குறித்து சர்ச்சைப்படவுமில்லை. சந்தேகம் கொள்ளவுமில்லை. பகுத்தறிவு ரீதியிலான விளக்கங்களை வழங்கவுமில்லை. இறைத் தூதர் போதித்த அகீதாவை அதன் அசல் வடிவில் அப்படியே நம்பி ஒழுகினார்கள்.

ஆயினும் இஸ்லாமிய வரலாற்றில் பிற்பட்ட காலங்களில் முஸ்லிம் சமூகத்திற்குள் உருவான அரசியல் ரீதியான உட்பூசல்கள், அந்நியர்களின் சிந்தனைகள், சமயப் பிரிவுகளுடன் ஏற்பட்ட உறவுகள், தொடர்புகள், பகுத்தறிவை எல்லை கடந்து பிரயோகிக்கும் நிலை, தீவிரப் போக்கு, மனோ இச்சைகளைப் பின்பற்றியமை, எதிரிகளின் சதி, மூடநம்பிக்கைகள் முதலான காரணிகளால் அகீதா அதன் எளிமைத்தன்மையை இழந்தது. அதன் உயிரோட்டமும் உயர்வும் மங்கின. அகீதா சார்ந்த விடயங்கள் வெறும் தத்துவ சர்ச்சைகளுக்கும் தர்க்க குதர்க்க வாதங்களுக்கும் உட்டபட்டனவாக மாற்றமடைந்தன.

உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி நடத்தையைச் சீர்செய்து தனிமனிதனையும் சமூகத்தையும் உயர் நிலைக்குக் கொண்டு செல்ல வேண்டிய அகீதா, தத்துவ விசாரணைக்குட்பட்டு வெறும் ஆய்வுப் பொருளாக மாறுகின்ற ஆபத்து தோன்றியது. இதன் விளைவாகக் காலப்போக்கில் அகீதாவை மையமாக வைத்துப் பல சிந்தனைப் பிரிவுகள் தோன்றின. இதற்கு கவாரிஜ், கதரிய்யா, ஜபரிய்யா, முஃதஸிலா, முர்ஜிய்யா முதலானவற்றை உதாரணமாகக் குறிப்பிடலாம். இவை தூய இஸ்லாமிய அகீதாவுக்கு முரணாக வழிகேடான கொள்கைகளையும் சிந்தனைகளையும் முன்வைத்தன.

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குப் பின்னர் கிலாபத்துக்குத் தகுதியானவர் யார் என்பதில் ஏற்பட்ட அரசியல் ரீதியான சர்ச்சையை அடிப்படையாகக் கொண்டு தோற்றம் பெற்ற ஷீஆக்கள் எனும் பிரிவினர் பிற்காலத்தில் முரண்பட்ட அகீதா சார் பிரிவினராக வளர்ந்தனர்.

அகீதாவுக்கு முரணான சிந்தனைகள் தோற்றம் பெற்றபோது அவற்றின் தாக்கத்திலிருந்து அகீதாவின் தூய்மையைப் பாதுகாக்க இமாம்கள் அயராது உழைத்து வந்துள்ளனர். அவர்களுள் இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல், இமாம் அபுல்ஹசன் அல்அஷ்அரீ, அபூ மன்ஸுர் அல்மாதுரீதி, அபூ ஜஃபர் அத்தஹாவி போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

முஃதஸிலா சிந்தனைக்கு எதிராகப் போராடிய இமாம் அஹ்மத் அவர்கள் ‘‘நான் உயிருடன் இருந்து இஸ்லாம் மடிவதை விட இஸ்லாம் உயிருடன் இருந்து நான் மடிவது சிறந்தது’’ என்று கூறிய வார்த்தைகள் அகீதாவின் தூய்மையைப் பாதுகாப்பதற்கு மேற்கொண்ட தியாகத்திற்குச் சான்றாய் அமைகின்றது.

தூய அகீதாவிற்கு எதிரான சிந்தனைகள் தோற்றமுறும் போதெல்லாம் அவற்றிலிருந்து முஸ்லிம் உம்மத்தைப் பாதுகாத்து இஸ்லாமிய அகீதாவின் நிழலில் வழிநடாத்தக்கூடியவர்கள் தோற்றம் பெறுவார்கள் என்பதை வரலாறு உண்மைப் படுத்துகிறது.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

المُعْتَزِلَةُ ۞ المُرْجِيَّةُ ۞ الجَبَرِيَّةُ ۞ القَدَرِيَّةُ ۞ الخَوَارِجُ ۞ الشِّيْعَةُ

**பயிற்சி**

1. அகீதா என்றால் என்ன?
2. வழிகெட்ட அகீதா சார் சிந்தனைப் பிரிவுகள் நான்கைக் குறிப்பிடுக
3. அகீதாவில் பல்வேறு சிந்தனைப் பிரிவுகள் தோற்றம் பெற்றமைக்கான காரணிகள் ஐந்து தருக.
4. அகீதாவின் தூய்மையைப் பாதுகாக்க பங்களிப்புச் செய்த இமாம்கள் நால்வரைக் குறிப்பிடுக.

# 2

# அஹ்லுஸ் ஸுன்னா வல்ஜமாஆ

إنَّ بَنِيْ إِسْرائيلَ قَدِ افْتَرَقُوا علي إِحْدَى وسَبْعِينَ فِرْقَةً وَتفْتَرِقُ أُمَّتِي على ثَلَاثٍ وَسَبْعِيْنَ فِرْقَةً كُلُّهَا فِي النَّارِ إلَّا وَاحِدَةً فَقِيْلَ: مَا الْوَاحِدَةُ؟ قَالَ مَا أنَا عَلَيْهِ الْيَوْمَ وَأَصْحَابِيْ – ابن ماجه

பனூ இஸ்ரவேலர்கள் எழுபத்தொரு பிரிவுகளாக பிரிந்தனர். எனது சமுதாயம் எழுபத்து மூன்று பிரிவுகளாகப் பிரிந்து விடுவர். அனைத்துப் பிரிவுகளும் நரகம் செல்லும் ஒன்றைத் தவிர. எனக் குறிப்பிட்டார்கள். அந்த ஒன்று எது எனக் கேட்கப்பட்ட போது நானும் எனது தோழர்களும் இன்று உள்ளது போன்று இருப்பவர்கள் எனக் குறிப்பிட்டார்கள். (இப்னு மாஜஹ்)

''அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ'' என்ற சொற்பிரயோகம் முஸ்லிம் சமூகத்தில் ஸஹாபாக்கள்காலம் முதல் இன்று வரை பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஸுன்னா என்ற பதம் வழிமுறை என்ற பொருளையும் ஜமாஆ என்ற பதம் பெருந்தொகையானோர் எனும் பொருளையும் தருகின்றன.

இஸ்லாமிய வழக்கில், அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அவர்களது தோழர்களும் கொண்டிருந்த நம்பிக்கையின் அடிப்படையில் வாழ்ந்த முறையைப் பின்பற்றுவோரையே குறிக்கிறது. இதனை ஹதீஸ்களும் உறுதிப்படுத்துகின்றன.

சுவனம் செல்வோர் ''நானும் எனது தோழர்களும் இருந்த வழியில் இருப்பவர்கள்'' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பட்டார்கள். இது அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆவையே சுட்டி நிற்கின்றது.

## அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ அகீதாவின் சாராம்சம்.

### *1. அல்லாஹ்*

*அல்லாஹ் அனைத்தினதும் படைப்பாளன், அவனுக்கு ஆரம்பமோ இறுதியோ இல்லை, எல்லாவற்றின் மீதும் சக்தி உள்ளவன், பரிபூரணமானவன், அனைத்தையும் அறிந்தவன், நித்திய ஜீவன், கேட்பவன், பார்ப்பவன், வணக்கத்துக்குரியவன், தேவைகளற்றவன், தனித்தவன், நிகரற்றவன், அவன் எதிலும் குடிகொள்வதில்லை, எவற்றுடனும் இணைவதுமில்லை, சங்கமமாவதுமில்லை, அவன் நாடியதே நடக்கும், நாடாதது நடக்காது, அவன் மட்டுமே ரிஸ்க்கை வழங்குபவன், நோயைக் குணப்படுத்துபவன், துன்பங்களை நீக்குபவன், முஃமீன்கள் மறுமையில் அவனைக் காணும் பேற்றை பெறுவர், அவன் ஒன்றை நாடினால் 'குன்' ஆகுக என்ற கட்டளை போதுமானது அது ஆகிவிடும்.*

### *2. மலக்குகள்*

*அல்லாஹ் மலக்குகளை ஒளியால் படைத்துள்ளான். அவர்களின் எண்ணிக்கையை அல்லாஹ் மட்டுமே அறிவான். அவர்கள் பல்வேறு பணிகளில் ஈடுபட்டு வருகின்றனர். அவர்களுள் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் முதன்மையானவராவார். அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைப்படி அடியார்களின் நலன்களைக் கவனித்துவருகின்றனர். அல்லாஹ்வின் படைப்புக்களில் ஷைத்தான்களும் ஜின்களும் அடங்குகின்றனர்.*

### *3. அல்குர்ஆன்*

*அல்குர்ஆன் அல்லாஹ்வின் கலாமாகும். அதற்கு முன்னரும் பல வேதங்களை அவன் அருளி மனித சமூகத்திற்கு வழிகாட்டினான். இறுதி வேதமாக அல்குர்ஆன் அருளப்பட்ட பின்னர் அவை செல்லுபடியற்றவையாகியுள்ளன. அல்குர்ஆன் அருளப்பட்டது முதல் இன்று வரை பாதுகாக்கப்பட்டு வருகின்றது. அதன் பாதுகாப்புக்கு அல்லாஹ்வே உத்தரவாதமளித்துள்ளான்.*

### *4. ரிஸாலத்*

*மனித சமுதாயத்துக்கு வழிகாட்டுவதற்காகக் காலத்துக்குக் காலம் நபிமார்கள் றஸூல்மார்கள் அனுப்பப்பட்டமை உண்மையானது. இவர்கள் மூலம் அடியார்களுக்குப் பல ஏவல்களையும் விலக்கல்களையும் அல்லாஹ் வழங்கியுள்ளான். இவர்களுக்கு முஃஜிஸாத் எனும் அற்புதம் வழங்கப்பட்டது. இஸ்மத் எனும் பண்பைப் பெற்று பாவங்கள் பிழைகள் செய்வதிலிருந்து பாதுகாப்புப் பெற்றுள்ளனர். இவர்கள் அனைவரையும் எத்தகைய வேறுபாடும் பாகுபாடுமின்றி விசுவாசிக்க வேண்டும். முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை இறுதி நபியாக ஏற்றுச் செயற்பட வேண்டும். அவர்களோடு ரிஸாலத் முற்றுப் பெற்றுவிட்டது. இதன் பின்னர் எந்த ஒரு நபியோ றஸூலோ வரமாட்டார்.*

**5. மறுமை**

மரணத்தின் பின்னர் ஒரு வாழ்வுண்டு. அது மண்ணறையிலிருந்தே ஆரம்பிக்கின்றது. கப்ரில் விசாரணையும் இன்ப துன்பமும் உண்மையானவை. மறுமையிலும் விசாரணை உண்டு. ஸிறாத், மீஸான், சுவனம் நரகம் உண்மையானவை. அவை நிலையானவை. அவை படைக்கப்பட்டுள்ளன.

மறுமையில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் ஏனைய நபிமார்களுக்கும் மலக்குகளுக்கும் நல்லடியார்களுக்கும் ஷபாஅத் செய்ய முடியும். அல்லாஹ்வின் அனுமதிப்படியே அது இடம்பெறும்.

**6. ஸஹாபாக்கள்**

நபித் தோழர்களான இவர்கள் முஃமின்களில் உயர்ந்தவர்கள். நபிமார்களுக்கு அடுத்த நிலையில் உயர் ஸ்தானத்தில் இருப்பவர்கள். இவர்களுள் சுவனத்தைக் கொண்டு சுபசெய்தி கூறப்பட்ட பல நபித் தோழர்கள் உள்ளனர். அஹ்லுல் பைத் எனும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனைவிகளான உம்மஹாதுல் முஃமின்களையும், கௌரவப்படுத்துவதும் அவர்கள் மீது அன்பு கொள்வதும் அவசியமானவை. ஸஹாபாக்கள் அனைவரும் நம்பிக்கையும் நாணயமும் உடையவர்கள். அவர்களைக் குறைகாண்பதும் விமர்சிப்பதும் பாவமாகும்.

**7. பாவம்**

பெரும்பாவத்தில் ஈடுபட்ட முஸ்லிம் பாவியாவான். ஆனால் காபிரல்ல. அவன் நரகம் நுழைந்தாலும் நிரந்தரமாக அங்கு தங்கமாட்டான். பாவங்கள் செய்த முஃமினை அல்லாஹ் நாடினால் மன்னித்து சுவனம் நுழைவிப்பான். நாடினால் தண்டித்துப் பின்னர் சுவனம் நுழைவிப்பான். குப்ரையோ ஷிர்க்கையோ உண்டாக்கும் கருமத்தில் ஈடுபடாத நிலையில் ஒரு முஸ்லிமை காபிர் என்பது பெரும் குற்றமாகும். ஒரு பாவத்தை ஒரு பாவமல்ல என்று கருதுவது, ஹராமை ஹராமல்ல என்று கருதுவது, ஷரீஅத்தைப் பரிகாசம் செய்வது போன்றன குப்ரை ஏற்படுத்துகின்றன. ஷபாஅத் என்பது உண்டு. அதற்கு தகுதி பெற்றோர் தத்தமது தகைமைக்கேற்ப சிபாரிசு செய்ய முடியும்.

**8. வலிமார்கள்**

இறை நேசர்கள் வலிமார்கள் எனப்படுவர். அல்லாஹ்வுடனான அவர்களது நெருக்கத்திற்கேற்ப அவன் நாடியவர்களுக்கு விசேட அந்தஸ்ததை வழங்குகின்றான். இவர்களுக்கு கராமத் என்ற ஒன்றையும் அல்லாஹ் வழங்கியுள்ளான். அடியார்களில் எவரும் அவர் எத்தகைய ஆன்மீக தரத்தை அடைந்த போதிலும் அடிப்படைச் சன்மார்க்கக் கடமைகளில் இருந்து விதி விலக்களிக்கப்படமாட்டார்.

அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஆ அகீதாவின் அடிப்படையான சில அம்சங்களைச் சுருக்கமாக நோக்கினோம். இவை தவிர்ந்த இன்னும் பல அம்ச ங்களும் காணப்படுகின்றன. அவை அனைத்தையும் விளங்கி வாழ்வில் கடைபிடித்து ஒழுகுவதன் மூலமே ஈருலகிலும் வெற்றியடைய முடியும்.

### பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்

❁ أَهْلُ السُّنَّة والجَمَاعَةِ ❁ السَلَفُ الصّالِحُ ❁ الْكُفْرُ ❁ النِّفَاقُ ❁ العَمَلُ
❁ الكَافِرُ ❁ الأشْعَرِيَّةُ ❁ المَاتْرُودِيَّةُ ❁ الشَّفَاعَةُ ❁ الكَرَامَاتُ ❁ العَقِيْدَةُ

**பயிற்சி**

*(அ) அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ எனப்படுவோர் யாவர்? சுருக்கமாக விளக்குக.*

*(ஆ) பின்வருவன தொடர்பாக அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆவின் நிலைப்பாட்டை சுருக்கமாக விளக்குக.*

*1. மலக்குகள்*

*2. ரிஸாலத்*

*3. பாவம்*

*4. வலிமார்கள்*

# 3

# அத் - தவ்ஹீத்
# التَّوْحِيْدُ

وَمَآ أَرْسَلْنَا مِنْ قَبْلِكَ مِنْ رَّسُوْلٍ إِلاَّ نُوْحِيْٓ إِلَيْهِ أَنَّه لَآ إِلٰهَ إِلاَّ أَنَا فَاعْبُدُوْنِ

''(நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பிய ஒவ்வொரு தூதரிடமும் 'நிச்சயமாக (வணக்கத்திற்குரிய) நாயன் என்னைத் தவிர வேறு எவருமில்லை எனவே, என்னையே நீங்கள் வணங்குங்கள்' என்று நாம் வஹீ அறிவிக்காமலில்லை'' (21 அல் அன்பியா : 25)

ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முதல் இறுதித்தூதர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வரையிலான அனைத்து இறைத் தூதர்களும் உலகில் முன்வைத்த பிரதான செய்தியாக தவ்ஹீத் காணப்படுகிறது.

தவ்ஹீத் எனும் சொல் ''வஹத'' எனும் வேர்ச்சொல்லில் இருந்து பிறந்துள்ளது. ''வாஹித்'' என்ற பதத்துக்கு ஒருவன், ஒன்று ஆகிய கருத்துக்கள் உண்டு. வஹ்ஹத என்ற வினைச்சொல்லிலிருந்து ''தவ்ஹீத்'' எனும் பதம் பெறப்பட்டுள்ளது. இதற்கு தனிமைப்படுத்தல், ஒற்றையாக்குதல், ஓர்மைப்படுத்தல் போன்ற கருத்துக்கள் காணப்படுகின்றன. இவ்வகையில்தான ஓரிறைக் கொள்கையைக் குறிக்கவும் இச் சொல் பயன்படுத்தப்படுகிறது.

இஸ்லாமிய வழக்கில் அல்லாஹ்வை மாத்திரமே ஏக இறைவனாக ஏற்று, அவனுக்கு வழிப்படுவதைக் குறிக்கவே இச்சொல் பயன்படுத்தப்படுகிறது.

தவ்ஹீத் என்பதன் கருத்தைப் பின்வருமாறு விளக்கலாம்.

## 1. அல்லாஹ்வே அனைத்தினதும் படைப்பாளன்

அவனே அனைத்துக்கும் சொந்தக்காரன், தேவையான அனைத்து வசதிகளையும் செய்பவன்; இப்பிரபஞ்சத்தை நிர்வகிப்பவன் என விசுவாசம் கொள்வது அவசியமாகும். இக்கருத்தைப் பின்வரும் அல்குர்ஆன் வசனங்கள் தெளிவுபடுத்துகின்றன.

*''அல்லாஹ்தான் அனைத்துப் பொருட்களையும் படைத்தவன்; இன்னும், அவனே எல்லாப் பொருட்களின் பாதுகாவலனுமாவான். ''வானங்களினுடையவும், பூமியினுடையவும் சாவிகள் அவனிடமே இருக்கின்றன.'' (39 அஸ்ஸுமர் :62-63)*

*''அவன் தான் உங்கள் அல்லாஹ் - உங்கள் இறைவன் - எல்லாப் பொருட் களையும் படைப்பவன் - அவனைத் தவிர வேறு நாயனில்லை எனவே நீங்கள் (சத்தியத்தை விட்டும்) எங்கு திருப்பப்படுகிறீர்கள்?'' (40 அல் முஃமின் :62)*

*''எல்லாப் பொருட்களின் ஆட்சியும் யார் கையில் இருக்கிறது? யார் எல்லா வற்றையும் பாதுகாப்பவனாகவும் ஆனால் அவனுக்கு எதிராக எவரும் பாதுகாக்கப்பட முடியாதோ அவன் யார்? நீங்கள் அறிவீர்களாயின் (சொல்லுங்கள்)' என்று கேட்பீராக. அதற்கவர்கள் '(இது) அல்லாஹ்வுக்கே (உரியது)' என்று கூறுவார்கள். ('உண்மை தெரிந் தும்) நீங்கள் ஏன் மதி மயங்குகிறீர்கள்?' என்று கேட்பீராக.'' (23 அல் முஃமினூன் :88-89)*

## 2. அல்லாஹ் மட்டுமே வணக்கத்துக்குரியவன்

*''(நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பிய ஒவ்வொரு தூதரிடமும் நிச்சயமாக (வணக்கத்திற்குரிய) நாயன் என்னைத் தவிர வேறு எவருமில்லை எனவே, என்னையே நீங்கள் வணங்குங்கள்' என்று நாம் வஹீ அறிவிக்காமலில்லை'' (21 அல் அன்பியா :25)*

## 3. அல்லாஹ் பரிபூரணமானவன்; எவ்வித குறைகளும் அற்றவன்

*''(நபியே!) நீர் கூறுவீராக அல்லாஹ் அவன் ஒருவனே. அல்லாஹ் (எவரிடத்தும்) தேவையற்றவன். அவன் (எவரையும்) பெறவுமில்லை (எவராலும்) பெறப்படவுமில்லை. அன்றியும், அவனுக்கு நிகராக ஒன்றும் இல்லை'' (112 அல் இஹ்லாஸ் :1-4)*

*''அவனைப் போன்று எப்பொருளும் இல்லை. அவன் தான் (யாவற்றையும்) செவியேற்பவன், பார்ப்பவன்'' (42 அஷ் ஸூரா :11)*

சுருங்கக்கூறின், தவ்ஹீத் அல்லாஹ்வை மாத்திரமே வணங்கி வழிபடுமாறு அறைகூவல் விடுக்கின்றது. அல்லாஹ்வே அனைத்தினதும் படைப்பாளன். நிர்வகிப்பவன். எதுவித குறைகளும் அற்றவன். பரிபூரணமானவன் என்பன இதற்கான நியாயங்களாகும்.

இஸ்லாமிய நோக்கில் தவ்ஹீத் மிக முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். இதனைக் கீழ்வரும் ஆதாரங்கள் உறுதிப்படுத்துகின்றன.

1. இறைத்தூதர்கள் அனைவருமே தவ்ஹீதை ஏற்று வாழுமாறு மக்களை நோக்கி அழைப்பு விடுத்ததாக அல்குர்ஆன் குறிப்பிட்டுள்ளமை.
2. அல்குர்ஆனில் தவ்ஹீதை வலியுறுத்தும் விதத்தில் தனி ஸூரா உட்பட அநேக வசனங்கள் இடம்பெறுகின்றமை.
3. நற்செயல்கள் அங்கீகரிக்கப்பட தவ்ஹீத் இன்றியமையாத நிபந்தனையாக ஆக்கப்பட்டுள்ளமை.

''அன்றியும், உமக்கும், உமக்கு முன் இருந்தவர்களுக்கும், வஹீ மூலம் நிச்சயமாக அறிவிக்கப்பட்டது என்னவென்றால், 'நீர் (இறைவனுக்கு) இணை வைத்தால், உமது நன்மைகள் (யாவும்) அழிந்து, நஷ்டமடைபவர்களுள் ஒருவராகி விடுவீர்' (என்பதுவேயாகும்)'' *(39 அஸ் ஸுமர் :65)*

### 4. தவ்ஹீதை ஏற்காதவர்களுக்கு சுவனம் ஹராமாக்கப்பட்டுள்ளமை:

''எனவே எவனொருவன் அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பானோ அவனுக்கு அல்லாஹ் சுவனபதியை நிச்சயமாக ஹராமாக்கிவிட்டான், மேலும் அவன் ஒதுங்குமிடம் நரகமேயாகும், அக்கிரமக்காரர்களுக்கு உதவிபுரிபவர் எவருமில்லை.'' *(5 அல் மாஇதா :72)*

எனவே இந்த வகையில் இஸ்லத்தின் அடிப்படையிலான தவ்ஹீதை சரிவரப் புரிந்துகொள்வது அத்தியாவசியமான ஒன்று என ஏற்று அல்லாஹ்வுக்கு முற்றிலும் வழிபட்டு நடப்போமாக.

**பயிற்சி**

1. வாஹித் என்ற பதத்தின் பொருள் யாது?
2. அல்லாஹ்வே இவ்வுலகின் படைப்பாளன் என்ற கருத்தைச் சுட்டும் இரு அல்குர்ஆன் வசனங்களைத் தருக.
3. தவ்ஹீதின் முக்கியத்துவத்தை ஓர் அல்குர்ஆன் வசனத்தின் துணையுடன் விளக்குக.

# 4

# ஈமானைப் பாதிக்கும் அம்சங்கள்

إِنَّ اللّٰهَ لَا يَغْفِرُ أَنْ يُّشْرَكَ بِهِ وَيَغْفِرُ مَا دُوْنَ ذٰ لِكَ لِمَنْ يَّشَآءُ

''நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை வைப்பதை மன்னிக்கவே மாட்டான்;. இது அல்லாத (பாவத்)தைத் தான் நாடியவருக்கு மன்னிப்பான்...'' (4 அன் நிஸா :48)

ஒரு முஸ்லிம் ஈமானை மிகப்பெரும் அருளாகக் கருதுகிறான்; அவ்வருளை அடிப்படையாகக் கொண்டே அவனது வாழ்வை அமைத்துக் கொள்கிறான். அவ்வருளைப் பாதுகாக்க அவன் எதனையும் இழக்கத் தயங்குவதுமில்லை.

ஒரு முஸ்லிமிடம் உள்ள இத்தகைய பெருமதிப்பு வாய்ந்த ஈமானை அவன் பாதுகாத்துக் கொள்வதற்கு அதனைக் களங்கப்படுத்தும் அம்சங்கள் பற்றிய அறிவும் அவனுக்கு அவசியப்படுகிறது. அந்த வகையில் ஈமானைப் பாதிக்கும் சில அம்சங்கள் பற்றிக் கீழே விளக்கப்படுகிறது.

1. இல்ஹாத்
2. குப்ர்
3. ஷிர்க்
4. ரித்தத்

## இல்ஹாத்

இல்ஹாத் எனும் பதம் நாத்திகத்தைக் குறிக்கப் பயன்படுகிறது. உலகில் சமயங்களை ஒழிப்பதே நாத்திகத்தின் பிரதான இலக்காக அமைந்துள்ளது. இறைவன் இல்லை என நிராகரிக்கும் நாத்திகம் அதன் மூலம் இறை வழிகாட்டலையும்

இறைத்தூதர்களையும் நிராகரிக்கிறது. நாத்திகப் போக்குக் கொண்டோர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது காலத்திலும் இருந்துள்ளனர் என்பதற்கு அல்குர்ஆன் சான்றாகும்.

''மேலும் (மறுமையை நம்பாத) அவர்கள் '' நமது இந்த உலக வாழ்க்கையைத் தவிர வேறு வாழ்க்கை கிடையாது; நாம் இறக்கிறோம் ஜீவிக்கிறோம். காலம் தவிர வேறெதுவும் நம்மை அழிப்பதில்லை'' என்று கூறுகிறார்கள். அவர்களுக்கு அதுபற்றிய அறிவு கிடையாது. அவர்கள் (இதுபற்றிக் கற்பனையாக) எண்ணுவதைத் தவிர வேறில்லை'' *(45 அல் ஜாஸியா :24)*

இறைவனையும் மறுமையையும் நிராகரிக்கின்ற சில மனிதர்கள் அச்சமூகத்தில் இருந்துள்ளனர் என்பதை இவ்வசனத்திலிருந்து புரிய முடிகிறது.

நாத்திகம் மனித இயல்புக்கு முரணானது. உலகில் எல்லாக் காலங்களிலும் மனிதர்கள் சமயத்தைப் பின்பற்றி வாழ்ந்துள்ளனர். மனித வரலாற்றில் சமயமில்லாத சமூகங்கள் இருந்ததில்லை என்ற வரலாற்று உண்மை இறை நம்பிக்கையுடன் வாழ்வதே மனித இயல்பு என்பதை உறுதி செய்கிறது.

நாத்திகம் மனித இயல்புக்கு மாத்திரமன்றி பகுத்தறிவுக்கும் முரணானதாகும். இறைவனை ஏற்று வாழும் மனிதர்களின் ஆதாரங்களுக்கு முன்னால் அவர்களால் ஈடுகொடுக்க முடியாது. மனித சமூகத்துக்கே அச்சுறுத்தலாக அமைந்துள்ள நாத்திகத்திலிருந்து உலகைக் காத்தல் மனித சமூகம் ஆற்ற வேண்டிய அவசரமான, அவசியமான ஒரு கடமையாகும்.

## குப்ர்

மொழியில் ''குப்ர்'' என்ற பதம் மறைத்தல், மூடுதல் போன்ற கருத்துக்களில் கையாளப்படுகிறது. இஸ்லாமிய வழக்கில் இஸ்லாத்தின் நம்பிக்கைகளையும் திட்டவட்டமாக அறியப்பட்ட அதன் செயன்முறைகளையும் நிராகரிப்பதைக் குறிக்க இப்பதம் பயன்படுகிறது.

**குப்ர் ஏற்படும் வழிமுறைகளை மூன்றாக வகுக்கலாம்:**

1) ***நம்பிக்கை சார்ந்தவை:*** அல்லாஹ்வை நம்பாதிருத்தல், நபிமார்களை நம்பாதிருத்தல், சுவனத்தையும் நரகத்தையும் நம்பாதிருத்தல், தொழுகை கடமை என நம்பாதிருத்தல் போன்றன இதற்கான சில உதாரணங்களாகும்.

2) ***சொல் சார்ந்தவை:*** அல்லாஹ்வைத் தூற்றுதல், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தூற்றுதல், மார்க்கக் கடமைகளைப் பரிகசித்தல் போன்றன இதற்கான சில உதாரணங்களாகும்.

3) ***செயல் சார்ந்தவை:*** இழிவுபடுத்தும் நோக்கில் அல்குர்ஆனைக் கிழித்தல் அல்லது அதனைக் குப்பைத்தொட்டியில் இடுதல், படைப்புக்களை வணங்குதல் செய்தல் போன்ற தொழிற்பாடுகளை உதாரணமாக இங்கு குறிப்பிடலாம்.

குப்ரின் அபாயத்தை விளங்கிக்கொள்ள இரண்டு அல்குர்ஆன் வசனங்களை உதாரணமாகத் தருகிறோம்.

*''எவர்கள் நிராகரித்து, நிராகரிக்கும் நிலையிலேயே இறந்தும்விட்டார்களோ, அவர்களில் எவனிடமேனும் பூமி நிறைய தங்கத்தைத் தன் மீட்சிக்கு ஈடாகக் கொடுத்தாலும் (அதனை) அவனிடமிருந்து ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது. அத்தகையோருக்கு நோவினைமிக்க வேதனை உண்டு. இன்னும் அவர்களுக்கு உதவி செய்வோர் எவரும் இருக்க மாட்டார்கள்.''(3 ஆல இம்ரான் :91)*

*''அன்றியும், எவர்கள் காஃபிராக இருக்கிறார்களோ, அவர்களுடைய செயல்கள் பாலைவனத்தில் (தோற்றமளிக்கும்) கானல்நீரைப் போலாகும். தாகித்தவன் அதைத் தண்ணீரென்றே எண்ணுகிறான் - (எதுவரையெனில்) அதற்கு (அருகில்) அவன் வரும்பொழுது ஒரு பொருளையும் (அங்கே) காணமாட்டானே (அதுவரை) ஆனால், அங்கு அவன் அல்லாஹ் (அவனுக்கு விதித்திருக்கும் முடி)வை(யே) காண்கின்றான். (அதன்படி அல்லாஹ்) அவன் கணக்கைத் தீர்க்கிறான். மேலும், அல்லாஹ் கணக்குத் தீர்ப்பதில் துரிதமானவன்.'' (24 அன் நூர் :39)*

நற்செயல்களுக்கான நன்மையைத் தடுத்து நிரந்தர நரகத்திற்கு இட்டுச்செல்லும். குப்ரையிட்டு எப்போதும் எச்சரிக்கையாக இருந்து சுபீட்சமான வாழ்வுக்கு வழி யமைப்போம்.

## ஷிர்க்

ஷிர்க் என்ற இப்பதமானது மொழி வழக்கில் இணையாக்குதல், கூட்டுச் சேர்த்தல் போன்ற கருத்துக்களில் கையாளப்படுகின்றது. இஸ்லாமிய வழக்கில் அல்லாஹ்வின் தெய்வீகத் தன்மையில் எவருக்கேனும் எச்சக்திக்கேனும் பங்குண்டு என நம்புதல் அல்லது அத்தகைய நம்பிக்கையைப் பிரதிபலிக்கும் வகையில் எச்செயலையேனும் செய்தலே ஷிர்க் எனப்படுகிறது.

ஷிர்க் பிரதானமாக இரு பிரிவுகளாகப் பிரித்து நோக்கப்படுகின்றது.

### ஷிர்க்குல் அக்பர் (பெரிய ஷிர்க்):

அல்லாஹ்வுக்காக மாத்திரம் செய்யப்பட வேண்டிய கிரியைகளையும் வழிபாடு களையும் அல்லாஹ் அல்லாதவற்றுக்காகச் செய்தல் ஷிர்க்குல் அக்பர் எனப்படுகின்றது. பெரிய ஷிர்க்கில் ஈடுபடும் ஒருவரது நற்செயல்கள் அவருக்குப் பயனளிக்கப் போவதில்லை.

*''உமக்கும் உமக்கு முன் வாழ்ந்து சென்ற அனைத்து நபிமார்களுக்கும் இவ்வாறு வஹி அனுப்பப்பட்டுள்ளது. நீர் இறைவனுக்கு இணைவைத்தால், உம்முடைய செயல் வீணாகிப் போய்விடும். நீர் நிச்சயமாக அல்லாஹ்வுக்கு மட்டும் அடிபணிவீராக! மேலும் நன்றி செலுத்தும் அடியார்களுடன் ஆகிவிடுவீராக!'' (39 அஸ்ஸுமர் 66)*

தவ்பா இன்றி மன்னிக்கப்படாத ஒரேயொரு பெரும் பாவமாக ஷிர்க் அமைந்துள்ளது.

*''நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை வைப்பதை மன்னிக்கவே மாட்டான்;. இது அல்லாத (பாவத்)தைத் தான் நாடியவருக்கு மன்னிப்பான்.'' (4 அன் நிஸா :48)*

*ஷிர்க்குல் அஸ்கர் (சிறிய ஷிர்க்):*

பாவங்களில் பெரிய ஷிர்க்குக்கு அடுத்த இடத்தை வகிப்பது சிறிய ஷிர்க்தான். எனவே, இது பெரும் பாவங்களைப் போல மோசமானது என்பது மறுக்கப்படலாகாது. அல்லாஹ் அல்லாதவற்றின் மீது சத்தியம் செய்தல், வசியம் செய்தல், சாஸ்திரம் பார்த்தல் போன்றன இதற்கான சில உதாரணங்களாகும்.

அல்லாஹ்வைக் களங்கப்படுத்தும் ஷிர்க்கிலிருந்து விலகியிருப்பதே சுவனப் பாதையில் பயணிப்பவர்களுக்கு உரிய பண்பாக அமைந்திருக்கும்.

## ரித்தத்

மொழியில் 'ரித்தத்' என்ற சொல் பழைய நிலைக்கு மீளல், திரும்பிவிடுதல் பின்னோக்கிச் செல்லல் போன்ற கருத்துக்களில் கையாளப்படுகிறது. இஸ்லாமிய வழக்கில் ஒரு முஸ்லிம் தன்னைக் காபிராக்கக் கூடிய வார்த்தையை மொழிவதன் மூலம் அல்லது செயலைச் செய்வதன் மூலம் இஸ்லாத்தை விட்டு நீங்கி விடுவதைக் குறிக்க இப்பதம் கையாளப்படுகின்றது. சுருங்கக் கூறின், ஒரு முஸ்லிம் மதம் மாறுவதை ரித்தத் என்போம். இவ்வாறு மதம் மாறியவர் முர்தத் எனப்படுவார்.

முர்தத்துடன் முஸ்லிம் சமூகம் தமது தொடர்புகளைத் துண்டித்துக் கொள்ளும். அவரது மனைவி அவரை விட்டும் பிரிந்து விடுவார். அவரது சொத்துக்கள் அவரது கடன்களை அடைக்கவும் குடும்பத்தைப் பராமரிக்கவும் பயன்படுத்தப்படும். அவரது சொத்து வாரிசுகளுக்கு வழங்கப்படமாட்டாது. அவர் உறவினர்களிடம் இருந்து வாரிசுச் சொத்தைப் பெறவும் அருகதை அற்றவர். தவ்பா செய்யாத நிலையில் இவர் மரணித்தால் இவருக்காக தொழுகை நடத்தப்பட மாட்டாது. முஸ்லிம் மையவாடியில் இவர் அடக்கம் செய்யப்படவும் மாட்டார். முஸ்லிம் சமூகம் இவரை ஒரு சமயத் துரோகி போன்றே கருதும்.

மனிதனின் ஈருலக வெற்றிக்குக் கலப்பற்ற ஈமான் இருப்பது அவசியம். மனதில் அல்லாஹ் பற்றி ஏற்படும் சந்தேகங்கள் கூட ஈமானைப் பாதிக்கும் என்பதைக் கவனத்திற்கொள்ளல் வேண்டும். இஹ்லாஸான ஈமானுடன் வாழ்வை அமைத்து அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுவதே எமது வாழ்வின் இலக்காக அமைய வேண்டும்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❖ الإِلْحَادُ ❖ الكُفْرُ ❖ الشِرْكُ ❖ الرِدَّةُ ❖ الشِّرْكُ الأَكْبَرُ ❖ الشِّرْكُ الأَصْغَرُ
❖ الإخلاص

**பயிற்சி**

*1. ஷிர்க் பற்றிக் கூறப்படும் அல்குர்ஆன் வசனமொன்றைத் தருக.*

*2. ஷிர்க்கின் வகைகளை உதாரணங்களுடன் தருக.*

*3. குப்ர் என்றால் என்ன? அதன் வகைகள் எவை?*

*4. முர்தத் என்றால் யார்? தவ்பா செய்து மீளாத பட்சத்தில் அவர் எவ்வாறு நடத்தப்படுவார்?*

*5. இல்ஹாத் என்றால் என்ன? சுருக்கமாக விளக்குக.*

# 5

# இறுதி நபித்துவம்

مَا كَانَ مُحَمَّدٌ أَبَآ أَحَدٍ مِّنْ رِّجَالِكُمْ وَلٰكِنْ رَّسُوْلَ اللهِ وَخَاتَمَ النَّبِيّٖنَ
وَكَانَ اللّٰهُ بِكُلِّ شَىْءٍ عَلِيْمًا

''உங்களில் எந்த ஒரு ஆணுக்கும் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தந்தையாக இல்லை. என்றாலும் அவர் அல்லாஹ்வின் தூதராகவும் நபிமார்களில் இறுதியானவராகவும் உள்ளார். அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான்'' ( 33 அல் அஹ்ஸாப் :40 )

உலக மக்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக அல்லாஹ் காலத்துக்குக் காலம் அனுப்பிய நபிமார்களையும் றஸூல்மார்களையும் விசுவாசம் கொள்வது ஈமானின் மிகமுக்கிய அம்சமாகும். இது பற்றி நீங்கள் ஏற்கனவே படித்துள்ளீர்கள். அந்நபிமார்களுள் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதியானவர் என்பதும் அவருக்குப் பின் நபியொருவர் வரமாட்டார் என்பதும் இஸ்லாத்தின் நிலைப்பாடாகும். இதை நிராகரிப்பது குப்ராகும். இதனை அல் குர்ஆனும் ஹதீஸும் உறுதிப்படுத்துகின்றன.

## இறுதி நபித்துவத்திற்கான அல்குர்ஆன் ஆதாரங்கள்

*1. ''உங்களில் எந்த ஓர் ஆணுக்கும் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தந்தையாக இல்லை. என்றாலும், அவர் அல்லாஹ்வின் தூதராகவும் நபிமார்களில் இறுதியானவராகவும் உள்ளார்'' ( 33 அல் அஹ்ஸாப் :40 )*

''இவ்வசனம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் இன்னொரு நபி இல்லை என்பதற்குத் தெளிவான ஆதாரமாகும். அவருக்குப் பின் இன்னொரு நபி இல்லை என்றால் இன்னொரு றஸூலும் இல்லை என்பது மேலும் உறுதியாகின்றது. ஏனெனில் ரிஸாலத்தின் அந்தஸ்து நபித்துவத்தின் அந்தஸ்திலும் பார்க்க விசேடமானதாகும். அனைத்து றஸூல்மார்களும் நபிமார்களாவர்.

ஆனால் அனைத்து நபிமார்களும் றஸூல்மார்களல்லர் என்பது கவனத்திற் கொள்ளத்தக்கதாகும்.

*2. ''...எனக்குப் பின்னால் வரும் அஹ்மத் என்ற பெயரையுடைய றஸூல் ஒருவரின் வருகை குறித்து நன்மாராயம் கூறுபவனாகவும் நான் உள்ளேன்..'' ( 61 அஸ் ஸஃப்பு : 6 )*

இது ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தனது சமுதாயத்துக்கு முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறித்து எத்தி வைத்த செய்தியாகும். இவ்வாறே, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே இறுதி நபி என்பதை மற்றும் பல நபிமார்களும் தமது சமுதாயங்களுக்கு முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.

*3. ''...இன்று உங்களது மார்க்கத்தை உங்களுக்காகப் பூர்த்தியாக்கிவிட்டேன். எனது அருள்களையும் உங்கள் மீது முழுமைப்படுத்திவிட்டேன். இஸ்லாத்தை உங்கள் மார்க்கமாக அங்கீகரித்துவிட்டேன்...'' ( 5 அல் மாஇதா: 3 )*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்துக்கு சிலநாட்களுக்குமுன் அருளப்பட்ட இவ் வசனம் குறித்து இமாம் இப்னு கஸீர் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் இவ்வாறு கூறுகிறார்கள்.

'' இது இந்த சமுதாயத்தின் மீது அல்லாஹ் புரிந்த மிகப் பெரிய அருளாகும். அவர்களுக்கு அவர்களது மார்க்கத்தைப் பூர்த்தியாக்கிவிட்டான்.''

எனவே இன்னொரு மார்க்கம் அவர்களுக்குத் தேவைப்படாது. அவ்வாறே இன்னொரு றஸூலும் அவர்களுக்குத் தேவைப்படமாட்டார். ஏனெனில் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அல்லாஹ் இறுதி நபியாகவும் மனித, ஜின் வர்க்கம் இரண்டிற்கும் பொதுவான நபியாகவும் அனுப்பிவைத்தான்.''

## இறுதி நபித்துவத்திற்கான ஹதீஸ் ஆதாரங்கள்

1. ''எனக்கும் ஏனைய நபிமார்களுக்கும் இடையில் உள்ள தொடர்புக்கு உதாரணம் ஒருமனிதர் ஒருவீட்டைக் கட்டிமுடிக்கின்றார். அவ்வீட்டிற்குச் சென்றவர்கள் அதைப் பார்த்து அதிசயித்தனர். ஆனாலும் அங்கே பூர்த்தியாக்காது விடப்பட்டிருந்த சிறிய இடைவெளியைப் பற்றிக் குறை கூறினர். ஆம் (இஸ்லாம் எனும் கட்டிடத்தின்) பூர்த்தியாக்காது விடப்பட்டிருந்த அவ்விடத்தைப் பூர்த்தியாக்க வந்தவன்தான் நான். என்னைக் கொண்டு நபித் தொடர் முற்றுப் பெற்றுவிட்டது.'' (புஹாரி, முஸ்லிம்)

2. ''நான் ஏனைய நபிமார்களைவிட ஆறு விடயங்களைக் கொண்டு சிறப்பாக்கப்பட்டுள்ளேன். எனக்கு 'ஜவாமிஉல் கலிம்' எனும் நாவன்மை வழங்கப்பட்டுள்ளது. மதிப்பச்சம் மூலம் உதவி செய்யப்பட்டுள்ளேன். கனீமத் ஹலாலாக்கப்பட்டுள்ளது. முழுப் பூமியும் எனக்கு மஸ்ஜிதாகவும் பரிசுத்தமாகவும் ஆக்கப்பட்டுள்ளது. முழு உலகிற்கும் நான் நபியாக

அனுப்பப்பட்டுள்ளேன். என்னைக் கொண்டு நபிமார்களின் வருகை முற்றுப்பெறுகிறது.'' (திர்மிதி, இப்னுமாஜா)

3. ''எனக்குப் பல பெயர்கள் இருக்கின்றன. நான் தான் முஹம்மத். நான் தான் அஹ்மத். நான் தான் மாஹீ (இல்லாதொழிப்பவன்). என்னைக் கொண்டு அல்லாஹ் குப்ரை இல்லாதொழிப்பான். நான் தான் ஹாஷிர் (ஒன்று சேர்ப்ப வன்). மக்கள் (மறுமையில்) என்னிடமே ஒன்று சேர்வர். நான் தான் ஆகிப் (இறுதியானவன்). எனவே எனக்குப் பிறகு எந்த ஒரு நபியும் இல்லை.'' (புஹாரி, முஸ்லிம்)

4. ''என்னுடைய உம்மத்தில் முப்பது பொய்யர்கள் தோன்றுவார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தாம் நபியென்று வாதாட்டம் செய்வர். ஆயினும் நானே நபிமார்களுக்கெல்லாம் இறுதியானவனாக இருக்கின்றேன். எனக்குப் பின் வேறு எந்த நபியும் இல்லை.'' (அபூதாவூத்)

## தர்க்க ரீதியான சான்றுகள்

அல்லாஹ் உலகிற்கு நபிமார்களை அனுப்பிய பின்னணியை நோக்குகையில் நபிமார்கள் அனுப்பப்படுவதற்கான சில நியாயங்கள் தெளிவாகின்றன. அவை வருமாறு:

- எந்த ஒரு நபியும் அனுப்பப்படாத சமுதாயமாக இருக்க வேண்டும். அல்லது இன்னொரு சமூகத்திற்கு அனுப்பப்பட்ட நபியின் தூதுச் செய்தி எட்டாதிருக்க வேண்டும்.
- முன்னைய நபியின் போதனை அழிந்து போயிருக்கவேண்டும் அல்லது திரிபுபடுத்தப்பட்டிருக்க வேண்டும்.
- முன்னைய நபியின் போதனை பூர்த்தியடையாதிருக்க வேண்டும்.
- ஒரு நபிக்கு இன்னொரு நபியின் துணை தேவைப்பட்டிருக்க வேண்டும்.

முஹம்மத் ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப்பின் இன்னொரு நபி வருவதாயின் அதற்குக் காரணமான மேற்கூறப்பட்ட எந்த ஒரு நியாயமும் தெளிவாவதில்லை. ஆகவே, நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் இன்னொரு நபி வருவதற்கான எந்த ஒரு தேவையும் கிடையாது. ஆகவேதான் ஸஹாபாக்கள், தாபியீன்கள், தபஉத் தாபிஈன்கள் ஆகிய அனைவரும் முஹம்மத் ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் எந்த ஒரு நபியும் வரமாட்டார் என்பதில் ஏகோபித்த கருத்தைக் கொண்டிருந்தனர்.

முஹம்மத் ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதி நபி என்பதற்குப் பல ஆதாரங்கள் இருந்த போதிலும் நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப்பின் தாமும் நபியென்று சிலர் வாதிட்டபோது பலவீனமான ஈமான், அறிவீனம் போன்றன காரணமாக சிலர் அவர்களை ஏற்கவும் செய்தனர்.

இதன் மூலம் மக்கள் வழிகெட்டு சமூகம் பிளவுபடும் ஆபத்தும் ஏற்பட்டது. எனவே அவ்வக்கால அறிஞர்களும் ஆட்சியாளர்களும் போலி நபித்துவப் பிரச்சாரத்தை முறியடித்து சத்தியத்தை நிலைநாட்ட முயற்சித்துள்ளனர்.

இமாம் அபூ ஹனீபா ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களது காலத்தில் ஒரு போலி நபி ''எனது நபித்துவத்திற்கான அடையாளங்களைக் காண்பிக்க எனக்கு சந்தர்ப்பமளியுங்கள்'' என்றான். இதைக் கேள்வியுற்ற இமாமவர்கள் ''இவனிடம் அவ்வடையாளங்களைக் காண்பிக்குமாறு கோருபவரும் காபிராகிவிடுகிறார். ஏனெனில் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் ஒரு நபி இல்லவே இல்லை''என்றார்கள்.

## வரலாற்றில் தோன்றிய சில போலி நபிமார்கள்

**அஸ்வதுல் அன்ஸி :** இவன் யமன் பிரதேசத்தைச் சேர்ந்தவன். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலத்தைச் சேர்ந்த இவன் பைரூஸ் தைலமி என்ற ஸஹாபியினால் கொல்லப்பட்டான்.

**முஸைலமா :** நஜ்தைச் சேர்ந்த இவனும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலத்தைச் சேர்ந்தவனாவான். அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் யமாமா யுத்தத்தில் வஹ்ஷி பின் ஹர்ப் என்ற ஸஹாபியினால் கொல்லப்பட்டான்.

**ஸஜாஹ் :** இந்தப் பெண் போலி நபி மதீனாவுக்கெதிராகப் படை எடுக்க முயன்றாள். அது வெற்றியளிக்காத போது முஸைலமாவுடன் இணைந்து அவனை மணமுடித்தாள். அவன் கொல்லப்பட்ட பின் இஸ்லாத்தை ஏற்றாள்.

**துலைஹா :** கி.பி. 630ல் இஸ்லாத்தை ஏற்ற இவன் கி.பி. 631ல் தானும் ஒரு நபியென வாதிட்டான். 632 இல் புதாஹா யுத்தத்தில் காலித் பின் வலீதின் படையால் முறியடிக்கப்பட்ட பின்னர் மீண்டும் இஸ்லாத்தில் நுழைந்து கொண்டார். தனது குற்றத்தை ஒப்புக்கொண்ட அவர் பின் இஸ்லாத்தின் வெற்றிக்காக பல யுத்தங்களில் போராடினார். இறுதியாக நஹர்வான் யுத்தத்தில் ஷஹீதானார்.

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இறுதி நபித்துவத்துக்கு எதிராகப் பிரசாரம் செய்வோர் இன்றும் உள்ளனர். அவர்கள் தம் பிரசாரத்தைப் பல்வேறு வழிகளில் மேற்கொள்கின்றனர். அவற்றுள் சில..

- அல்குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் பிழையான விளக்கங்களை முன்வைத்தல்.
- போலி ஹதீஸ்களை உருவாக்குதல்.
- இஸ்லாத்தின் அடிப்படைகளில் சந்தேகங்களை ஏற்படுத்தல்.

இறுதி நபித்துவத்திற்கு எதிரான இவை போன்ற பிரசாரங்களுக்கு இஸ்லாமிய அறிஞர்கள் தெளிவான முறையில் பதிலளித்தே வந்துள்ளனர். முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இறுதி நபித்துவத்தில் சந்தேகம் கொள்வதானது ஈமானையே பாழ்படுத்தக் கூடிய விடயமாகும். எனவே இவ்விடயத்தில் அனைத்து முஸ்லிம்களும் தெளிவுடனும் விழிப்புடனும் இருப்பது இன்றியமையாத் தேவையாகும்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

الْمَاحِي ❖ العَاقِبُ ❖ الحاشِرُ ❖ بُطَاحَة ❖

**பயிற்சி**

1. முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே இறுதி நபி என்பதற்கு அல் குர்ஆன் ஸுன்னாவிலிருந்து இரண்டு ஆதாரங்களை முன்வைக்குக.
2. முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதி நபி என்பதை நீர் கற்ற பின்னணியில் விளக்குக.
3. வரலாற்றில் தோன்றிய போலி நபிமார்கள் சிலரின் பெயர்களைத் தருக

# 6

# அல் கழாஉ வல் கத்ர்

مَا فَرَّطْنَا فِى الْكِتٰبِ مِنْ شَىْءٍ ثُمَّ إِلٰى رَبِّهِمْ يُحْشَرُوْنَ

...(இவைகளில்) ஒன்றையுமே (நம் பதிவுப்) புத்தகத்தில் நாம் குறிப்பிடாமல் விட்டு விடவில்லை; இன்னும் அவை யாவும் அவற்றின் இறைவனிடம் ஒன்றுசேர்க்கப்படும். (6 அல் அன்ஆம் : 38)

கழா-கத்ர் பற்றிய நம்பிக்கை ஈமானின் பிரதான அம்சங்களில் ஒன்றாகும். மொழி ரீதியாக கழா என்ற சொல் படைத்தல், தீர்ப்பளித்தல், நிறைவேற்றல் என்ற கருத்திலும் கத்ர் என்ற சொல் நிர்ணயித்தல், முன்னேற்பாடு, மட்டிடுதல் எனும் கருத்திலும் வழங்கப்படுகின்றன. இஸ்லாமிய அகீதாவில் இவ்விரு பதங்களும் அல்லாஹ்வின் அறிவு (இல்ம்) பேராற்றல் (குத்ரத்) நாட்டம் (இராதத்) என்பவற்றுடன் தொடர் புடையன. அகீதாத் துறை அறிஞர்கள் கழா கத்ரை அகீதாவின் இலாஹிய்யாத் என்ற பிரிவில் உள்ளடக்கியுள்ளனர்.

கழா - கத்ர், நம்பிக்கை சார்ந்த ஒரு விடயம் என்ற வகையில் அதனை வஹியின் அடியாக அமைந்த அல்குர்ஆனினதும் ஹதீஸினதும் வழிகாட்டலுக்கமையவே நம்பிக்கை கொள்ள வேண்டும். ஏனெனில், வஹியின் அறிவு இருளில் செல்லும் ஒரு மனிதனின் கையில் இருக்கும் விளக்குப் போன்றதாகும். முட்களும் புதர்களும் இடர்களும் நிறைந்த இருண்ட பாதையில் அறிவுள்ள மனிதன் விளக்கின்றி செல்லமாட்டான். வஹியை விடுத்துப் பகுத்தறிவை மாத்திரம் அடிப்படையாகக் கொண்டு அது பற்றிச் சிந்திப்பதால் பிழையான முடிவுகளே பெறப்படுகின்றன.

இஸ்லாமிய வரலாற்றில் ஜபரிய்யா, கதரிய்யா, முஃதஸிலா, முர்ஜிய்யா போன்ற சிந்தனைப் பிரிவுகள் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டு ஈமான் சார்ந்த விடயங்களைச் சிந்தித்தமையினாலேயே தோற்றம் பெற்றன. இவை இஸ்லாமிய சிந்தனையிலிருந்து நெறி பிறழ்ந்த பிரிவுகளாகும். கழா கத்ர் பற்றி இப்பகுத்தறிவு வாதிகளிடையே பல்வேறு விதமான கருத்துக்கள் காணப்படுகின்றன.

### *1) மனித நாட்டத்திற்கு முதலிடமளித்து கழா கத்ரை விளக்கியோர்*

இவர்கள் மனித வாழ்வில் ஏற்படும் வெற்றி தோல்விகளுக்கு மனிதர்களின் நடவடிக்கைகளே காரணமாகும் என நம்புகின்றனர். இறைநாட்டப்படியே அனைத்தும் நடைபெறுகின்றன என்பதை இவர்கள் நிராகரிக்கின்றனர். தமது திட்டத்துக்கும், நாட்டத்துக்கும், முயற்சிக்கும் அப்பால் நிகழும் சாதக பாதகங்களுக்கு இவர்களால் பதிலேதும் கூற முடியாது.

### *2) மனித நாட்டத்தை நிராகரித்து கழா - கத்ரை விளக்கியோர்*

இத்தகையோர், தாம் செய்கின்ற நன்மை, தீமைகள் அனைத்துக்கும் அல்லாஹ் வையே காரணமாகக் குறிப்பிடுகின்றனர். தமது மனோ இச்சைப்படி தாம் செய்யும் பாவங்களை நியாயப்படுத்த முயலும் இவர்களை அல்குர்ஆன் கடுமையாக சாடு கின்றது.

*''அல்லாஹ் நாடியிருந்தால் நாங்களும் எங்களுடைய மூதாதையர்களும் (அல்லாஹ்வுக்கு எதனையும்) இணை வைத்திருக்க மாட்டோம். மேலும் எப்பொருளையும் நாங்கள் விலக்கியிருக்கவும் மாட்டோம் என இணை வைப்பாளர்கள் கூறுவர்.'' ( 6 அல் அன்ஆம்: 148 )*

கழா கத்ர் பற்றிய நம்பிக்கை தொடர்பாக அல்குர்ஆனினதும் ஹதீஸினதும் தெளிவான கருத்தை இனி நாம் நோக்குவோம். அல்குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் கழா கத்ர் தொடர்பாக இரு விடயங்கள் வலியுறுத்தப்படுகின்றன.

1. அல்லாஹ்வின் நாட்டப்படியே அனைத்தும் நடைபெறுகின்றமை.
2. மனிதன் செயற் சுதந்திரம் வழங்கப்பட்டவன் என்ற வகையில் அவனது அனைத்து செயல்களுக்கும் அவனே பொறுப்பாளியாதல்.

இக்கருத்தை வலியுறுத்தும் அல்குர்ஆன் ஹதீஸ் ஆதாரங்கள் வருமாறு:

- *''அல்லாஹ்வின் நாட்டப்படியே அன்றி எந்த ஒரு துன்பமும் நிகழ்வதில்லை.''*
- *''எனவே அவன் நாடியவர்களை மன்னிப்பான் அவன் நாடியவர்களைத் தண்டிப்பான் அல்லாஹ் அனைத்தின் மீதும் ஆற்றலுடையவன்.'' (2 அல் பகறா :284)*
- *''அல்லாஹ் அறியாத நிலையில் ஓர் இலை கூட விழுவதில்லை.'' (6 அல் அன்ஆம்:59)*

நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''உங்களில் ஒவ்வொருவரும் தன் தாயின் கர்ப்பத்தில் நாற்பது நாட்கள் இந்திரியத் துளியாகவும் பின் அதுபோன்றதொரு காலம் இரத்தக் கட்டியாகவும் பின்னர் அதுபோன்றதொரு காலம் மாமிசமாகவும் இருந்த போது அங்கே ஒரு மலக்கு அனுப்பப்பட்டு நான்கு

விடயங்கள் நிர்ணயம் செய்யப்படுகின்றன. அந்த மலக்கிடம் அதனது உணவையும், செயலையும், வாழ்நாளையும், துன்பத்துக்குரியவனா அல்லது மகிழ்ச்சிக்குரியவனா என்பதையும் எழுதுவீராக என்று சொல்லப்படும். பின் அதில் ரூஹை ஊதி விடுவீராக என்றும் கூறப்படும். எனது ஆத்மா எவன் கையில் இருக்கின்றதோ அவன் மீது சத்தியமாக உங்களில் ஒருவர் சுவர்க்கத்துக்குரிய செயலையே செய்கின்றார். சுவர்க்கத்திற்கும் அவருக்கும் இடையில் ஒரு முழ இடைவெளி இருக்கையில் விதி அவரை முந்துகின்றது. எனவே அவர் நரகத்திற்குரிய செயலைச் செய்து நரகம் நுழைகிறார். உங்களில் இன்னொருவர் நரகத்திற்குரிய செயலையே செய்கின்றார். நரகத்திற்கும் அவருக்கும் இடையில் ஒரு முழம் இடைவெளி இருக்கையில் விதி அவரை முந்துகின்றது. எனவே, அவர் சுவர்க்கத்திற்குரிய செயலைச் செய்து சுவர்க்கம் நுழைகிறார்.'' (புகாரி, முஸ்லிம்)

மேற்கூறப்பட்ட அல்குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்கள் 'அல்லாஹ் பேராற்றலும் வல்லமையும் சக்தியும் உடையவனாவான்; நடக்கப் போகின்ற அனைத்தையும் ஏற்கனவே எழுதி வைத்துள்ளான்; இப்பிரபஞ்சத்தின் ஆயுட்காலம், ஒவ்வொரு உயிரினத்தினதும் ஆயுட் காலம், ஒவ்வொரு மனிதனுக்கும் ஏற்படக் கூடிய வெற்றி தோல்விகள், இலாப நட்டங்கள், சுக துக்கம், செல்வம் வறுமை, பூமியில் ஏற்படக்கூடிய அனர்த்தங்கள், ஒருவன் நல்லவனா கெட்டவனா என்ற அவனது முடிவு, அவனது சந்ததியினர் இது போன்ற அனைத்தையும் அல்லாஹ் எழுதி வைத்துள்ளான்; அவன் எழுதி வைத்தபடியே அனைத்தும் நடைபெறுகின்றன. இதில் அல்லாஹ்வுடைய நாட்டத்தை எவராலும் மாற்ற முடியாது. அவனது அறிவில் குறை காணவும் முடியாது; என்ற நம்பிக்கையை வலியுறுத்துகின்றன. இதுவே கழா கத்ர் எனப்படுகிறது.

இரண்டாவது விடயத்தை வலியுறுத்தும் அல்குர்ஆன் ஹதீஸ் ஆதாரங்கள் வருமாறு:

- *''யார் நல்லதைச் செய்கின்றாரோ அது அவருக்கு நன்மையாக அமையும். யார் தீமையைச் செய்கின்றாரோ அது அவருக்குத் தீமையாக அமையும். உமது இரட்சகன் அடியார்களுக்கு அநீதி இழைப்பவன் அல்லன்.'' (41 ஹாமீம் அஸ் ஸஜதா:46)*
- *''உங்களைப் பீடிக்கின்ற எந்தத் துன்பமும் உங்கள் கரங்களால் தேடிக் கொண்டவைகளே.'' (42 அஷ் ஷூரா :30)*
- *''யார் ஒர் அணுவளவேனும் நன்மை செய்கின்றாரோ அதை அவர் கண்டு கொள்வார். யார் ஒரு அணுவளவேனும் தீமை செய்கின்றாரோ அதையும் அவர் கண்டு கொள்வார்.'' (99 அஸ் ஸில்ஸால் :7,8)*
- *நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள். ''பலமான முஃமின் பலவீனமான முஃமினை விட அல்லாஹ்வுக்குப் பிரியமானவன். ஒவ்வொன்றிலும் நன்மை இருக்கின்றது. உங்களுக்குப் பயனளிப்பதை அடைவதில் ஆர்வம் செலுத்துங்கள். அல்லாஹ்வைக் கொண்டு உதவி தேடுங்கள்.*

இயலாதவனாக ஆகி விடவேண்டாம். உங்களுக்கு ஏதும் தீயது நேர்ந்தால் இப்படிச் செய்திருந்தால் அது நேர்ந்திருக்காதே என்று சொல்ல வேண்டாம். அல்லாஹ்வின் நாட்டப்படி அது நடந்து விட்டது என்றே சொல்லுங்கள்'' (முஸ்லிம்).

- உமர் ரழியல்லாஹுʺ அன்ஹுʺ அவர்களுக்கு முன்னால் ஒரு திருடன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான். 'ஏன் திருடினாய்' என்று அவனிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவன் 'அது அல்லாஹ்வின் நாட்டப்படி நடந்தது' எனப் பதிலளித்தான். அப்போது உமர் ரழியல்லாஹுʺ அன்ஹுʺ அவனுக்கு முப்பது கசையடி மேலதிகமாகக் கொடுத்தார். அதற்கு அவரிடம் 'ஏன் அவ்வாறு?' என வினவப்பட்டதற்கு 'திருட்டுக்கான தண்டனை கொடுக்கப்பட்ட பின் அல்லாஹ்வின் கத்ரை ஏளனப்படுத்தியமைக்காக கசையடி வழங்கப்படுகிறது' எனப் பதில் கூறினார்.

மேற்கூறப்பட்ட ஆதாரங்களின் படி அல்லாஹ் மனிதனுக்குப் பூரண செயற் சுதந்திரத்தை வழங்கியுள்ளான். அவன் விரும்பினால் நன்மை செய்யலாம், விரும்பினால் தீமை செய்யலாம், அவனது செயலுக்கு அவனே பொறுப்பாளியாவான் என்ற உண்மை தெளிவாகின்றது.

மேலோட்டமாகப் பார்க்கின்றபோது மேற்கூறப்பட்ட இரு கருத்துக்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை போன்று தோன்றுகின்றன. அதன் காரணமாக சாதாரண மக்களிடையே கழா கத்ர் பற்றிய பல்வேறு மயக்கங்கள் காணப்படுகின்றன. ஈமானும் அறிவும் உள்ள மனிதன் அவை இரண்டுக்கும் இடையே உள்ள ஆழமான தொடர்பைப் புரிந்து அதற்கமையவே தனது வாழ்வை அமைத்துக் கொள்வான்.

கழா கத்ர் என்பது எமக்குப் பின்னால் உள்ள முற்றிலும் மறைவான இரகசியமாகும். அதை அல்லாஹ் மாத்திரமே அறிவான். அத்துடன் மனிதன் தெரிவுச் சுதந்திரம் உடையவனாகவும் உள்ளான். அத் தெரிவுச் சுதந்திரம் எமக்கு முன்னால் இருப்பதும் எமது பார்வைக்கும் அறிவுக்கும் எட்டக்கூடியதுமாகும். எனவே, எமக்கு முன்னால் உள்ளவற்றில் நல்லதைத் தெரிவு செய்தோமா தீயதைத் தெரிவு செய்தோமா, இம்மை, மறுமை வாழ்வின் வெற்றிக்குரியதைத் தெரிவு செய்தோமா தோல்விக்குரியதைத் தெரிவு செய்தோமா என்பன பற்றி நிச்சயமாக அல்லாஹ் எம்மிடம் விசாரிப்பான். ஆகவே அல்லாஹ் நாடியவைகளே நடைபெறும் என்ற நம்பிக்கையுடன் எமது செயல் சுதந்திரத்திற்கமைய, ஷரீஆவுக்கும் மனித அறிவுக்கும் ஏற்ப செயற்படுவதே கழா கத்ர் பற்றிய சீரான நம்பிக்கையின் வெளிப்பாடாகும்.

ஒரு முறை உமர் ரழியல்லாஹுʺ அன்ஹுʺ அவர்களது தலைமையில் சில ஸஹாபாக்கள் ஷாம் தேசம் நோக்கிப் பயணம் செய்து கொண்டிருந்தார்கள் . அப்போது ஷாமில் கொலரா நோய் பரவியிருப்பதாக செய்தி வந்தது. அதையறிந்த உமர் ரழியல்லாஹுʺ அன்ஹுʺ அவர்கள் அங்கு செல்வதைத் தவிர்க்க முயன்றார்கள். அப்போது அபூ உபைதா ரழியல்லாஹுʺ அன்ஹுʺ அவர்கள் ''நீங்கள் அல்லாஹ்வின் கத்ரில் இருந்து தப்பிச் செல்ல முனைகின்றீர்களா?'' என வினவினார். அதற்கு உமர் ரழியல்லாஹுʺ அன்ஹுʺ அவர்கள் ''இல்லை ஒரு கத்ரில் இருந்து மற்றொரு கத்ருக்குச் செல்கின்றோம்'' எனப் பதில் கூறினார்கள். இப்பதில் கத்ர் பற்றியெழும் பல்வேறு மயக்கங்களுக்குத் தெளிவு தருகிறதல்லவா?

### அல்லாஹ் ஏன் கத்ரை ஏற்படுத்தினான்?

அல்லாஹ் ஏன் கத்ரை ஏற்படுத்தினான்? இது கத்ர் பற்றி எழும் பொதுவான ஒரு வினாவாகும். இதற்கான பதிலை அல்லாஹ்வே கூறுகின்றான்.

- *''பூமியிலோ அல்லது உங்களிலோ ஏற்படும் எந்த ஒரு துன்பமும் ஏற்கனவே நாம் ஏட்டில் எழுதி வைத்ததே அன்றி வேறில்லை. அவ்வாறு எழுதி வைப்பது அல்லாஹ்வுக்கு மிகவும் எளிதாகும். (எழுதியமைக்கான காரணம்) உங்களுக்குக் கிடைக்காமல் போகின்றவற்றுக்காக நீங்கள் மனம் துவண்டு போய்விடக் கூடாது என்பதற்காகவும் உங்களுக்குக் கிடைத்தவற்றுக்காக பூரித்து மதிமயங்கிப் போய்விடக் கூடாது என்பதற்காகவுமாகும்...'' (57 அல் ஹதீத் : 22 - 23)*

மனம் துவண்டு போகுதல், பூரித்துப் போகுதல் ஆகிய இரண்டும் மனிதனை நடுநிலை இழக்கச் செய்கின்ற பலவீனங்களாகும். கத்ர் பற்றிய நம்பிக்கை அப்பலவீனங்களிலிருந்து மனிதனைப் பாதுகாக்கின்றது.

- *நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''முஃமினின் விடயம் ஆச்சரியத்துக்குரியது. ஏனெனில் அனைத்து விடயங்களும் அவனுக்கு நன்மையாகவே அமைந்து விடுகின்றன. அவனுக்கு ஏதாவது கெடுதி நேர்ந்தால் பொறுத்துக் கொள்வான். அவனுக்கு அது நன்மையாக அமைகின்றது. அவனுக்கு ஏதும் நல்லது நேர்ந்தால் இறைவனுக்கு நன்றி செலுத்துவான். அதுவும் அவனுக்கு நன்மையாகவே அமைகின்றது'' (புஹாரி)*

எனவே அல்குர்ஆன், ஸுன்னா ஆகியவற்றின் அடிப்படையில் விதியை விசுவாசிக்கும் ஒரு முஃமின் எப்போதும் திருப்தியடைந்த மனதுடையவனாகவும் பொறுமையைக் கடைபிடிப்பவனாகவும் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துபவனாகவும் இருப்பானே அன்றி ஒருபோதும் விரக்தி அடைய மாட்டான். மனம் தளரவும் மாட்டான். கிடைக்கப்பெறும் விளைவில் இருந்து படிப்பினை பெற்று தொடர்ந்தும் முயற்சி செய்பவனாகவே இருப்பான். இதுவே நபிமார்களினதும் ஸஹாபாக்களினதும் வழிமுறையாகும்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

الْقَضَاءُ وَالْقَدَرُ ۞ الْقُدْرَةُ ۞ الإِرَادَةُ ۞ الإِلٰهِيَّاتُ ۞ الجَبَرِيَّةُ ۞ القَدَرِيَّةُ ۞ المُعْتَزِلَةُ ۞ المُرْجِيَةُ ۞ الْعِلْمُ

### பயிற்சி

1. கழா, கத்ர் என்ற சொற்களின் மொழிக் கருத்து யாது?
2. ''ஒரு கத்ரிலிருந்து இன்னொரு கத்ருக்கு நான் செல்கின்றேன்'' என்ற உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கூற்றை விளக்குக.
3. கழா-கத்ர் தொடர்பான பிழையான நம்பிக்கைகளைக் குறிப்பிடுக.
4. இஸ்லாமிய அடிப்படையில் விதியை விசுவாசிப்பதால் கிடைக்கும் பயன்களைப் பட்டியற்படுத்துக.

# 7

# ஸக்காத்

خُذْ مِنْ أَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ وَتُزَكِّيْهِمْ بِهَا وَصَلِّ عَلَيْهِمْ...

(நபியே!) அவர்களுடைய செல்வத்திலிருந்து தர்மத்திற்கானதை எடுத்துக் கொண்டு, அதனால் அவர்களை உள்ளும் புறமும் தூய்மையாக்குவீராக, இன்னும் அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்வீராக... (9 அத் தௌபா: 103)

இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளுள் ஸக்காத் மிக முக்கியமான ஓர் இடத்தை வகிக்கின்றது. வறியவர்களின் துயர் துடைக்க இஸ்லாம் காட்டித் தந்த தன்னிகரற்ற ஒரு வழிமுறையாகவும் இது அமைந்துள்ளது.

மொழி ரீதியாக ஸக்காத் என்ற சொல் தூய்மை, முன்னேற்றம், வளர்ச்சி போன்ற கருத்துக்களில் கையாளப்படுகிறது. இஸ்லாமிய வழக்கில் அல்லாஹ் தகுதி யானவர்களுக்கு உரித்தாக வேண்டுமென சொத்தில் விதித்திருக்கும் குறிப்பிட்ட பங்கைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. அவ்வாறே, அல்லாஹ் விதித்திருக்கும் அக்குறிப்பிட்ட பங்கை வழங்குவதைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப்படுகின்றது.

அல் குர்ஆனும் ஸுன்னாவும் ஸக்காதின் முக்கியத்துவத்தைப் பல்வேறு வழிகளில் வலியுறுத்தியுள்ளன. தொழுகையோடு இணைத்து ஸக்காத் அல் குர்ஆனில் பல்வேறு இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

*''தொழுகையைக் கடைப்பிடியுங்கள்; ஸக்காத்தையும் (ஒழுங்காகக்) கொடுத்து வாருங்கள்; ருகூஃ செய்வோரோடு சேர்ந்து நீங்களும் ருகூஃ செய்யுங்கள்.'' (2 அல் பகறா :43)*

*'(முஃமின்களே!) நீங்கள் கிருபை செய்யப்படும் பொருட்டு, நீங்கள் தொழுகையை நிலைநிறுத்துங்கள்; இன்னும் ஸக்காத்தைக் கொடுங்கள்; மேலும், (அல்லாஹ்வின்) தூதருக்குக் கீழ்படியுங்கள்.'' (24 அன் நூர் :56)*

அல்லாஹ்வின் அருளைப் பெறுவதற்கான வழிகளுள் ஒன்றாக ஸகாதை அல்குர்ஆன் அடையாளப்படுத்துகிறது.

''அதற்கு இறைவன், ''நான் நாடியவர்களுக்கு என் வேதனை வந்தடையும் எனினும் என்னுடைய அருட்கொடையானது அனைத்தையும்விட மிக விரிவானது. எவர்கள் (எனக்குப்) பயந்து ஸக்காத்தும் கொடுத்து வருகின்றார்களோ அவர்களுக்கும் எவர்கள் நமது வசனங்களை நம்பிக்கை கொள்கின்றார்களோ அவர்களுக்கும் (என்னுடைய அருளை) நான் முடிவு செய்வேன் என்று கூறுகின்றான்.'' *(7 அல் அஃராப் :156)*

அல்லாஹ்வின் உதவியைப் பெறுவதற்கான நிபந்தனைகளுள் ஒன்றாக ஸக்காத் வழங்கல் அமைந்துள்ளது.

''அல்லாஹ்வுக்கு எவன் உதவி செய்கிறானோ, அவனுக்கு அல்லாஹ்வும் உதவிசெய்வான். நிச்சயமாக அல்லாஹ் வலிமைமிக்கோனும், (யாவரையும்) மிகைத்தோனுமாக இருக்கின்றான். அன்றியும், இவர்கள் (எத்தகையோரென்றால்) இவர்களுக்கு நாம் பூமியில் இடம்பாடாக்கிக் கொடுத்தால், இவர்கள் தொழுகையை முறையாகக் கடைப்பிடிப்பார்கள்; ஸக்காத்தும் கொடுப்பார்கள்; நன்மையான காரியங்களைச் செய்யவும் ஏவுவார்கள்; தீமையைவிட்டும் விலக்குவார்கள். மேலும், சகலகாரியங்களின் முடிவும் அல்லாஹ்விடமே இருக்கிறது.'' *(22 அல் ஹஜ்ஜு :40-41)*

சுவனத்தை வாரிசாகப் பெறுபவர்களின் முக்கியமான பண்புகளுள் ஒன்றாக ஸக்காத் அமைந்துள்ளது.

''ஸக்காத்தையும் அவர்கள் கொடுத்து வருவார்கள்.'' (23 அல் முஃமினூன் :4)

முஸ்லிம் சமூகத்தின் ஓர் அடிப்படையான பண்பாக ஸக்காத் அமைந்துள்ளது.

''முஃமினான ஆண்களும் முஃமினான பெண்களும் ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாக இருக்கின்றனர்; அவர்கள் நல்லதைச் செய்யத் தூண்டுகிறார்கள்; தீயதை விட்டும் விலக்குகிறார்கள்; தொழுகையைக் கடைப்பிடிக்கிறார்கள்; ஸக்காத்தை (முறையாகக்) கொடுத்து வருகிறார்கள்; அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் வழிப்படுகிறார்கள்; அவர்களுக்கு அல்லாஹ் சீக்கிரத்தில் கருணை புரிவான் - நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடைய வனாகவும் இருக்கின்றான்.'' *(9 அத் தௌபா :71)*

ஸக்காத் வழங்காதவர்களுக்குக் கிடைக்கவுள்ள தண்டனையையிட்டு எச்சரிக்கை விடுக்கப்பட்டுள்ளது:

''... இன்னும் எவர்கள் பொன்னையும், வெள்ளியையும் சேமித்து வைத்துக் கொண்டு அவற்றை அல்லாஹ்வின் பாதையில் செலவிடாதிருக்கின்றார்களோ (நபியே!) அவர்களுக்கு நோவினை செய்யும் வேதனை உண்டு என்று நன்மாராயம் கூறுவீராக!'' *(9 அத் தௌபா :34)*

''ஒரு கூட்டத்தார் ஸக்காதை வழங்காதிருந்தால் அல்லாஹ் அவர்களை பஞ்சத்தைக் கொண்டு சோதிப்பான்.'' (தபரானி)

''ஒரு கூட்டத்தார் ஸக்காத்தை வழங்காதிருந்தால் அல்லாஹ் அவர்களை விட்டும் மழையைத் தடுத்து விடுவான்.'' (ஹாகிம்)

**ஸக்காத்தினால் கிட்டும் பயன்கள் ஏராளம் உண்டு. அவற்றுள் சில பின்வருமாறு:**

1- ஸக்காத் கொடுப்பவரது உள்ளம் தூய்மையடைகிறது; பேராசையிலிருந்து அவர் விடுபடுகிறார்; பணம்தான் எல்லாம் என்று கருதி வாழும் இழி வாழ்க்கையிலிருந்து அவர் காப்பாற்றப்படுகிறார். எனவே, இரக்க சிந்தையோடு சமூகப் பணிகளில் ஈடுபட அவர் முன்வருகிறார்.

2- ஸக்காத் ஏழையின் உள்ளத்தையும் தூய்மைப்படுத்துகிறது. பொறாமை, வெறுப்பு போன்ற மன நோய்களிலிருந்து அவர் விடுதலையடைகிறார்; இதனால் செல்வந்தர்களின் முன்னேற்றத்தை விரும்புபவராக, அதற்காக பிரார்த்திப்பவராக மாறுகிறார்.

3- இறைவனுக்கு நன்றி செலுத்தும் மனப்பாங்கை வளர்ப்பதாக ஸக்காத் அமைந்துள்ளது. சொத்துக்களை வைத்திருக்கும் ஒருவர் அவற்றுக்கு ஸக்காதை வழங்குவதே இறைவனுக்கு நன்றி செலுத்த வழியாகும். அவ்வாறே, அருட் கொடைகளைத் தொடர்ந்தும் பாதுகாத்துக் கொள்ளவும் அதுவே வழியாகும். (...''இதற்காக எனக்கு) நீங்கள் நன்றி செலுத்தினால், உங்களுக்கு நிச்சயமாக நான் (என்னருளை) அதிகமாக்குவேன்...'' (14 இப்ராஹீம் :7) என அல்குர்ஆன் கூறுகின்றது.

4- சமூகத்தில் பரஸ்பர அன்பு, கூட்டுப் பொறுப்பு, ஒற்றுமை என்பன வளர்ச்சியடைய ஸக்காத் வழி செய்கிறது.

5- சமூகத்தில் பாரிய பொருளாதார ஏற்றத்தாழ்வு ஏற்படாதிருக்க ஸக்காத் காரணமாக அமைகிறது. சமூகத்தில் ஒரு சிலர் சொகுசாக வாழ, அதிகமானோர் வறுமைக் கோட்டுக்குக் கீழ் அவதியுறுவதை எந்த உள்ளமும் ஏற்காது. ஸக்காத் முறையாக நிறைவேற்றப்படும் ஒரு சமூகத்தில் இத்தகைய ஓர் அவல நிலை நிலவ மாட்டாது.

6- வறுமை பல்வேறு குற்றச்செயல்களுக்குக் காரணமாக அமைகின்றது. ஸக்காத் வறியோரின் துயர் துடைப்பதனால் திருட்டு,கொள்ளை போன்ற குற்றச்செயல்கள் பற்றிய ஐயமின்றி சமூகம் நிம்மதியாக, பாதுகாப்பாக இருக்க முடிகிறது. இந்த வகையில் சமூகத்தின் பாதுகாப்பை ஸக்காத் உறுதிப்படுத்துகிறது எனலாம்.

7- ஸக்காத் பொருளாதார விருத்திக்கும் வழிவகுக்கிறது. ஒவ்வொரு வருடமும் ஸக்காத்தை நிறைவேற்ற வேண்டியிருப்பதனால் செல்வந்தர்கள் தமது சொத்துக்கள் ஸக்காத்தினால் குறைவடையாது பாதுகாக்க உழைப்பர்; பயனுள்ள வழிகளில் முதலீடு செய்வர். இதனால் சமூகத்தின் பொருளாதார வளர்ச்சி துரிதப்படுத்தப்படும்.

8- வேலையில்லாப் பிரச்சினைக்குத் தீர்வு காணவும் ஸக்காத் அத்திவாரமிடுகிறது. தொழிலொன்றைத் தொடங்க மூலதன வசதி அற்றவர்களுக்கு மூலதனம் வழங்கப்படுகிறது; தேவையானோருக்கு தொழிற் பயிற்சி கிடைக்கிறது.

ஸக்காத் உரிய விளைவைத் தர அது கூட்டாக நிறைவேற்றப்படுவது அவசியமாகும். ஸக்காத் ஒரு கூட்டுக் கடமை என்பதை விளங்கிக்கொள்ளப் பின்வரும் அம்சங்கள் துணைசெய்யும்:

ஸக்காத் யாருக்கு வழங்கப்பட வேண்டும் என்பதை விளக்கும் அல்குர்ஆன் ஸக்காதை வசூலிக்கும் பணிகளில் ஈடுபடுவோரையும் அவர்களில் ஒரு பிரிவினராகக் குறிப்பிட்டுள்ளது. இதிலிருந்து தனி நபர்களிடமிருந்து ஸக்காத்தைத் திரட்டி, உரியவர்களுக்கு விநியோகிப்பது சமூகத்தின் பணி என்பதை உணர முடிகிறது.

அல்குர்ஆன் செல்வந்தர்களிடமிருந்து ஸக்காத்தை அறவிடுமாறு கட்டளை பிறப்பித்துள்ளது. ''(நபியே!) அவர்களுடைய செல்வத்திலிருந்து தர்மத்திற்கானதை எடுத்துக் கொண்டு, அதனால் அவர்களை உள்ளும் புறமும் தூய்மையாக்குவீராக, இன்னும் அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்வீராக! நிச்சயமாக உம்முடைய பிரார்த்தனை அவர்களுக்கு (சாந்தியும்), ஆறுதலும் அளிக்கும்; அல்லாஹ் (யாவற்றையும்) செவியுறுவோனாகவும், அறிபவனாகவும் இருக்கின்றான்.'' (9 அத் தௌபா :103)



நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முஆத் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை யமன் பிரதேசத்துக்கு அனுப்பும்போது செய்த உபதேசத்தில் ஸக்காத்தைப் பற்றி ''அவர்களது செல்வந்தர்களிடமிருந்து அது பெறப்பட்டு ஏழைகளுக்கு அது மீள வழங்கப்படும்'' (புஹாரி) எனக் குறிப்பிட்டுள்ளமை ஸக்காத் ஒரு கூட்டுக்கடமை என்பதை உணர்த்துகிறது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் கலீபாக்களும் ஸக்காத்தைத் திரட்டி வர ஆள் அனுப்பியதாக வரலாறு கூறுகிறது.

**ஸக்காத்தைக் கூட்டாக நிறைவேற்றுவதால் பல்வேறு பயன்கள் கிட்டுகின்றன:**

- ஸக்காத் கடமையிலிருந்து செல்வந்தர்கள் யாரும் நழுவி விடாதிருக்க இது வழிசெய்கிறது.
- ஏழைகளின் சுயமரியாதை பாதுகாக்கப்படுகிறது.
- வறுமை ஒழிப்புக்காகப் பாரிய வேலைத்திட்டங்களை முறையாகத் திட்டமிட்டு மேற்கொள்ளலாம்.
- கவனிக்கப்பட வேண்டிய அனைவரையுமே கவனித்துக் கொள்ளலாம்.
- சமூக நலனைப் பாதுகாக்கும் பணிகளிலும் கவனம் செலுத்த முடிகிறது.

ஸக்காத் தொடர்பான சட்ட திட்டங்கள் பற்றி அறிந்திருப்பதும் அதனை முறையாக நிறைவேற்ற இன்றியமையாததாகும்.அவை பற்றி நோக்குவோம்.

## ஸக்காத் விதியாவதற்குரிய நிபந்தனைகள்

1. முஸ்லிமாக இருத்தல்.

2. சுதந்திரமானவராக இருத்தல்.

3. பொருள் தனக்கு உரிமையாய் இருத்தல்:

   பொதுச் சொத்துக்களுக்கு ஸக்காத் வாஜிபாக மாட்டாது. ஆனால் பருவமடையாத சிறுவனின் அல்லது சுயபுத்தியற்றவனின் சொத்தைப் பராமரிப்பவர் அது தனக்கு உரிமை இல்லாவிடினும் அதற்காக ஸக்காத் வழங்குவது கடமையாகும்.

4. நிஸாபை அடைந்திருத்தல்:

   ஸக்காத் விதியாகும் ஒவ்வொரு பொருளிலும் அது விதியாவதற் காகக் குறிக்கப் பட்டுள்ள ஆகக் குறைந்த அளவைக் குறிக்கவே ''நிஸாப்'' என்ற சொல் பயன்படு கிறது. பொருட்களுக்கேற்ப நிஸாப் வேறுபடும்.



5. வருடம் பூர்த்தியாகியிருத்தல்:

   இங்கு வருடம் என்பது சந்திர வருடமாகும்.குறித்த பொருள் தனக்கு உடமையானதிலிருந்து வருடம் ஆரம்பமாகும். வருடம் பூர்த்தியாதல் என்பது ஆண்டு முழுக்க குறித்த பொருள் கையிருப்பில் இருப்பதைக் குறிக்கும். தானியம், பழ வகை, புதையல் போன்றவற்றுக்கு வருடம் பூர்த்தியாக வேண்டும் என்ற நிபந்தனை கிடையாது. அவை கைக்குக் கிடைத்தவுடன் ஸக்காத் கடமையாகி விடும்.

6. சொத்து வளர்ச்சியடையக்கூடியதாக இருத்தல்.

7. அடிப்படைத்தேவைகளை விட மேலதிகமாக இருத்தல்.

### ஸக்காத்தின் பர்ளுகள்

1. நிய்யத் வைத்தல்.
2. தகுதியானவர்களுக்கு வழங்குதல்.

## ஸக்காத் விதியாகும் பொருட்கள்

பின்வரும் பொருட்களிலேயே ஸக்காத் விதியாகும். அவற்றையும் அவற்றுக்கான நிஸாபையும் நோக்குவோம்.

### 1. கால்நடைகள்

கால்நடைகளில் ஆடு, மாடு, ஒட்டகை ஆகிய மூன்றுக்கும் ஸக்காத் விதியாகும். ஆயினும் வண்டி இழுத்தல், உழுதல் போன்ற வேலைகளுக்காகப் பயன்படுத்தப்படும் கால்நடைகளுக்கு ஸக்காத் விதியாக மாட்டாது.

**அ) ஆடு**

*ஆட்டின் ஆரம்ப நிஸாப் 40 ஆகும்.*

| | |
|---|---|
| *40 முதல் 120 ஆடுகள் வரை* | *- 01 பெண் ஆடு* |
| *121 முதல் 200 ஆடுகள் வரை* | *- 02 பெண் ஆடுகள்* |
| *201 முதல் 399 ஆடுகள் வரை* | *- 03 பெண் ஆடுகள்* |
| *400 முதல் 499 ஆடுகள் வரை* | *- 04 பெண் ஆடுகள்* |

இதற்கு மேற்படின் 100 ஆடுகளுக்கு இரண்டு வயதுள்ள 01 பெண் ஆடு என்ற அடிப்படையில் கொடுத்தல் வேண்டும்.

**ஆ) மாடு**

*மாட்டின் ஆரம்ப நிஸாப் 30 ஆகும்.*

| | | | |
|---|---|---|---|
| *30* | *மாடுகளுக்கு ஒரு வயதுள்ள* | *01* | *காளை மாடு* |
| *40* | *மாடுகளுக்கு இரண்டு வயதுள்ள* | *01* | *பசு மாடு* |

இதற்கு மேற்படின் இவ்விரு இலக்கங்களினதும் தனித்தனிப் பெருக்கங்களுக்கோ அல்லது கூட்டுத் தொகையின் பெருக்கங்களுக்கோ ஸக்காத் கணிக்கப்படல் வேண்டும்.

**இ) ஒட்டகம்**

*ஒட்டகத்துக்கான ஆரம்ப நிஸாப் 05 ஆகும்.*

*ஐந்து ஒட்டகங்களுக்கு 01 ஆடு என்று தொடங்கி 20 ஒட்டகங்களுக்கு 04 ஆடுகள் என்பது வரை சென்று, ஒட்டகங்களின் எண்ணிக்கை 25 ஐ அடைந்து விட்டால் ஒரு வயதுள்ள ஒரு பெண் ஒட்டகை கொடுக்க வேண்டும்.*

### *2) தானியங்கள்*

தானியத்தில் ஸக்காத் விதியாவதற்கு அத்தானியம் உற்பத்தி செய்யப்பட்டதாக, சேமித்து வைக்கக்கூடியதாக இருப்பதோடு பிரதான உணவுப் பொருளாகவும் இருக்க வேண்டும். எனவே நெல், கோதுமை போன்ற தானியங்களிலேயே ஸக்காத் வாஜிபாகும்.





தானியங்களின் ஆரம்ப நிஸாப் 5 வஸகுகளாகும். இது சுமார் 675 கிலோ கிராமுக்குச் சமனாகும். உமியுடன் சேமிக்கப்படும் நெல்லாயின் இதனது இரு மடங்கே (1350 கி.கி) நிஸாபாகும்.

நிஸாபைக் கணக்கிடும்போது பின்வருவன கருத்தில் கொள்ளப்பட வேண்டும்:

அ) ஒரு வருடத்துக்குள் பல தடவைகள் அறுவடை இடம்பெறுமாயின் ஒவ்வொரு தடவையும் ஸக்காத் வழங்கப்பட வேண்டும். ஒவ்வொரு தடவையும் கிடைக்கும் அறுவடை நிஸாபை அடையாதிருந்தால் ஒரு வருடத்துக்குள் பல தடவைகள் இடம்பெறும் விளைச்சலை ஒன்றாகக்கூட்டி நிஸாப் கணக்கிடப்படும்.

ஆ) வித்தியாசமான இரு வகைத் தானியங்கள் ஒன்றாகக் கூட்டப்பட்டு நிஸாப் கணக்கிடப்பட மாட்டாது.(உதாரணம்:கோதுமையும் நெல்லும்)

இ) ஒரே தானியத்தில் வேறுபட்ட இனங்களை ஒன்றாகச் சேர்த்தே நிஸாப் கணிப்பிடப்படும்.(உதாரணம்:நாட்டரிசியும் சம்பாவும்)

### *3) பழ வகை*

பேரீச்சை, திராட்சை ஆகிய இரு பழங்களிலும் ஸக்காத் வாஜிபாகும். ஆரம்ப நிஸாப் விதியாகும் விதம் போன்ற அனைத்திலும் தானியத்துக்குரிய சட்ட திட்டங்களே இவற்றுக்கும் உரியன.





### 4) கனிப்பொருள்

தங்கம், வெள்ளி ஆகிய இரண்டிலும் ஸக்காத் விதியாகும்.




தங்கத்துக்கான ஆரம்ப நிஸாப் 20 மிஸ்கால் ஆகும். இது பத்தரை பவுனுக்கு சமனாகும். நிறையில் 85 கிராமுக்கு சமனாகும். தங்கத்தில் 1/40 ஸக்காத்தாகக் கொடுக்கப்பட வேண்டும்.

வெள்ளியின் ஆரம்ப நிஸாப் 200 திர்ஹங்களாகும். 595 கிராமுக்கு இது சமனாகும். வெள்ளியிலும் 1/40 ஸக்காத்தாகக் கொடுக்கப்படுவது அவசியமாகும்.

தங்கம்,வெள்ளிக்கான ஸக்காத்தை வழங்கும்போது கருத்தில் கொள்ளப்பட வேண்டிய சில விடயங்கள் பின்வருமாறு:

அ) ஓரினத்திலுள்ள எல்லா உருப்படிகளையும் சேர்த்தே ஸக்காத்துக்கான நிஸாப் கணிப்பிடப்படும். (உதாரணம்: மாலை, வளையல், தங்க பிஸ்கட், அட்டியல், கிண்ணம்)

ஆ) பாவனையிலுள்ள நகைகளுக்கு ஸக்காத் விதியாக மாட்டாது. ஆனால், மேலதிகமாக சேமித்து வைக்கப்பட்டிருக்கும் ஆபரணங்களுக்கு ஸக்காத் விதியாகும்.

இ) தங்க, வெள்ளிப் பாத்திரங்களுக்கு ஸக்காத் விதியாகும்.

ஈ) வேறு உலோகம் கலக்கப்பட்டிருப்பின் அவற்றைக் கழித்து விட்டே நிஸாப் கணிப்பிடப்படும்.

### 5) பணம்

பணத்துக்குரிய ஆரம்ப நிஸாப் 85 கிராம் தங்கத்தின் பெறுமதியாகும். வெள்ளியின் நிஸாபையே பணத்துக்குரிய நிஸாபாகக் கருதவேண்டும் என்ற நிலைப்பாடும் இருக்கவே செய்கிறது.

### 6) வர்த்தகப் பொருட்கள்:

பணத்துக்குரிய நிஸாபே இவற்றுக்கான நிஸாபாகும். இவற்றுக்கு ஸக்காத் வழங்கும்போது பின்வரும் அம்சங்கள் கவனத்திற் கொள்ளப்பட வேண்டும்:

அ) வருட ஆரம்பத்தில் நிஸாபை அடையாதிருந்து, இறுதியில் நிஸாபை அடைந்திருந்தால் ஸக்காத் விதியாகும்.

ஆ) பொருட்களுக்கான அன்றைய சந்தை விலையை வைத்தே நிஸாப் கணிப்பிடப்படும். அது கொள்வனவு விலையை விட அதிகமாக இருக்கலாம். குறைவாகவும் இருக்கலாம்.

## ஸக்காத் பெறத் தகுதியானோர்:

செல்வந்தர்களிடமிருந்து திரட்டப்படும் ஸக்காத் உரியவர்களுக்குப் போய்ச்சேர வேண்டும் என்ற விடயத்தில் இஸ்லாம் மிகவும் விழிப்பாக இருக்கிறது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு மனிதர் வந்தார்; தனக்கு ஸக்காத் வழங்குமாறு வேண்டினார். அவருக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''ஸக்காத் விடயத்தில் ஒரு நபியோ, அல்லது வேறு யாருமோ முடிவெடுப்பதையிட்டு திருப்தியடையாத அல்லாஹ் அது விடயத்தில் அவனே முடிவு செய்துள்ளான். அதனை எட்டுப் பகுதிகளாக அவன் பிரித்துள்ளான். நீ அப்பிரிவுகளுக்குள் அடங்கக் கூடியவனாயின் உனக்குரிய உரிமையை, பங்கை வழங்குகிறேன்'' எனப் பதிலளித்தார்கள்.'' (அபூதாவூத்)

அல்குர்ஆனின் பின்வரும் வசனத்தைப் பற்றியே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மேற்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்கள்:

*''(ஸக்காத் என்னும்) தானங்கள் வறியவர்களுக்கும், ஏழைகளுக்கும், தானத்தை வசூல் செய்யும் ஊழியர்களுக்கும், இஸ்லாத்தின் பால் அவர்கள் உள்ளங்கள் ஈர்க்கப்படுவதற்காகவும், அடிமைகளை விடுதலை செய்வதற்காகவும், கடன் பட்டிருப்பவர்களுக்கும், அல்லாஹ்வின் பாதையில் (போர் புரிவோருக்கும்), வழிப்போக்கர்களுக்குமே உரியவை. (இது) அல்லாஹ் விதித்த கடமையாகும் - அல்லாஹ் (யாவும்) அறிபவன், மிக்க ஞானமுடையோன்.''( 9 அத் தௌபா :60)*

ஸக்காத் பெற தகுதியான எட்டுப் பிரிவினரும் பின்வருமாறு:

1. **பகீர்:** எவ்வித வருவாயும் அற்ற பரம ஏழை.
2. **மிஸ்கீன்:** தனக்கும் தனது பராமரிப்பில் உள்ளவர்களுக்கும் போதுமான அளவு செலவு கிடைக்கப் பெறாதவர்.
3. **ஆமில்:** ஸக்காத்தைக் கணக்கிடல், வசூலித்தல், விநியோகித்தல் முதலிய பணிகளில் ஈடுபடக் கூடியவர்.
4. **முஅல்லபதுல் குலூப்:** இஸ்லாத்தின் பால் கவரப்பட்டவர்களும் கவரத் தக்கவர்களும்.
5. **அர்ரிகாப்:** தவணை முறையில் உரிமைச் சீட்டு எழுதப்பட்ட அடிமை.
6. **காரிமூன்:** நியாயமான காரணங்களுக்காக கடன்பட்டு அதனைத் தீர்க்க வழியில்லாதவர்கள்.

7. ***பீ ஸபீலில்லாஹ்:*** அல்லாஹ்வின் பாதையில் இருப்போர்.

8- **இப்னு ஸபீல்:** அனுமதிக்கப்பட்ட பயணம் மேற்கொண்டு அதனை நிறைவு செய்ய வழியில்லாதவர்.

**ஸக்காத் பெறத் தகுதியற்றவர்கள்:**

1. போதிய வருமானம் உள்ளவர்.
2. அடிமைகள்
3. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது வம்சத்தைச் சார்ந்தவர்கள். (பனூ ஹாஷிம்,பனூ முத்தலிப்)
4. ஸக்காத் கொடுப்பவரால் தாபரிக்கக் கடமைப்பட்டவர்கள்.(மனைவி, பிள்ளைகள், தாய் தந்தையர்)
5. முஸ்லிம் அல்லாதவர்கள்.

இஸ்லாம் காட்டித்தந்த இந்த சட்டதிட்டங்களைப் பேணி வறுமையின் கோரப் பிடியிலிருந்து சமூகத்தைப் பாதுகாக்கத் திடசங்கற்பம் பூணுவோம்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❋ الفَقِيْرُ ❋ المِسْكِيْنُ ❋ العَامِلُ ❋ الرِّقَابُ ❋ الغَارِمُونَ ❋ فِيْ سَبِيْلِ اللّٰهِ
❋ ابْنُ السَّبِيْلِ ❋ الزَّكَاةُ ❋ النِّصَابُ ❋ الحَوْلُ ❋ مُؤَلَّفَةُ القُلُوْبِ

**பயிற்சி**

1. ஸக்காத் என்ற சொல்லின் பொருள் யாது?
2. ஸக்காத்தின் முக்கியத்துவத்தைக் காட்டும் அல்குர்ஆன் வசனங்கள் இரண்டைத் தருக.
3. ஸக்காத்தினால் கிட்டும் சமூகப் பயன்கள் சிலவற்றைக் குறிப்பிடுக.
4. ஸக்காத் ஒரு கூட்டுக் கடமை என்பதை நிறுவ இரு ஆதாரங்கள் தருக.
5. ஸக்காத்தைக் கூட்டாக நிறைவேற்றுவதால் கிட்டும் பயன்கள் நான்கைக் குறிப்பிடுக.

# 8

# நோன்பின் தாற்பரியங்கள்

يٰأَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ
عَلَى الَّذِيْنَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُوْنَ

''ஈமான் கொண்டோர்களே! உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் (அது) விதிக்கப்பட்டுள்ளது (அதன் மூலம்) நீங்கள் இறையச்சமுடையோர் ஆகலாம்''
(2 அல் பகறா :183)

இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளுள் நோன்பு தனித்துவமான ஒரு கடமையாகத் திகழ்கிறது. இறைவனுக்கு முழுமையாகக் கட்டுப்பட்டு நடக்கும் மனிதர்களை உருவாக்குவதற்கான ஒரு பயிற்சிப் பாசறையாக இது மிளிர்கிறது.

அரபு மொழியில் நோன்பைக் குறிக்க''ஸவ்ம்'' என்ற சொல் பயன்படுத்தப் படுகிறது. விலகியிருத்தல், தவிர்ந்து கொள்ளல் என்பதே இதன் மொழிக் கருத்தாகும். இஸ்லாமிய வழக்கில் ஒரு முஸ்லிம் அல்லாஹ்வுக்காக என்ற தூய எண்ணத்தோடு உண்ணல், பருகல், உடலுறவு கொள்ளல் முதலான அனுமதிக்கப்பட்ட காரியங்களில் இருந்து அதிகாலை முதல் (கிழக்கு வெளுத்ததிலிருந்து) சூரியன் மறையும்வரை விலகியிருத்தலைக் குறிக்க இச்சொல் பயன்படுகிறது. ஸவ்ம் எனும் பதத்தின் பன்மையே ஸியாம் எனும் சொல்லாகும்.

நோன்பு தட்டிக்கழிக்க முடியாத ஒரு கட்டாயக் கடமையாகும். நியாயமான காரணமின்றி ஒருவர் ரமழானில் நோன்பை விட்டுவிடுவது பெரும் பாவம் என்ற கருத்தை இமாம்கள் கொண்டுள்ளனர். நோன்பு கடமை என்ற கருத்தை அல்குர்ஆன் பின்வருமாறு வலியுறுத்துகின்றது.

''ஈமான் கொண்டோர்களே! உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் (அது) விதிக்கப்பட்டுள்ளது (அதன் மூலம்) நீங்கள் இறையச்சமுடையோர் ஆகலாம்'' (2 அல் பகறா :183)



''ரமழான் மாதம் எத்தகையதென்றால் அதில் தான் மனிதர்களுக்கு (முழுமையான வழிகாட்டியாகவும், தெளிவான சான்றுகளைக் கொண்டதாகவும் (நன்மை - தீமை)களைப் பிரித்தறிவிப்பதுமான அல் குர்ஆன் இறக்கியருளப் பெற்றது. ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ, அவர் அம்மாதம் நோன்பு நோற்க வேண்டும். எனினும் எவர் நோயாளியாகவோ அல்லது பயணத்திலோ இருக்கிறாரோ (அவர் அக்குறிப்பிட்ட நாட்களின் நோன்பை) வேறு நாட்களில் நோற்க வேண்டும். அல்லாஹ் உங்களுக்கு இலகுவானதை நாடுகிறானே தவிர, உங்களுக்கு சிரமமானதை அவன் நாடவில்லை. குறிப்பிட்ட நாட்கள் (நோன்பில் விடுபட்டுப் போனதைப்) பூர்த்தி செய்யவும் உங்களுக்கு நேர்வழி காட்டியதற்காக அல்லாஹ்வின் மகத்துவத்தை நீங்கள் போற்றி நன்றி செலுத்துவதற்காகவுமே (அல்லாஹ் இதன் மூலம் நாடுகிறான்)'' (2 அல் பகறா :185)

**நோன்பு பல்வேறு வழிகளில் சிறப்புப் பெறுகிறது:**

### *1. மறுமையில் மன்றாடக் கூடியது:*

*''நோன்பும் அல்குர்ஆனும் அடியானுக்காக மறுமையில் மன்றாடும். என் இரட்சகனே! பகலில் இவனை உணவை விட்டும் ஆசைகளை விட்டும் தடுத்தேன். இவனது விடயத்தில் எனது பரிந்துரையை ஏற்றுக்கொள்!'' என நோன்பு கூறும். இரவில் இவனைத் தூக்கத்தை விட்டும் தடுத்தேன். இவனது விடயத்தில் எனது பரிந்துரையை ஏற்றுக்கொள்!'' என அல்குர்ஆன் கூறும். அவ்விரண்டினதும் பரிந்துரைகள் ஏற்கப்படும்'' (அஹ்மத்)*

### *2. பாவங்களுக்கு மன்னிப்பையும் பரிகாரத்தையும் பெற்றுத்தரக் கூடியது:*

*''யார் ரமழானில் ஈமானுடனும் அல்லாஹ்விடத்தில் கூலியை எதிர்பார்த்த நிலையிலும் நோன்பு நோற்கிறாரோ அவரது முன்னைய பாவங்கள் மன்னிக்கப்படும்'' (புஹாரி, முஸ்லிம்)*

### 3. கணக்கற்ற கூலியைப் பெற்றுத்தரக் கூடியது:

''மனிதனின் செயல்கள் அனைத்துக்கும் பன்மடங்கு கூலி வழங்கப்படும். ஒரு நன்மைக்குப் பத்து முதல் எழுநூறு மடங்கு வரை கூலி வழங்கப்படும். நோன்பைத் தவிர. அது எனக்குரியது. அதற்குரிய கூலியை நானே வழங்குகிறேன். அவன் தனது ஆசையையும் உணவையும் எனக்காக விட்டுவிடுகிறான்'' என அல்லாஹ் கூறுவதாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டார்கள்.'' (புஹாரி, முஸ்லிம்)

### 4. ஈருலக சுபீட்சத்துக்கும் வழிவகுக்கக் கூடியது:

''நோன்பாளிக்கு இரு சந்தோஷங்கள் உள்ளன. ஒன்று நோன்பு திறக்கும்போது அடையும் சந்தோஷம்; மற்றையது தன் இரட்சகனைச் சந்திக்கும்போது அடையும் சந்தோஷம்'' (புஹாரி, முஸ்லிம்)

### 5. சுவனத்தில் விஷேட வாயிலைப் பெற்றுத்தரக் கூடியது:

''சுவனத்தில் ரய்யான் என அழைக்கப்படும் ஒரு வாயில் உண்டு. மறுமையில் நோன்பாளிகள் அவ்வாயிலினூடாக சுவனம் நுழைவர். அவர்களைத் தவிர வேறு யாராலும் அவ்வாயிலினால் சுவனம் நுழைய முடியாது. நோன்பாளிகள் எங்கே? என அழைப்பு விடுக்கப்படும். அவர்கள் எழுந்து சுவனத்தில் நுழைவர். அவர்கள் நுழைந்தவுடன் அவ்வாயில் மூடப்பட்டுவிடும். அவ்வாயிலினால் வேறு எவரும் உட்புக முடியாது'' (புஹாரி, முஸ்லிம்)

## நோன்பினால் கிட்டும் பயன்கள்

### 1. ஆன்மீக விருத்தி:

மனிதன் ஆன்மீக ரீதியில் தன்னை வளர்த்துக்கொள்வதற்கான சூழல் நிலவும் மாதமே ரமழான் மாதமாகும். அம்மாதத்தில்,

- சுவன வாயில்கள் திறக்கப்படுகின்றன.
- சுவனம் அலங்கரிக்கப்படுகின்றது.
- நரக வாயில்கள் மூடப்படுகின்றன.
- ஷைத்தான்கள் விலங்கிடப்படுகின்றன.
- மலக்குகள் நோன்பாளிகளுக்காகப் பாவமன்னிப்புக் கோருகின்றனர்.
- நோன்பாளிகளின் துஆ அங்கீகரிக்கப்படுகின்றது.
- ஆயிரம் மாதங்களை விட சிறந்த இரவு ரமழான் மாதத்திலேயே உள்ளது.
- நரக விடுதலை கிட்டுகிறது.

இச்சூழலை நன்கு பயன் படுத்துவோர் இம்மாதத்தில் அதிக மாக அல்குர்ஆன் ஓதுகின்றனர்; அதிகமாக திக்ர் செய்கின்றனர்; இரவில் நின்று வணங்குகின்றனர்; கொடை கொடுக்கின்றனர்; உறவினர் களைக் கவனிக்கின்றனர். தவ்பாவில் கூடுதல் கவனம் செலுத்துகின்றனர். இவ்வாறு நன்மைகள் எனும் நறு மலர்கள் அனைத்தும் இம்மாதத்தில் பூத்துக் குலுங்குகின்றன.எனவே ஒரு முஸ்லிம் இக்காலப் பகுதியில் ஆன்மீக ரீதியில் மிகவும் உயர்ந்து நிற்கிறான்' பிரார்த்தனைகள் இறைவனால் ஏற்கப்படும் அளவுக்கு அவன் தன்னை வளர்த்துக் கொள்கிறான்.



நோன்பு காலத்தில் ஒவ்வொரு நாளும் ஒரு முஸ்லிம் ஏறத்தாழ பதின்னான்கு மணித்தியாலங்கள் உண்ணாதிருக்கிறான்; பருகாதிருக்கிறான்; ஆசைகளை விட்டும் விலகியிருக்கிறான். இப்பயிற்சி தொடர்ந்து ஒரு மாதத்துக்குக் கிடைக்கிறது. எனவே, பொறுமைக்கான நீண்டதொரு பயிற்சியாக இந்நோன்பு அமைகிறது.

''பொறுமையின் மாதத்தில் நோன்பு நோற்பதும் ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பதும் உள்ளத்தில் உள்ள அக்கினியை அழித்து விடும்.'' (இப்னு மாஜா)

### 2. அருட்கொடைகளை உணர்தல்:

மனிதன் இறைவனின் அருட்கொடைகளைத் தொடர்ந்து அனுபவிக்குபோது அவற்றின் பெறுமதியை உணர்வதில்லை. அவற்றை வழங்கிய இறைவனுக்கு நன்றி செலுத்துவதுமில்லை. நோன்பானது அருட்கொடைகள் பலவற்றை அனுபவிப்பதைத் தடுப்பதன் மூலம் அவற்றின் பெறுமதியை உணர்த்துகிறது; நன்றி செலுத்தத் தூண்டுகிறது.

### 3. ஏழைகளின் துயரத்தை விளங்குதல்:

சமூகத்தில் ஏழை, பணக்காரன் என்ற வேறுபாடின்றி அனைவருக்குமே நோன்பு விதியாக்கப்பட்டுள்ளது. எனவே, அனுபவத்தின் மூலம் பசியின் கொடுமையை செல்வந்தர்கள் புரிந்து கொள்கின்றனர்; வறுமையின் கோரப் பிடியிலிருந்து சமூகத்தைக் காக்க தம்மாலானதைச் செய்ய முன்வருகின்றனர்.

யூசுப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் எகிப்தின் நிதிமந்திரியாகப் பணிபுரியும் காலத்தில் அதிகமாக நோன்பு நோற்றார்கள். இது பற்றி அவரிடம் வினவப்பட்டபோது ''நான் வயிறார உண்டால் ஏழைகளின் பட்டினியை மறந்து விடுவேன் என அஞ்சு கிறேன்'' எனப் பதிலளித்தார்கள்.

**4. உடல் ஆரோக்கியம் கிட்டல்:**

குணப்படுத்த முடியாத சில நோய்களைக் குணப்படுத்த நோன்பு பெரிதும் உதவுவதாக மருத்துவ உலகம் கூறுகிறது.

'நீங்கள் நோன்பு பிடியுங்கள் .ஆரோக்கியம் பெறுவீர்கள்' (ஹதீஸ்)

**5. இறைவனுக்கு முழுமையாக அடிபணியப் பயிற்சி:**

வாழ்க்கையின் அனைத்துச் சந்தர்ப்பங்களிலும் இறை கட்டளைகளைச் சிரமேற் கொண்டு தொழிற்படுவது ஒரு முஸ்லிமின் சிறப்புப் பண்பாகும். இப்பண்பை வளர்க்க ஒரு நீண்ட களப்பயிற்சியை நோன்பு வழங்குகிறது.

எமது முன்னோர்கள் நோன்பு காலத்தைச் சுவனப்பாதையில் முன்னேறிச் செல்வதற்குத் தமக்குக் கிடைத்த அரிய சந்தர்ப்பமாகக் கருதிப் பயன்படுத்தினர். எனவே, நோன்பு அவர்களை மாற்றியது; அது அவர்களுக்கு இறையச்சத்தைக் கொடுத்தது; உடற் பலத்தைக் கொடுத்தது; உன்னத பண்புகளைக் கொடுத்தது.

பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்

❖ الصَّوْمُ ❖ الصِيَامُ ❖ رَمَضَانُ ❖ الرَّيَّانُ

**பயிற்சி**

1. ஸவ்ம் என்ற சொல்லின் பொருள் யாது?
2. அல்குர்ஆன் நோன்பைக் கடமையாக்கிய நோக்கம் யாது?
3. நோன்பின் சிறப்பைக் காட்டும் இரு ஹதீஸ்கள் தருக.
4. நோன்பினால் கிட்டும் லௌகீகப் பயன்கள் யாவை?
5. லைலதுல் கத்ர் இரவு பற்றி விளக்கம் தருக.

# 9

# ஹஜ்ஜும் உம்ராவும்

وَأَتِمُّوا الْحَجَّ وَالْعُمْرَةَ لِلّٰهِ...

ஹஜ்ஜையும், உம்ராவையும் அல்லாஹ்வுக்காகப் பூர்த்தி செய்யுங்கள்...
(2 அல் பகறா :196)

இஸ்லாத்தின் ஐந்து கடமைகளுள் ஒன்றாக ஹஜ் அமைகின்றது. ஹஜ் என்பது துல்ஹஜ் மாதத்தில் மக்காவுக்குச் சென்று நிறைவேற்றுகின்ற ஒரு வணக்கமாகும். ஹஜ் செய்பவர்.



- முஸ்லிமாக,
- பருவ வயதை அடைந்தவராக,
- புத்தி சுவாதீனம் உடையவராக,
- சுதந்திரமானவராக,
- தன்னையும் தன் பொறுப்பில் உள்ளவர்களையும் ஹஜ்ஜுக்குச் சென்று திரும்பும் வரை தாபரிக்கக் கூடிய பொருள்வசதி உடையவராக,
- உடற் பலமும் பாதுகாப்பான பயண வழியும் பெற்றவராக,
- மக்கா சென்று ஹஜ்ஜை நிறைவேற்றக்கூடிய கால அவகாசத்தைப் பெற்றவராக

இருத்தல் வேண்டும்.

**ஹஜ்ஜின் அர்கான்கள் (பர்ளுகள்)**

- நிய்யத் வைத்தல் (இஹ்ராம் தரித்தல்)
- துல்ஹஜ் 9ஆம் நாள் அறபாவில் தரித்தல்
- தவாபுல் இபாழாவை நிறைவேற்றல்
- ஸஃயு செய்தல்
- தலைமுடி களைதல்
- ஒழுங்குமுறையாக செய்தல்



அறபாவில் தரித்திருத்தல்

இவற்றுள் உம்றாவை நிறைவேற்றுவதற்கு அறபாவில் தரிக்க வேண்டிய அவசியமில்லை.

இஸ்லாத்தின் ஏனைய கடமைகளில் அர்கான்கள் (பர்ளுகள்) மட்டுமே உள்ளன. ஆனால் ஹஜ்ஜில் வாஜிபுகளும் உள்ளன. பர்ளு விடுபட்டால் கடமை நிறைவேறாது. ஆனால் வாஜிபுகள் விடுபட்டால் அதற்காகக் குற்றப்பரிகாரம் செய்தல் வேண்டும். இதனை பித்யா என்பர். ஓர் ஆட்டைக் குர்பான் செய்வது, ஹரமிலுள்ள ஆறு ஏழைகளுக்கு உணவு வழங்குவது, மூன்று நாட்கள் நோன்பு நோற்பது என்பவற்றுள் ஒன்றைச் செய்து பரிகாரம் பெறலாம்.

**ஹஜ்ஜின் வாஜிபுகள் வருமாறு:**

1. குறிப்பிட்ட மீக்காத்தில் நிய்யத் வைத்தல்.
   (இலங்கை ஹாஜிகள் யலம்லம் என்ற இடத்தில் நிய்யத் வைப்பர்)
2. துல்ஹஜ் பத்தாம் நாள் இரவு முஸ்தலிபாவில் தங்குதல்.
3. அய்யாமுத் தஷ்ரீக் எனப்படும் (துல்ஹஜ் 11, 12,13) ஆகிய நாட்களில் மினாவில் தங்குதல்.
4. துல்ஹஜ் பத்தாம் நாள் ஜம்றதுல் அகபாவில் ஏழு கற்களை எறிதல்.
5. அய்யாமுத் தஷ்ரீக் தினங்களில் மதியத்துக்குப் பின்னர் ஜம்ரதுல் அகபா, ஜம்ரதுல் வுஸ்தா, ஜம்ரதுல் ஊலா ஆகிய மூன்று ஜம்ராக்களிலும் ஏழேழு கற்கள் எறிதல்.
6. தவாபுல் விதாவை நிறைவேற்றுதல்.



**ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்குமான ஸுன்னத்துக்கள்:**

1. நிய்யத்துக்கு முன்பும், மக்காவுக்குள் நுழைய முன்பும், அரபா, முஸ்தலி பாக்களில் தங்க முன்பும், ஜம்ராக்களில் கல்லெறிய முன்பும், தவாப் செய்ய முன்பும் குளித்துக் கொள்ளல்
2. நிய்யத்துக்கு முன் உடம்பில் மணம் பூசிக்கொள்ளல்
3. நிய்யத்தை வாயால் மொழிதல்
4. தல்பியா ஓதுதல்
5. மக்காவுக்குள் நுழைந்ததும் தவாப் செய்தல் (தவாபுல் குதூம்)
6. துல்ஹஜ் 9 ஆம் நாள் இரவில் மினாவில் தங்குதல்
7. குறிப்பிட்ட இடங்களில் குறிப்பிட்ட துஆக்களை ஓதுதல்
8. ஸம்ஸம் நீரை அதிகமாக அருந்துதல்

**ஹஜ்ஜின் முஹர்ரமாத்கள் (ஹஜ், உம்ராவின்போது தடை செய்யப்பட்டவை):**

1. ஆண்கள் தைக்கப்பட்ட உடை அணிதல்
2. மணம் பூசுதல்
3. தலைமுடி, தாடி போன்றவற்றில் எண்ணெய் தேய்த்தல்
4. உடம்பின் எப்பாகத்திலிருந்தேனும் முடிகளைக் களைவது, நகம் வெட்டுதல்
5. மணமுடித்தல், மணமுடித்து வைத்தல்
6. தாம்பத்திய உறவில் அல்லது அது தொடர்பான செயற்பாடுகளில் ஈடுபடுதல்
7. ஆண்கள் தலையை மறைத்தல்
8. பெண்கள் முகத்தை மறைத்தல்
9. வேட்டையாடுதல்
10. ஹரத்தின் எல்லைகளுக்குள் மரங்களையோ செடிகளையோ வெட்டுதல்

இஹ்ராம் தரித்த பின் இவற்றுள் ஏதாவதொன்றைச் செய்தால் ஹஜ்ஜின் வாஜிபுகளில் ஒன்றை விட்டதற்காகக் கொடுப்பது போன்ற ஒரு பித்யா கொடுக்க வேண்டும். ஆனால் மனைவியோடு உறவு கொண்டு உம்ராவை அல்லது ஹஜ்ஜை முறித்தால் ஓர் ஒட்டகம் அல்லது மாடு அல்லது ஆடுகளைக் குர்பான் கொடுக்க வேண்டும். அந்த ஹஜ்ஜை அல்லது உம்ராவைத் தொடர்ந்து செய்துவிட்டு காலம் தாழ்த்தாது அதனைக் கழாச் செய்வதும் கடமையாகும்.

**ஹஜ்ஜையும் உம்ராவையும் மூன்று முறைகளில் நிறைவேற்றலாம்.**

1. ஹஜ்ஜை மாத்திரம் நிறைவேற்ற நிய்யத் வைப்பது. இதனை அல் இப்ராத் என்பர்.
2. ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்து நிய்யத் வைப்பது. இதனை அல்கிறான் என்பர்.
3. ஹஜ்ஜுக்கு வேறாகவும், உம்ராவுக்கு வேறாகவும் நிய்யத்து வைப்பது. இதனை அத்தமத்துஉ என்பர்.

### 4. உம்ராவை நிறைவேற்றும் முறை

உம்ரா செய்பவர் இஹ்ராம் அணிய முன்னர் நகம் வெட்டி, உரோமம் களைந்து, குளித்து, மணம் பூசி, நிய்யத் வைத்து இரண்டு ரக்அத் ஸுன்னத் தொழுகையை நிறைவேற்ற வேண்டும். (ஆண்கள் தைக்கப்படாத வெண்மையான ஆடையை அணிந்துகொள்ள வேண்டும். பெண்கள் இஸ்லாம் அங்கீகரித்த ஆடையை அணியலாம்). மக்காவில் கஃபாவை அடைந்ததும் ஹஜருல் அஸ்வத்திலிருந்து, அது முடியாதபோது அதற்கு நேராக நின்று கஃபாவை இடப்பக்கமாகக் கொண்டு ஏழுமுறை சுற்றி வர வேண்டும். இதனையே தவாப் என்பர்.

இவ்வேளை رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّار என்ற துஆவை ஓத வேண்டும். (வேறு துஆக்களையும் ஓதலாம்) தவாபை முடித்த பின்னர் கஃபாவுக்கு அருகிலுள்ள மகாமு இப்ராஹீமில் இரண்டு ரக்அத் ஸுன்னத் தொழுதுவிட்டு ஸம்ஸம் நீரை அருந்த வேண்டும். பின்னர் ஸபா குன்றுக்குச் சென்று ஸஈயை (தொங்கோட்டத்தை) ஆரம்பிக்க வேண்டும். ஸபாவிலிருந்து மர்வாவுக்கும் மர்வாவிலிருந்து ஸபாவுக்கும் ஏழுமுறை ஓட வேண்டும். இவ்வேளை தஸ்பீஹ், தஹ்மீத், தக்பீர், தஹ்லீல் போன்றவற்றை மொழியலாம். ஸபா மர்வாவில் கேட்க வேண்டிய துஆக்களும் உள்ளன. ஸஈ முடிந்த பின் தலைமுடி களைவதோடு உம்ரா நிறைவேறுகிறது.

### ஹஜ் செய்யும் முறை

துல்ஹஜ் எட்டாம் நாளோடு ஹஜ் ஆரம்பமாகின்றது. அன்று ஹாஜிகள் குளித்து, சுத்தமாகி மணம்பூசி நிய்யத்துடன் இஹ்ராம் தரித்து தங்கியிருக்கும் இடத்திலிருந்து தல்பியா முழங்கியவாறு மினாவை அடைவர். அங்கு ளுஹரையும் அஸரையும், மஃரிபையும், இஷாவையும், ஸுப்ஹையும் தொழுவர். நான்கு ரக்அத் தொழுகைகளை இரண்டு ரக்அத்தாகச் சுருக்கித் தொழுவது ஸுன்னத் ஆகும். அங்கிருந்து ஒன்பதாம் நாள் சூரியன் உதித்த பின் அரபாவுக்குச் செல்வர். அங்கு ளுஹருடன் அஸரையும் சேர்த்து சுருக்கித் தொழுவர். அதிகமான நேரங்களை நீண்ட துஆக்களில் கழிப்பர். சூரியன் மறைந்ததும் அங்கிருந்து முஸ்தலிபாவுக்கு பயணமாவர். அங்கு மஃரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுவர். இஷாவை சுருக்கித் தொழுவர். இரவில் அங்கு தரித்திருப்பர்.




பத்தாம் நாள் சுப்ஹ் தொழுகையை முஸ்தலிபாவில் நிறைவேற்றிவிட்டு மினாவுக்குப் புறப்படுவர். (ஜம்ராக்களில் எறிவதற்காகக் கற்களையும் பொறுக்கிக் கொள்வர்) மினாவிலிருந்து சென்று (ளுஹருக்கு முன்னர்) ஜம்ரதுல் அகபாவில் ஏழு கற்களை எறிவர். பின்னர் தலைமுடிகளை (பெண்கள் தலைமுடியில் சிறிதளவை) கத்தரித்துக்கொள்வர். அன்று பிறை 10 பெருநாள் தினம் என்பதால் இஹ்ராம் உடையைக் களைந்து சாதாரண உடையை அணிவர். இதன்பின் மக்கா சென்று தவாபுல் இபாழாவை நிறைவேற்றுவர். இதனைப் பிற்படுத்தியும் நிறைவேற்றலாம்.

துல்ஹஜ் 11, 12, 13 நாள்களில் ளுஹருக்குப் பின்னர் மினாவில் தங்கி மூன்று ஜம்ராக்களிலும் கல்லெறிவர். ஏற்கனவே தவாபுல் இபாழாவை நிறைவேற்றாதவர்கள் மக்கா சென்று அதனை நிறைவேற்றுவர். தவாபுக்குப் பின்னர் ஸஈ செய்ய வேண்டும். இறுதியாக மக்காவிலிருந்து ஊருக்கோ, மதீனாவுக்கோ செல்லுமுன் தவாபுல் விதாவை நிறைவேற்றுவர்.

### பயன்கள்

ஹஜ் செய்ய வசதியிருந்தும் அதனை நிறைவேற்றாதவன் யஹூதியாகவோ நஸாராவாகவோ மரணிப்பான் (திர்மிதி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டார்கள். சரியான முறையில் ஹஜ்ஜை நிறைவேற்றியவர் அன்று பிறந்த பாலகன் போல் மீள்கிறார் (புஹாரி) என்றும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டார்கள். ஹஜ்ஜுக்காக வீட்டிலிருந்து புறப்பட்டு வழியில் மரணித்துவிட்டாலும் அவருக்கு ஹஜ் செய்த நற்கூலி கிடைக்கும்.

இவை மட்டுமன்றி ஹஜ்ஜின் மூலம் ஓர் அடியான் தனது முழுமையான அடிமைத்துவத்தை அல்லாஹ்விடம் வெளிப்படுத்துகிறான். அதற்காகத் தனது நேரம்,

பொருள், உடல், உள்ளம் ஆகிய அனைத்தையும் ஈடுபடுத்துகிறான். நன்மையான காரியங்களில் நேரத்தைச் செலவிடுகிறான். இறை சிந்தனையில் இன்பம் காண்கின்றான். தக்வாவை வளர்த்துக்கொள்கிறான். சகோதர முஸ்லிம்களுடன் ஒன்றிணைகிறான். சமத்துவம், சகோதரத்துவம், ஒற்றுமை, விட்டுக்கொடுத்தல், சகித்துக்கொள்ளல், கூட்டு வாழ்வு, மறுமை நினைவு போன்றன ஹஜ்ஜின் மூலம் பயிற்றுவிக்கப்படுகின்றன.

எனவே ஹஜ் கடமையை உளத்தூய்மையுடனும், தியாகத்துடனும் நிறைவேற்றுகிற முஸ்லிம், அல்லாஹ்வின் திருப்தியைப் பெறும் நிலைக்கு உயர்ந்துவிடுகிறான். ஹஜ்ஜை ஏனைய இபாதத்துகளோடு ஒப்புநோக்கிய இமாம் அபூ ஹனீபா ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் ஹஜ்ஜானது அனைத்து இபாதத்களதும் இயல்புகளை உள்ளடக்கியதான ஒரு சிறந்த வணக்கமாகும் எனக் குறிப்பிடுகின்றார்கள்.

### பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்

❁ الإحْرَامُ ❁ العَرَفَةُ ❁ طَوَافُ الإفَاضَةِ ❁ السَّعْيُ ❁ جَمْرَةُ الْعَقَبَةِ ❁ جَمْرَةُ الوُسْطَى
❁ جَمْرَةُ الأُوْلَى ❁ طَوَافُ الْوِدَاعِ ❁ الإفْرَادُ ❁ الْقِرَانُ ❁ التَمَتُّعُ ❁ النِّيَّةُ ❁ زَمْ زَمْ
❁ الحَجَرُ الأَسْوَدُ ❁ مَقَامُ إِبْرَاهِيْم ❁ الصَفَا ❁ المَرْوَةُ ❁ التَسْبِيْح ❁ التَّلْبِيَّةُ
❁ التَّكْبِيْرُ ❁ التَّهْلِيْلُ ❁ التَّحْمِيْدُ ❁ الحَجُّ وَالعُمْرَةُ ❁ المِيْقَاتُ ❁ أيَّامُ التَّشْرِيْكِ
❁ المُحَرَّمَاتُ ❁ طَوَافُ القُدُوْمِ ❁ الفِدْيَةُ

### பயிற்சி

1. ஹஜ்ஜுக்காகத் தயாராகும் முறையைக் குறிப்பிடுக.
2. ஹஜ்ஜின் பர்ளுகளையும், வாஜிபுகளையும் வெவ்வேறாகக் குறிப்பிடுக.
3. ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்குமிடையிலான வேறுபாட்டை எடுத்துக்காட்டுக.
4. பின்வரும் சொற்களை விளக்குக.
   - இஹ்ராம்
   - மீக்காத்
   - மகாமு இப்ராஹீம்
   - ஹஜருல் அஸ்வத்

# 10

# இஸ்லாத்தின் புனிதஸ்தலங்கள்

لاَ تُشَدُّ الرِّحَالُ إلاَّ إِلَى ثَلَاثَةِ مَسَاجِدَ: مَسْجِدِيْ هَذا ، وَالْمَسْجِدُ الحَرَام ، وَالْمَسْجِدُ الأَقْصَى

''மூன்று புனிதஸ்தலங்களுக்கு மாத்திரமே புனித யாத்திரை மேற்கொள்ள முடியும். என்னுடைய இப்பள்ளி, மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுல் அக்ஸா.'' (புகாரி)

மஸ்ஜித்கள் இஸ்லாத்தின் புனிதஸ்தலங்களாகும். இவற்றின் முக்கியத்துவம் பற்றி அல்குர்ஆனிலும் ஹதீஸிலும் பல இடங்களில் கூறப்பட்டுள்ளன. இப்புனிதஸ்தலங்களுள் மூன்று (புனிதஸ்தலங்கள்) இஸ்லாத்தில் மிகவும் முக்கியத்துவம் பெறுகின்றன. அவை கஃபதுல்லாஹ், மஸ்ஜிதுல் அக்ஸா, மஸ்ஜிதுன் நபவி ஆகியனவாகும். இம்மூன்று புனிதஸ்தலங்களினதும் சிறப்பு பற்றி அல்குர்ஆனும் ஹதீஸும் சிலாகித்துக் கூறியுள்ளன. இம்மூன்று புனிதஸ்தலங்களும் முஸ்லிம் உம்மத்தின் உயிரோட்டத்துடன் பின்னிப் பிணைந்தவையாகும். ஆகவே அவற்றின் முக்கியத்துவத்தையும் அவற்றின் பால் எமக்குள்ள பொறுப்புக்களையும் அறிந்து செயற்படுவது சன்மார்க்கக் கடமையாகும்.

இம்மூன்று புனிதஸ்தலங்களும் கீர்த்தி மிக்க வரலாற்றுச் சிறப்பைப் பெற்றிருப்பதுடன் சமூகத்தில் அவற்றின் செல்வாக்கு வெவ்வேறு விதமானதாகும். அவற்றின் ஆன்மீக அந்தஸ்து பற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வாறு கூறியுள்ளார்கள்.

''மஸ்ஜிதுல் ஹராமில் நிறைவேற்றப்படும் ஒரு தொழுகை ஓர் இலட்சம் தொழுகைக்குச் சமமானதாகும். எனது இப்பள்ளியில் நிறைவேற்றப்படும் ஒரு தொழுகை ஆயிரம் தொழுகைக்குச் சமனாகும். மஸ்ஜிதுல் அக்ஸாவில் நிறைவேற்றப்படும் தொழுகை ஐந்நூறு தொழுகைக்குச் சமனாகும்.'' (புகாரி)

அத்துடன் யாத்திரைக்குரிய புனிதஸ்தலங்களாக இம்மூன்று இடங்களை மாத்திரம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டுள்ளமை ஏனைய மஸ்ஜித்களில் இருந்து இவை முதன்மை பெறுவதற்குக் காரணமாகின்றது.

''மூன்று புனிதஸ்தலங்களுக்கு மாத்திரமே புனித யாத்திரை மேற்கொள்ள முடியும். என்னுடைய இப்பள்ளி, மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுல் அக்ஸா.'' (புஹாரி)

இம்மூன்று புனிதஸ்தலங்களின் சிறப்பையும் முக்கியத்துவத்தையும் தனித் தனியாக நோக்குவோம்.

### *1. கஃபதுல்லாஹ்*

கஃபதுல்லாஹ் இஸ்லாத்தில் முதல் அந்தஸ்தைப் பெற்ற இறை இல்லமாகும். உலகில் முதன் முதலாக அமைக்கப்பட்ட இறை இல்லமும் இதுவே. ''(இவ்வுலகில் இறைவனை வணங்குவதற்கென) மனிதர்களுக்காக அமைக்கப்பட்ட மஸ்ஜித்களில் முதன்மையானது நிச்சயமாக பக்காவில் (மக்காவில்) இருப்பதுதான். அது மிக்க பாக்கியமுள்ளதாகும். உலகத்தாருக்கு நேரான வழியை அறிவிக்கக் கூடியதாகவும் இருக்கின்றது.'' (3 ஆல இம்ரான் :96)

கஃபாவை முதன் முதலாக ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கட்டினார்கள் என்றே வரலாறு கூறுகிறது. அதற்கும் முன்னர் மலக்குகள் கட்டினார்கள் என்றும் பொதுவானதொரு நம்பிக்கையுண்டு. நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களது காலத்தில் ஏற்பட்ட வெள்ளத்தினால் இடிந்து பிற்காலத்தில் அவ்விடம் மணல் திட்டுப் போன்று உயர்ந்திருந்தது. அவ்விடத்திலேயே அல்லாஹ்வின் கட்டளையின் பிரகாரம் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மனைவி ஹாஜரையும் மகன் இஸ்மாஈலையும் பலஸ்தீனத்தில் இருந்து அழைத்து வந்து, தனியாக விட்டு விட்டு



*திரும்பிச் சென்றார்கள். அருள்மிக்க இக்குடும்பத்தின் தியாகச் சிறப்பால் அல்லாஹ் அங்கு ஸம்ஸம் எனும் வற்றாத நீரூற்றை அருளினான். அந்நீரூற்றின் காரணமாக அச்சூழலில் மக்கள் குடியேறி வாழவும் ஆரம்பித்தனர்.*

*இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நான்கு முறை மக்காவிற்கு வந்து சென்றுள்ளார்கள். நான்காவது முறை வந்த போதே தந்தையும் மகனும் சேர்ந்து கஃபாவை அதற்குரிய இடத்தில் மீண்டும் கட்டியதாக குறிப்பிடப்பட்டுள்ளது.*

*கஃபா அமைந்துள்ள மக்கா நகர்மீதும் அதன் மக்கள் மீதும் மிகுந்த அன்பு வைத்திருந்த நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவ்வூருக்காகவும் அதன் மக்களுக்காகவும் அல்லாஹ்விடம் அருள் வேண்டிப் பிரார்த்தித்தார்கள். இது அல்குர்ஆனில் (2 அல் பகறா :126) இல் இடம்பெற்றுள்ளது.*

*இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஒரு கட்டின் மேல் நின்று கொண்டு கஃபாவின் சுவர்களை எழுப்பினார்கள். அக்கட்டின் மேல் பதியப்பட்டுள்ள இப்ரஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காற்பாதத்தை இன்றும் காணக்கூடியதாக உள்ளது. அவ்விடத்தை தொழுமிடமாகக் கொள்ளுமாறு அல்லாஹ் கூறுகின்றான். (2 அல் பகறா :125) இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் காலம் முதல் ஏகத்துவத்தின் சின்னமாகக் கஃபா விளங்கியது.*

*கி.பி. 440 இல் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வழித்தோன்றலாகிய அத்னானின் பரம்பரையில் வந்த குஸை என்பவர் மக்காவைக் கைப்பற்றியதிலிருந்து மக்காவின் தலைமைத்துவம் குறைஷியர் கைக்கு மாறியது. பின்னர் ஹாஷிம் பரம்பரையில் வந்த அப்துல் முத்தலிப் மிகுந்த செல்வாக்குப் பெற்றதனால் கஃபாவின் நிருவாகம் அவருக்குச் சென்றது. பல நூற்றாண்டுகளுக்கு முன் ஜூர்ஹூம் கோத்திரத்தார் முற்றாக மூடிவிட்டுச் சென்ற ஸம்ஸம் கிணற்றை இவர்தான் மீண்டும் கண்டுபிடித்தார். இவரது காலத்திலேயே ஆப்ரஹாவின் யானைப்படைச் சம்பவமும் நிகழ்ந்தது.*

*யானைச் சம்பவம் நிகழ்ந்து 30 வருடங்களின் பின் மீண்டும் கஃபாவைப் புனர்நிர்மாணம் செய்யும் பணி ஆரம்பிக்கப்பட்டது. முடிவில் ஹஜருல் அஸ்வத் கல்லை உரிய இடத்தில் வைப்பது யார் எனும் விடயத்தில் குறைஷியரிடையே ஏற்பட்ட தகராறின்போது நடுவராக நியமிக்கப்பட்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கரத்தால் அது வைக்கப்பட்டமை குறிப்பிடத்தக்க விடயமாகும்.*

*(ஹிஜ்ரத்தின் பின்) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் ஸஹாபாக்களும் தமது தொழுகைகளை பலஸ்தீனத்தில் இருக்கும் மஸ்ஜிதுல் அக்ஸாவை நோக்கியே தொழுது வந்தனர். ஆயினும் மக்காவில் உள்ள கஃபாவை நோக்கித் தொழ வேண்டும் என்ற பேரவா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தே இருந்தது. எனவே அல்லாஹ் கஃபாவை நோக்கித் தொழுமாறு கட்டளையிட்டான். இது பற்றி அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:*

‘‘(நபியே) உங்களுடைய முகம் (பிரார்த்தனை செய்து) அடிக்கடி வானத்தை நோக்குவதை நாம் காண்கிறோம். ஆதலால், நீங்கள் விரும்பும் கிப்லா(வாகிய மக்கா)வின் பக்கமே நாம் உங்களை நிச்சயமாகத் திருப்புகின்றோம். எனவே நீங்கள் (தொழும்போது மக்காவிலுள்ள) மஸ்ஜிதுல் ஹராமின் பக்கமே உங்களுடைய முகத்தைத் திருப்புங்கள்...’’ (2 அல் பகறா :144)

*ஹிஜ்ரி 8ல் மக்காவை வெற்றி கொண்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கு ஏகத்துவத்தை நிலை நிறுத்தினார்கள். அன்றிலிருந்து இன்று வரை கஃபதுல்லாஹ் புனித ஹஜ் கடமையின் தலமாகவும் முஸ்லிம் உம்மத்தின் இதயமாகவும் இருந்து வருகிறது.*

## *2. அல் மஸ்ஜிதுல் அக்ஸா*

*பலஸ்தீனத்தில் அமைந்துள்ள மஸ்ஜிதுல் அக்ஸாவும் முஸ்லிம்களின் புனிதஸ் தலமாகும். இதன் வரலாறும் கஃபாவைப் போன்றே பழமையானது. முதலில் ஆதம் அலைஹிஸ்ஸலாம் கட்டிய இம்மஸ்ஜித் தூர்ந்து போயிருந்தது. அதன் பின் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அதனைப் புனர்நிர்மாணம் செய்தார்கள் என்பதே பெரும்பாலானோரது கருத்தாகும். பின்வரும் ஹதீஸும் அதை உறுதி செய்கின்றது.*

*அல் மஸ்ஜிதுல் அக்ஸா பற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வினவப்பட்டதற்கு பின்வருமாறு பதில் கூறினார்கள்: அபூதர் அல் கிபாரி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்.*



நான் அல்லாஹ்வின் தூதரிடம் ''அல்லாஹ்வின் தூதரே பூமியில் முதலில் கட்டப்பட்ட பள்ளிவாசல் எது? என வினவினேன். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல் மஸ்ஜிதுல் ஹராம் எனப் பதில் கூறினார்கள். பின்னர் எது எனக் கேட்டேன். அதற்கு அல் மஸ்ஜிதுல் அக்ஸா எனப் பதில் கூறினார்கள். அவ்விரண்டுக்கும் இடையில் உள்ள கால இடைவெளி என்ன என்று வினவினேன். அதற்கு நாற்பது வருடங்கள் எனப்பதில் கூறினார்கள்''. (புஹாரி)

அல்லாஹ் மஸ்ஜிதுல் அக்ஸாவை மையமாக வைத்து அதனைச் சூழவுள்ள பிரதேசங்களையும் புனித பூமியாக ஆக்கியுள்ளான். வரலாற்றில் இப்பிரதேசங்கள் ஷாம் எனும் தேசத்தினுள் உள்ளடக்கப்படுகின்றன.

அல் மஸ்ஜிதுல் அக்ஸாவும் ஷாம் தேசமும் சிறப்புப் பெறக் காரணம் அது அதிகமான நபிமார்கள் வாழ்ந்து மரணித்த இடமாகும். இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் மஸ்ஜிதுல் அக்ஸாவைக் கட்டியபின் இஸ்ஹாக் அலைஹிஸ்ஸலாம், யஃகூப் அலைஹிஸ்ஸலாம் ஆகியோர் அதனை நிர்வகித்தனர். யூஸுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அவர்களது சகோதரர்கள் செய்த துரோகத்தின் விளைவாக யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களது குடும்பம் எகிப்தில் குடியேறி வாழ வேண்டிய நிலை தோன்றியது. அதனால் மஸ்ஜிதுல் அக்ஸாவையும் புனிதத் தேசத்தையும் அவர்கள் இழந்தார்கள். மூஸா அலைஹிஸ்ஸலாம் முதல் பல நபிமார்கள் அதை மீட்க முயற்சித்தும் சாத்தியமாகவில்லை. பின்னர் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களே மீட்டெடுத்தார். சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மஸ்ஜிதுல் அக்ஸாவை சிறப்பான முறையில் மீளக்கட்டி விசாலப்படுத்தினார். அவர்களுக்குப் பின் ஈஸா அலைஹிஸ்ஸலாம் வரும் வரை பல நபிமார்கள் மஸ்ஜிதுல் அக்ஸாவில் தொழுதும் மக்களுக்குப் போதனை செய்தும் வந்துள்ளனர்.

கி.பி. 621 இல் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மிஃராஜ் சம்பவம் நிகழ்கிறது. அல்லாஹ்வைத் தரிசிப்பதற்காக நிகழ்ந்த இப் பயணத்தின் முதற்கட்டம் மக்காவில் இருந்து மஸ்ஜிதுல் அக்ஸாவுக்கு சென்றதாகும். அங்கு முன்னைய நபிமார்களுக்கு தலைமை தாங்கித் தொழுகை நடாத்தும் ஓர் அரிய சந்தர்ப்பத்தை அல்லாஹ் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஏற்படுத்திக் கொடுத்தான். அதன்பிறகே ஸித்ரதுல் முன்தஹாவில் அல்லாஹ்வுடனான சந்திப்பு நிகழ்ந்தது. அப்போது தொழுகையைப் பரிசாகப் பெற்ற நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மஸ்ஜிதுல் அக்ஸாவே கிப்லாவாக விதிக்கப்பட்டது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து மஸ்ஜிதுல் அக்ஸாவுக்குச் சென்ற பயணம் இஸ்ரா எனப்படுகிறது. இது பற்றி இஸ்ரா அல்லது பனூ இஸ்ராயீல் என்ற அத்தியாயத்தின் முதல் வசனம் தெளிவாகக் குறிப்பிடுகிறது. இவ்வசனத்தை சில அறிஞர்கள் விளக்குகையில் நபிமார்களின் பூமியாகிய பலஸ்தீன் இதன் பிறகு முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கே சொந்தமாகிறது என்பதை உறுதிப்படுத்தவே இஸ்ரா நிகழ்ந்தது என்று கூறுகின்றனர்.

கி.பி. 632 இல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்தைத் தொடர்ந்து மதீனாவைத் தலைநகராகக் கொண்டெழுந்திருந்த இஸ்லாமியப் பேரரசுக்கு உரோமர்களும் பாரசீகர்களும் அச்சுறுத்தலாய் இருந்தனர். எனவே இவர்களுக்கெதிராக முதல் கலீபா அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தயாரித்தனுப்பிய படைகள் 2 ஆம் கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு காலத்தில் பல்வேறு வெற்றிகளைச் சாதித்தது. அதில் ஒன்று தான் பலஸ்தீன வெற்றியாகும். இது கிபி 636 இல் (ஹி:15) இடம்பெற்றது. வெற்றியைத் தொடர்ந்து குத்ஸ் நகரைப் பொறுப்பேற்பதற்காக உமர் ரழியல்லாஹு அன்ஹு அழைக்கப்பட்டு அவர்களிடம் அதன் உரிமை ஒப்படைக்கப்பட்டது. அப்போது கிறிஸ்தவர்களும் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அது இன்றும் உமர் சாசனம் என்ற பெயரில் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

மஸ்ஜிதுல் அக்ஸாவுக்குரிய இடம் அசுத்தமாக இருப்பதை அறிந்த உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அவ்விடத்துக்குச் சென்று தனது கைகளாலேயே முதலில் அவ்விடத்தைச் சுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். பின் அங்கே இரு ரக்அத்துக்கள் தொழுதார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் அங்கு தொழுத முதல் மனிதர் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களே ஆவார். அங்கே அதான் கூறிய முதல் மனிதர் பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்களாவார். அதனைத் தொடர்ந்து உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் பணிப்புரையின் பேரில் மூவாயிரம் பேர் தொழக்கூடிய அளவு விசாலமானதாக மஸ்ஜிதுல் அக்ஸா கட்டப்பட்டது.

கி.பி.1088 முதல் கி.பி. 1290 வரை முஸ்லிம்களுக்கும் ஐரோப்பிய கிறிஸ்தவர்க்கும் இடையில் புனித பூமியெங்கும் சிலுவைப் போர்கள் இடம் பெற்றன. சிலுவை வீரர்களிடமிருந்து அல் மஸ்ஜிதுல் அக்ஸாவையும் பலஸ்தீனையும் மீட்டுத்தந்த தலைவர்களாக இஸ்லாமிய வரலாற்றில் ஸலாஹுத்தீன் ஐயூபி, மஹ்மூத் அல் குதுஸ் ஆகியோர் கௌரவிக்கப்படுகின்றனர். இவ்விருவரும் எகிப்தை ஆண்ட ஆட்சியாளர்களாவர்.

1924ல் இஸ்லாமிய கிலாபத் வீழ்ச்சியடைந்ததைத் தொடர்ந்து அரபு நாடுகள் துண்டாடப்பட்டன. 1948ல் பலஸ்தீனத்தில் இஸ்ரேல் எனும் நாடு உருவாக்கப்பட்டது. 1967ல் இஸ்ரவேலர் மஸ்ஜிதுல் அக்ஸாவுக்குத் தீ வைத்தனர். அப்போது சுல்தான் நூருத்தீன் ஸன்கி என்ற மன்னரின் வரலாற்றுச் சிறப்பு மிக்க மின்பர் மேடையும் தீக்கிரையாகியது.

மறுமை நாளின் மிக முக்கியமான அடையாங்களுள் முஸ்லிம்கள் தஜ்ஜாலுடன் யுத்தம் செய்வதும் ஒன்றாகும். அப்போது ஈஸாஅலைஹிஸ்ஸலாம் அவர்கள் வானத்தில் இருந்து இறங்கி வந்து முஸ்லிம்களுடன் சேர்ந்து போரிட்டு தஜ்ஜாலைக் கொலை செய்வார்கள். ஹதீஸ் ஆதாரங்களின் படி இந்நிகழ்வு அல் மஸ்ஜிதுல் அக்ஸா அமைந்துள்ள புனித பூமியிலேயே நிகழும் என்பது கவனிக்கத்தக்க விடயமாகும்.

## மஸ்ஜிதுன் நபவி

இஸ்லாத்தில் இரண்டாவது ஆன்மீக அந்தஸ்த்தைப் பெறும் மஸ்ஜிதுன் நபவியின் வரலாறு முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஹிஜ்ரத்தைத் தொடர்ந்தே ஆரம்பமாகின்றது. கி.பி. 622 செப்டம்பர் 27இல் மதீனாவை வந்தடைந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அபூ ஐயூப் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வீட்டில் இருந்து கொண்டு மஸ்ஜிதுன் நபவியைக் கட்டுவதற்கான வேலைகளை ஆரம்பித்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவினுள் நுழைந்த போது அவர்களது ஒட்டகம் முதன்முதலாக மண்டியிட்ட இடமே பள்ளிவாசல் கட்டுவதற்குத் தெரிவு செய்யப்பட்டது. அவ்விடம் இரு அநாதைகளுக்குச் சொந்தமானதாக இருந்தது. அவர்களிடமிருந்து அதை விலைக்கு வாங்கி கட்டிடப்பணியை ஆரம்பித்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டிட வேலையில் தோழர்களுடன் சேர்ந்து தானும் கடுமையாக உழைத்தார்கள். பள்ளியினுடைய வாயிலின் இரு ஓரங்களும் கற்களால் ஆக்கப்பட்டன. அதன் சுவர்கள் கல்லாலும் மண்ணாலும் ஆக்கப்பட்டு பேரீத்த மரத்தினால் தூண்கள் போடப்பட்டு அவற்றின் கீற்றுகளால் முகடுகள் அமைக்கப்பட்டன.



ஆரம்பத்தில் மஸ்ஜிதுன் நபவி 35 மீற்றர் நீளமும் 30 மீற்றர் அகலமும் மூன்று வாயில்களையும் கொண்டதாகவே கட்டப்பட்டது. மஸ்ஜிதோடு இணைத்து அதன் ஒருபுறத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனைவி மார்களுக்காகச் சில அறைகள் அமைக்கப்பட்டன. கட்டிட வேலை முடிந்த பின் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அபூ ஐயூப் அல் அன்ஸாரி ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வீட்டில் இருந்து இவ்வறைகளில் குடியேறினார்கள். அதன் பின் வீடுவாசலற்ற ஏழைத் தோழர்களுக்காகவும் ஒரு பகுதி ஒதுக்கப்பட்டது. இவர்கள் அஸ்ஹாபுஸ் ஸுப்பா (திண்ணைத் தோழர்கள்) என அழைக்கப்பட்டனர். இவ்வாறு மிக எளிமையாக ஆரம்பிக்கப்பட்ட மஸ்ஜிதுன் நபவியின் சிறப்பைப் பற்றி அல்லாஹ் பின்வருமாறு புகழ்ந்துரைக்கின்றான்.

''ஆகவே (நபியே) நீங்கள் ஒருகாலத்திலும் (அங்கு போய்) அதில் நிற்க வேண்டாம். ஆரம்ப தினத்திலேயே (அல்லாஹ்வின்) பயத்தின் மீது (பரிசுத்தமான எண்ணத்துடன்) அமைக்கப்பட்ட மஸ்ஜித் தான் நீங்கள் நின்று தொழ(வும் தொழ வைக்கவும்) மிகத் தகுதியுடையது. அதிலிருக்கும் மனிதர்களும் பரிசுத்தவான்களாக இருப்பதையே விரும்புகின்றனர். அல்லாஹ்வும் (இத்தகைய) பரிசுத்தவான்களையே நேசிக்கிறான்'' (9 அத் தௌபா :108)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது காலத்தில் மஸ்ஜிதுன் நபவி தொழுகைக்கான இடமாக மாத்திரம் இருக்கவில்லை. கல்வி புகட்டும் பாடசாலையாக, மக்களது பிரச்சினைகளை விசாரித்து தீர்ப்பு வழங்கும் நீதி மன்றமாக, நாட்டு விவகாரங்களுக்காக மந்திராலோசனை நடத்தும் பாராளுமன்றமாக, ஸக்காத்தையும் ஏனைய வரிகளையும் சேமித்து விநியோகிக்கும் களஞ்சியமாக, இராணுவ நடவடிக்கைகளைத் திட்டமிட்டு வீரர்களைப் பயிற்றுவிக்கும் இராணுவ முகாமாக, விருந்தினர்களையும் தூதுவர்களையும் வரவேற்கும் வரவேற்புக்கூடமாக என்று அதன் பங்களிப்புக்களின் பட்டியல் நீண்டு செல்கிறது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது காலத்தில் கைபர் யுத்தத்தைத் தொடர்ந்து மஸ்ஜிதுன் நபவியை விரிவுபடுத்த வேண்டிய தேவை ஏற்பட்டது. அப்போது நீளத்தால் 15 மீட்டரும் அகலத்தால் 20 மீட்டரும் மேலதிகமாக சேர்க்கப்பட்டு 2500மீட்டர் பரப்புடையதாக விசாலிக்கப்பட்டது. பின்னர் உமர் ரழியல்லாஹு அன்ஹு, உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு ஆகியோரும் உமையா, அப்பாஸிய, மம்லூக்கிய, உஸ்மானிய ஆட்சியாளர்களும் இறுதியாக ஸஊதி மன்னர் பஹத் பின் அப்துல் அஸீஸ் அவர்களும் தேவைக்கேற்ப அதை விரிவுபடுத்தி இன்று உலகிலேயே மிகப் பெரிய பள்ளிவாசலாக மஸ்ஜிதுன் நபவி திகழ்கிறது.

மேலே பார்த்த புனிதஸ்தலங்களின் சமூகப் பங்களிப்பையும் அவற்றின் வரலாற்றுப் பின்னணியையும் நோக்குகையில் மூன்று புனிதஸ்தலங்களும் வெவ்வேறு வகையான சிறப்பம்சங்களைக் கொண்டுள்ளதை அவதானிக்க முடிகிறது.

#### பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்

۞ القُضَاعَة ۞ المِعْرَاجُ ۞ سِدْرَةُ المُنْتَهَى ۞ الإِسْرَاءُ ۞ أَصْحَابُ الصُّفَّةِ ۞ كَعْبَةُ اللَّهِ ۞
۞ المَسْجِدُ الأَقْصَى ۞ المَسْجِدُ النَّبَوِيّ ۞ الْهُبَلُ ۞ الجُرْهُمُ ۞ صَلاَحُ الدِّيْن
۞ مَحْمُودُ القُطْزْ ۞ نُورُ الدِّيْن الزَّنْكِي

**பயிற்சி**

1. மூன்று புனிதத் தலங்கள் பற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய விடயங்கள் எவை?
2. புனித கஃபா பற்றி அல்குர்ஆன் என்ன கூறுகின்றது?
3. புனித கஃபாவின் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுக.
4. மஸ்ஜிதுன் நபவியின் சிறப்புக்கள் சிலவற்றைத் தருக.
5. மஸ்ஜிதுல் அக்ஸா பற்றி நீர் அறிந்தவற்றைச் சுருக்கமாகத் தருக.

# 11

# நற்பண்புகள் தொடர்பான இஸ்லாமியக் கண்ணோட்டம்

وَإِنَّكَ لَعَلَىٰ خُلُقٍ عَظِيمٍ

''மேலும், (நபியே) நிச்சயமாக நீர் (மிக உயர்ந்த) மகத்தான நற்குணம் உடையவராக இருக்கின்றீர்.'' (68 அல் கலம் :4)

நற்பண்பு என்பது நாம் அடிக்கடி உச்சரிக்கும் ஒரு வார்த்தையாகும். மனித சமூகத்தின் பல்வேறு மட்டத்தைச் சார்ந்தவர்களும் இது தொடர்பாகப் பேசுவதையும் எழுதுவதையும் போதனைகள் செய்வதையும் நாளாந்தம் நாம் அவதானிக்கலாம். இது, நற்பண்பு என்பது சமூகத்தில் காணப்பட வேண்டிய அத்தியவசியமான ஓர் அம்சம் என்பதற்கான ஒரு சான்றாகும்.

நற்பண்பு என்பதனை ஒழுக்கம் என்றும் அழைப்பதுண்டு. ஒழுகி நடக்க வேண்டியவை - கடைப்பிடிக்க வேண்டியவை என இதற்கு விளக்கமளிக்கலாம். ஒழுக்கம், நற்பண்பு முதலான தமிழ் வார்த்தைகளுக்கு நிகராக அரபு மொழியில் ஆதாப், அக்லாக், ஸுலூக் போன்ற வார்த்தைகள் பயன்படுத்தப்படுகின்றன.

## நற்பண்பின் முக்கியத்துவம்

இஸ்லாம் அகாயித், இபாதாத், முஆமலாத், முனாகஹாத், ஜினாயாத், அக்லாக் என பல்வேறு அம்சங்களைக் கொண்டிருந்தாலும், அக்லாக் ஏனைய அனைத்துப் பகுதிகளோடும் தொடர்புபட்டிருப்பதுடன் அவை அனைத்து அம்சங்களையும் அலங்கரிப்பாதகவும் அமைந்துள்ளது.

இஸ்லாம் நற்பண்புகளை அஹ்ஸனுல் குலுக் எனக் குறிப்பிடுகின்றது. நற்பண்புகளுக்கு முன்மாதிரியாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திகழ்வதாகவும், அவர்களையே அனைவரும் முன்மாதிரியாகக் கொள்ள வேண்டுமெனவும் அல்லாஹ் குறிப்பிடுகிறான்.

*'நிச்சயமாக நபியே நீர் மகத்தான (உயர்ந்த) பண்புகளைக் கொண்டவராக இருக்கின்றீர்.'' (68 அல்கலம் : 4)*

*'...நிச்சயமாக உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடத்தில் அழகிய முன்மாதிரிகள் இருக்கின்றன. (33 அல் அஹ்ஸாப் : 21)''*

இவ்வாறே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் நற்பண்பின் அவசியம் குறித்து சுட்டிக்காட்டி இருக்கிறார்கள்.

''நிச்சயமாக நற்பண்புகளைப் பூரணப்படுத்துவதற்காகவே நான் நபியாக அனுப்பப்பட்டுள்ளேன்'' (முவத்தா)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்வு பற்றி ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்களிடம் வினவப்பட்ட போது, ''அவர்களது பண்பாடுகள் அல்குர்ஆனாகவே இருந்தன'' (முஸ்லிம்) எனக் குறிப்பிட்டார்கள்.

இஸ்லாத்தின் பார்வையில் நற்பண்புகளைக் கடைப்பிடிப்பது ஓர் உயர்ந்த இபாதத் ஆகும். இதனைப் பின்வரும் ஹதீஸ்கள் விளக்குகின்றன:

''மறுமை நாளில் ஒரு முஃமினின் தராசில் நல்லொழுக்கத்தை விடப் பாரமானதாக எதுவும் இருக்கப் போவதில்லை, அல்லாஹ் ஆபாசமாகவும் கடினமாகவும் பேசுகின்றவனை வெறுக்கின்றான். ஒருவர் நல்லொழுக்கத்தின் மூலமாக தொழுகை, நோன்பு ஆகிய இபாதத்துக்களை நிறைவேற்றுகின்ற ஒருவரது அந்தஸ்தை அடைகிறார்'' (அஹ்மத்)

மாறாக தீய பண்புடையோர் நரக வேதனையை அனுபவிப்பர் என்ற கருத்தையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

''... ஓர் அடியான் தனது தீய நடத்தை காரணமாக நரகில் மிகவும் கீழான நிலையை அடைந்து கொள்வான்.'' (தபரானீ)

இஸ்லாம் நல்லொழுக்கத்தை ஈமானின் ஒரு பகுதியாகக் கருதுகிறது. ஒருவனிடம் நற்பண்புகள் காணப்படுகின்ற போதே அவனது ஈமான் பரிபூரணமடைகின்றது. இக்கருத்தைப் பின்வரும் ஹதீஸ்கள் விளக்குகின்றன.

''நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஈமானில் பூரணத்துவம் மிக்க மனிதர் யார்?'' என வினவப்பட்டது. அதற்கு, ''அவர்களுள் நற்பண்புடையவரே'' எனப் பதிலளித்தார்கள். (தபரானீ)

''அல்லாஹ்வின் அடியார்களில் யார் அல்லாஹ்வுக்கு மிகவும் நெருக்கமானவர் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வினவப்பட்ட போது, சிறந்த ஒழுக்கமுடையோரே'' எனப் பதிலளித்தார்கள்.(இப்னு ஹிப்பான்)

''மனிதர்களுக்கு வழங்கப்பட்டவைகளுள் மிகவும் சிறந்தது எது எனக் கேட்கப்பட்டபோது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சிறந்த ஒழுக்கப் பண்புகள் எனப் பதிலளித்தார்கள்'' (திர்மிதி)

## நற்பண்பின் அவசியம்

ஒழுக்கம், ஒழுக்கக் கோவை, ஒழுக்கக் கோட்பாடு, ஒழுக்கக் கல்வி முதலான அம்சங்கள் மனித சமூகத்துக்கு மட்டுமே தேவையானவை. மனிதனுக்குச் சிந்தனைச் சுதந்திரம் உண்டு. பகுத்தறிவும் உள்ளுணர்வும் உண்டு. அவை, மனிதன் பெற்ற அருட்கொடைகளாகும். அவற்றை மனிதன் தவறான முறையில் பயன்படுத்தாமல் இருப்பதற்காக அல்லாஹ் ஒழுக்கம் எனும் நன்னெறியை விதியாக்கியுள்ளான்.

மனிதன் அல்லாஹ்வின் கலீபாவாக (பிரதிநிதியாக)ப் படைக்கப்பட்டுள்ளதால், அவன் விதித்த கடமைகளை அவனின் பிரதிநிதியாக நின்று நிறைவேற்றுவதற்கும், உலக நிருவாகத்தைச் சீராக நடத்துவதற்கும் அவனுக்கு ஒழுக்கம் இன்றியமையாததாகின்றது.

அல்லாஹ் ஒழுக்க உணர்வை மனிதனின் இயல்பிலேயே ஏற்படுத்தி வைத்துள்ளான். இவ்வுணர்வு அவனது அடிமனதில் எப்போதும் ஊசலாடிக்கொண்டே இருக்கும். தீய சூழலால் அல்லது தீய சகவாசத்தால் ஒருவன் ஒழுக்கம் குன்றியவனாகக் காணப் பட்டாலும் கூட, அவனது உள்ளுணர்வு அவனை எச்சரித்துக்கொண்டே இருக்கும். இந்த எச்சரிக்கையை அவன் அசட்டை செய்தால், ஒழுக்கவீனனாக மாறுவான். மறுபுறமாக அதனைப் போதனையாக ஏற்றுக்கொண்டால் சிறந்த ஒழுக்க சீலனாக உயர்வான். இந்த உயர் நிலையை எய்துவதற்கு ஒழுக்கம் பற்றிய அறிவும், தெளிவும், உணர்வும், சிந்தனையும் அவனுக்கு அவசியமாகின்றன. இதனை மனிதனால் தானாகத் தேடிக்கொள்ள முடியாது.

இஸ்லாத்தின் பார்வையில் நல்லொழுக்கம் எது, தீயொழுக்கம் எது என்பதை அல்லாஹ்வும் ரஸூலுமே தீர்மானிக்க முடியும். மனிதனால் அவற்றை தீர்மானிக்க முடியாது. ஏனெனில் அவன் பலவீனமானவன். அவனது அறிவு வரையறைக்கு

உட்பட்டது. அவனது விருப்பு வெறுப்புக்கள் வேறுபட்டவை. எனவே, பலவீனம் மிக்க அவனின் பகுத்தறிவும் உள்ளுணர்வும் பலவீனமானவையே. இந்நிலையில் அவன் அல்லாஹ்வும் ரஸூலும் வரையறுத்துத் தந்துள்ள நற்பண்புகளையே பின்பற்றி நடக்க வேண்டும்.

## இஸ்லாம் கூறும் சில நற்பண்புகள்

### பொறுமை

மனித வாழ்வில் பொறுமை முக்கியமான ஒரு பண்பாகும். ஒரு முஸ்லிமின் ஈருலக வாழ்வின் வெற்றிக்கும் அது ஓர் அடிப்படையாகும். அல்குர்ஆனும் ஸுன்னாவும் இவ்வழகிய பண்பை அதிகமாக வலியுறுத்துகின்றன.

அரபு மொழியில் ஸப்ர் என வழங்கப் பெறும் இவ்வார்த்தை அல்குர் ஆனில் 70க்கும் மேற்பட்ட இடங்களில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளமை இதன் முக்கியத்துவத்தை விளங்கப் போதுமானதாகும்.

''பொறுமையைக் கொண்டும், தொழுகையைக் கொண்டும் நீங்கள் உதவி தேடுங்கள்'' *(2 அல் பகரா - 45)*

''நிச்சயமாக நாம் உங்களை பயம், பசி மேலும் பொருள்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றின் இழப்பினாலும் சோதிப்போம். நபியே! இச்சோதனைகளால் ஏற்படும் கஷ்டங்களை சகித்து பொறுமையோடு நடந்து கொள்வோருக்கு நீங்கள் நன்மாராயம் கூறுங்கள்'' *(2 அல் பகரா - 155)*

''பொறுமையைக் கைக்கொள்பவனுக்கே அல்லாஹ் பொறுமையை வழங்குகிறான். இன்னும் பொறுமையை அருளாகப் பெற்றவனைவிடச் சிறந்த சன்மானத்தைப் பெற்றவன் எவனுமில்லை.'' (புஹாரி)

''அல்லாஹ் தான் நன்மைகளைத் தரவேண்டுமென விரும்புகின்றவர்களுக்கு, (அவர்களின் பொறுமையை சோதிப்பதற்காக) சோதனைகளை ஏற்படுத்துகின்றான்.'' (புஹாரி)

வாழ்க்கையில் எதிர்கொள்ளும் சிரமங்களை எதிர்த்துப் போராடும் மனிதன் சிலபோது வெற்றியடைகிறான். சில போது தோல்வியும் அடைகிறான். இவ்விரு நிலைகளிலும் தளம்பலில்லாமல், பொறுமை காத்து வாழ்க்கையைக் கொண்டு செல்பவனே உண்மையான பொறுமையாளனாவான். இவன்தான் மறுமையில் அனைவரையும் விட அதிகமான நற்கூலியைப் பெறுவான். இத்தகையோரின் மகத்தான நிலை கண்டு, வாழ்க்கையில் சோதனைகளுக்கு உட்படாதோர் மனம் வெதும்பிக் கவலைப்படுவார்கள். இதனைப் பின்வரும் நபி மொழி குறிப்பிடுகிறது.

''இந்த உலகில் வசதியாகவும் கஷ்டங்கள் இல்லாமலும் வாழ்ந்தவர்கள் மறுமை நாளில், வாழ்க்கையில் சோதனைகளைச் சந்தித்து வெற்றி பெற்றவர்கள் பெறும் சன்மானங்களைக் கண்டு, எங்கள் தோல்களும் கத்தரிக்கப்பட்டு நாங்களும் சோதனைக்கு உட்படுத்தப்பட்டிருக்கக் கூடாதா? அப்போது பொறுமை காத்ததற்காக எங்களுக்கும் இது போன்ற சன்மானங்கள் கிடைத்திருக்குமே என ஏங்குவார்கள்.'' (திர்மிதி)

எனவே நாமும் எமது வாழ்வில் பொறுமை எனும் இவ்வழகிய நற்பண்பைக் கடைப்பிடித்து, மறுமையில் இறைவன் வழங்க இருக்கும் உயர்ந்த அந்தஸ்துக்களைப் பெற்றுக் கொள்வோமாக!

## துணிவு

இஸ்லாம் கூறும் ஒழுக்கப் பண்புகளுள் துணிவும் ஒன்றாகும். இஸ்லாத்தைப் பொறுத்தவரை அது என்றும் கோழைகளை உருவாக்க விரும்புவதில்லை. உடல் வலிமையும், மனோபலமும் பெற்ற மனிதர்களையே இஸ்லாம் விரும்புகிறது. அதற்காக அல்லாஹ்விடம் பிரார்த்திக்கக் கற்றுத் தருகின்றது.

''இறைவா கவலை, துயரம் ஆகிய வற்றிலிருந்து உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இயலாமை, சோம்பல், கோழைத்தனம், கஞ்சத்தனம் ஆகியவற்றிலிருந்தும் நான் பாதுகாப்புத் தேடுகிறேன். கடன் சுமையிலிருந்தும் மனிதர்களின் ஆதிக்கத்திலிருந்தும் பாதுகாவல் தேடுகிறேன்.'' (புஹாரி)

''பலசாலியான முஃமின் பலவீனமான ஒரு முஃமினை விடச் சிறந்தவனும் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமுடையவனும் ஆவான்'' (முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். தனது பிரார்த்தனைக்கும் வார்த்தைக்கும் வடிவம் கொடுத்த அவர்கள் துணிவும் வீரமும் உடையவராக வாழ்ந்துள்ளார்கள்.

உடலைப் பலப்படுத்தும் துணிகரச் செயற்பாடுகளில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். மதீனாவில் வாழ்ந்த றுகானா என்ற மல்யுத்த வீரனுடன் பலமுறை மல்யுத்தப் போட்டியில் ஈடுபட்டு அவனைத் தோற்கடித்துள்ளார்கள். அவ்வாறே தனது மனைவி ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்களுடன் ஓட்டப் பந்தயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். இவ்வாறு தன்னிடம் துணிவு, வீரம் முதலான பண்புகளை வளர்த்துக் கொள்கின்ற பணிக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்மாதிரியாகத் திகழ்ந்துள்ளார்கள்.

ஒருவனுக்குத் துணிவை வழங்கும் ஊற்றாக ஈமான் அமைகிறது. உள்ளத்தில் நம்பிக்கையைச் சரியாகவும் உறுதியாகவும் அமைத்துக் கொண்டவன் தான் சாதிக்க

விரும்பும் செயல்களைச் செய்வதற்கான துணிவைப் பெற்றுக் கொள்கிறான். இதனூடாகவே அவன் துன்பங்களையும், எதிர்ப்புகளையும் தாங்கிக் கொள்கிறான்.

''இந்த உலகமே ஒன்று திரண்டு நன்மை செய்ய முயன்றாலும் உனக்கு ஏற்கனவே அல்லாஹ் விதித்துள்ளதைத் தவிர மேலதிகமாக எந்த நன்மையையும் செய்ய முடியாது. இந்த உலகமே ஒன்று திரண்டு உனக்குத் தீங்கு இழைத்துவிட முயன்றாலும் அல்லாஹ் உனக்கு ஏற்கனவே விதித்ததைத் தவிர வேறு எந்தத் தீங்கையும் செய்ய இயலாது. (திர்மிதி)

ஒருவனிடம் காணப்படுகின்ற துணிவு, தான் கொண்ட இலட்சியத்தை அடையத் தூண்டுகிறது. அதன்பால் ஓர் ஈடுபாட்டையும் பிடிப்பையும் ஏற்படுத்துகிறது. இலட்சியத்தை அடைவதில் முன்னோக்கும் சவால்களைத் துணிகரமாக எதிர் கொள்வதற்குப் பயிற்றுவிக்கிறது.

### பணிவு

இஸ்லாம் கூறும் பிறிதொரு நற்பண்பு பணிவாகும். பெருமை, கர்வம் முதலான தீய பண்புகளை விட்டொதுங்கி, சக மனிதர்களோடு பணிவோடு நடந்து கொள்ள வேண்டும். பணிவு எனும் நற்பண்பைக் கடைப்பிடிப்பவர் அல்லாஹ்விடத்தில் உயர்வையும் மேன்மையையும் அடைந்துகொள்வார்.

அல்குர்ஆனும் ஹதீஸும் வீண் பெருமை கொள்வோர் பற்றியும் அவர்களுக்கு மறுமையில் கிடைக்கப் போகும் இழிவு மிக்க வேதனை குறித்தும் எச்சரிக்கின்றன. பணிவோடு நடப்பதனை வலியுறுத்தியும், அதனால் இம்மையிலும் மறுமையிலும் கிடைக்க இருக்கும் பேறுகள் பற்றியும் அவை வலியுறுத்துகின்றன.

*''இவர்கள்தாம் ரஹ்மானுடைய அடியார்கள். பூமியில் (அடக்கமாகவும்) பணிவாகவும் நடப்பார்கள். மூடர்கள் அவர்களுடன் தர்க்கிக்க முற்பட்டால் சலாமுன் என்று கூறி (அவர்களை விட்டு விலகி) விடுவார்கள்.'' (25 அல் புர்கான் : 63)*

*''எவரேனும் அல்லாஹ்வுக்காகப் பணிவோடு நடந்து கொண்டால் அவரது அந்தஸ்தை அல்லாஹ் உயர்த்தியே தீருவான்'' (முஸ்லிம்)*

*''பணிவாக இருங்கள்! (நீங்கள்) ஒருவர் மற்றவர் மீது அகந்தை கொள்ள வேண்டாம்; அநியாயம் இழைக்க வேண்டாம் என அல்லாஹ் எனக்கு வஹீ அறிவித்துள்ளான்'' (முஸ்லிம்)*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அடக்கம், பணிவு, மென்மை, போன்ற நற்பழக்கங்களுக்கு உயர்ந்த முன்மாதிரியாகத் திகழ்ந்தார்கள். தெருவோரமாக விளையாடிக்கொண்டிருந்த சின்னஞ் சிறார்களைக் கண்டால்கூட அவர்களுக்கு

ஸலாம் கூறி, அவர்களை மகிழ்வித்துப் புன்னகை புரிவதற்கு நபி எனும் அந்தஸ்து அவர்களுக்கு எந்தவொரு சந்தர்ப்பத்திலும் தடையாக இருக்கவில்லை.

அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் சிறுவர்களைக் கடந்து சென்றால் அவர்களுக்கு ஸலாம் உரைப்பார்கள். ''நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் இவ்வாறு தான் செய்து வந்தார்கள்''. என்றும் அவர்கள் கூறுவார்கள். (புகாரி, முஸ்லிம்)

ஒருமுறை இஸ்லாமிய சட்டங்களைக் கேட்டறிய தமீம் இப்னு உஸைத் என்பவர் மதீனாவுக்கு வருகிறார். அப்போது இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் தலைவரான நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிம்பரில் உபதேசம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கும் மக்களுக்கும் இடையே எந்தத் தடையும் காணப்படவில்லை இந்நிலையை அவதானித்த தமீம் இப்னு உஸைத் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சில விளக்கங்களைக் கேட்டார். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிம்பரிலிருந்து கீழ் இறங்கி பணிவோடும், அன்போடும் அவரை முன்னோக்கி அவரின் கேள்விகளுக்குப் பதிலளித்தார்கள். (முஸ்லிம்)

இவ்வாறு பணிவுடன் நடந்து கொண்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களது தோழர்களுக்கும் பணிவைக் கற்றுக் கொடுத்ததோடு அதற்கு உயர்ந்த முன்மாதிரியாகவும் வாழ்ந்து காட்டினார்கள்.

### மன்னிப்பு

மன்னிப்பு எனும் நற்குணம் அல்லாஹ்வின் பண்புகளில் ஒன்றாகும். அவனது அழகிய திருநாமங்களுள் பல அவனின் மன்னிக்கும் பண்புக்கு உயர் எடுத்துக்காட்டுக்களாகக் காணப்படுகின்றன. அவை அவன் மன்னிப்பதில் தாராளமானவனும் எல்லோரையும் மிகைத்தவனுமாவான் என்பதைப் புலப்படுத்துகின்றன.

மன்னிப்பது ஒரு முஸ்லிமிடம் காணப்பட வேண்டியதொரு உயர் பண்பாகும். அது குறித்து வலியுறுத்தும் அல்குர்ஆன் வசனங்கள் ஏராளம் உள்ளன. அந்தப் பண்பைப் பெற்றவர்களை இஸ்லாம் 'இறையச்சமுள்ள சிறந்த முன்மாதிரியான முஸ்லிம்' என்றும், 'அல்லாஹ்வின் அன்பையும், திருப்பொருத்தத்தையும் அடைந்தவர்' என்றும் பாராட்டுகின்றது.

''அவர்கள் எத்தகையோரென்றால் செல்வ நிலையிலும், வறுமை நிலையிலும் தானம் செய்து கொண்டேயிருப்பார்கள். கோபத்தை விழுங்கி விடுவார்கள். மனிதர்களை மன்னித்து விடுவார்கள். அல்லாஹ் இத்தகைய நல்லோரையே நேசிக்கிறான்.'' (3 ஆல இம்ரான்:134)

*''எவரேனும் (பிறர் செய்த தீங்கைப்) பொறுத்துக் கொண்டு மன்னித்து விட்டால் நிச்சயமாக இது மிகவும் வீரம் மிக்க செயலாகும்.'' (42 அஷ்ஷூரா : 43)*

ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் மீது சிலர் அவதூறு கூறியபோது அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் இதயத்தில் கவலைகள் அலைமோதின. அச்செயலுடன் தொடர்பு பட்டிருந்தவர்களுக்குத் தான் செய்து வந்த உதவியைத் துண்டித்து விடுவதாகச் சத்தியம் செய்தார்கள். அப்போது அல்லாஹ் பின்வருமாறு அறிவித்தான்.

*''உங்களில் செல்வந்தரும், (பிறருக்கு உதவி செய்யும்) இயல்புடையோரும் தங்கள் பந்துக்களுக்கோ, ஏழைகளுக்கோ, அல்லாஹ்வுடைய பாதையில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ (யாதொன்றுமே) கொடுக்க மாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டாம். (அவர்களால் உங்களுக்கு ஏதும் வருத்தம் ஏற்பட்டிருந்தால்) அதனை நீங்கள் மன்னித்துப் புறக்கணித்து விடவும். அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பளிப்பதை நீங்கள் விரும்ப மாட்டீர்களா? அல்லாஹ் மிக்க மன்னிப்போனும், கிருபை உடையோனுமாய் இருக்கின்றான்'' (24 அன் நூர் :22)*

ஓர் அடியான் மற்ற மனிதர்களின் தவறுகளை மன்னிக்கும் போது அல்லாஹ் அடியானின் தவறுகளை மன்னிக்கின்றான் என்ற உண்மையையும் இந்த அல்குர்ஆன் வசனம் உணர்த்துகின்றது.

எனவே இஸ்லாம் கற்றுத் தரும் இந்த நற்பண்புகளை நாமும் பின்பற்றி நடப்போமாக.

### பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்

۞ الآدَابُ ۞ الأَخْلاقُ ۞ السُّلُوْكُ ۞ الأَخْلاقِيَّاتُ ۞ الجِنَايَاتُ ۞ المُنَاكَحَاتُ ۞
۞ المُعَامَلاتُ ۞ العِبَادَاتُ ۞ العَقَائِدُ ۞ أَحْسَنُ الخُلُقِ ۞ الغَفُوْرُ ۞ الغَفَّارُ
۞ التَّوَّابُ ۞ العَفُوُّ ۞ الصَّبْرُ ۞ التَّوَاضُعُ ۞ الشُّجَاعَةُ

**பயிற்சி**

1. நல்லொழுக்கம் பற்றிய இஸ்லாத்தின் கண்ணோட்டத்தினை எடுத்துக்காட்டி அதன் முக்கியத்துவத்தை விளக்குக.

2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் காணப்பட்ட பணிவு எனும் பண்பை எடுத்துக்காட்டும் சம்பவம் ஒன்றைத் தருக.

3. ''மன்னிப்பின் சிகரமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திகழ்ந்தார்கள்'' எனும் கூற்றை ஆதாரங்களுடன் விளக்குக.

4. ''நாம் பிறரை மன்னிக்கும் போது அல்லாஹ் எம்மை மன்னிப்பான்'' இக்கூற்றுக்கு ஆதாரமான அல்குர்ஆன் வசனம் ஒன்றைக் குறிப்பிடுக.

5. சிறு குறிப்பு தருக.

   அ. பொறுமை ஆ. துணிவு இ. மன்னிப்பு

# 12

# இஸ்லாமிய ஒழுக்க மேம்பாடு

وَلَا تُصَعِّرْ خَدَّكَ لِلنَّاسِ وَلَا تَمْشِ فِي الْأَرْضِ مَرَحًا
إِنَّ اللهَ لَا يُحِبُّ كُلَّ مُخْتَالٍ فَخُوْرٍ

''(பெருமையோடு) உன் முகத்தை மனிதர்களை விட்டும் திருப்பிக் கொள்ளாதே! பூமியில் பெருமையாகவும் நடக்காதே! அகப்பெருமைக்காரர், ஆணவங் கொண்டோர் எவரையும் நிச்சயமாக அல்லாஹ் நேசிக்க மாட்டான்.'' (31 லுக்மான் :18)

அரபு மொழியில் மனிதனின் புறத் தோற்றம் 'ஹல்க்' என்றும் அவனது ஒழுக்கம் 'ஹுலுக்' என்றும் அழைக்கப்படுகிறது. ஹல்க் அழகாகவும் கவர்ச்சியாகவும் இருப்பவர்களை விருப்புடன் நெருங்கும் மக்கள் அவரது ஹுலுக் மோசமாக இருப்பின் அவரை வெறுத்து ஒதுக்குவர். அவ்வாறே கவர்ச்சியற்ற ஹல்க் உடையவர்களைக் கண்டு ஒதுங்குவோர் அவரது ஹுலுக் சிறந்ததாக இருப்பின் அவரை விருப்புடன் நெருங்குவர். இது நாம் அனுபவத்தில் காணும் உண்மையாகும். இதன் மூலம் புறத்தோற்றத்தைவிட ஹுலுக் எனப்படும் ஒழுக்கம் முக்கியமானது என்பதைப் புரிந்து கொள்கிறோம் அல்லவா? ஆகவே தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்; ''யா அல்லாஹ் எனது புறத்தோற்றத்தை அழகுபடுத்தியது போல் ஒழுக்கத்தையும் அழகுபடுத்துவாயாக'' என பிரார்த்திப்பவர்களாக இருந்தார்கள்.

இன மத வேறுபாடின்றி எல்லோரும் ஒழுக்கத்தைப் புகழ்ந்துரைத்தாலும் மக்களது நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களுமே ஒழுக்கத்தின் வரையறைகளைத் தீர்மானிப்பதால் ஒருசாராரிடத்தில் நல்லொழுக்கம் எனக்கருதப்படும் ஒரு விடயம் இன்னொரு சாராரிடத்தில் அவ்வாறு கருதப்படுவதில்லை.

இஸ்லாம் ஒழுக்கத்துக்கு அதிகூடிய முக்கியத்துவம் கொடுப்பதனால் இஸ்லாத்தில் ஒழுக்கத்தின் பரப்பு மிகவும் விசாலமானதாகவும் கூடிய வலியுறுத்தலைக் கொண்டதாகவும் காணப்படுகின்றது. அத்துடன் ஒழுக்கப் பயிற்சிக்கான வழிகாட்டலையும் வழங்குகின்றது.

இஸ்லாம் ஒழுக்கத்துக்கு வழங்கியுள்ள முக்கியத்துவத்தைப் பின்வரும் ஹதீஸ்கள் மூலம் அறிய முடியும்.

*''முஃமினானவன் தனது நல்லொழுக்கத்தின் மூலம் நோன்புடன் நின்று வணங்கும் வணக்கவாளியின் நன்மையை அடைந்து கொள்கிறான்.'' (அபூ தாவூத்)*

*''நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் மனிதர்களை அதிகமாக சுவர்க்கம் நுழைவிப்பது எது எனக் கேட்கப் பட்டதற்கு இறையச்சமும் நல்லொழுக்கமும் என்று பதில் கூறினார்கள்.''*

*''தன் பக்கம் நியாயம் இருந்தும் வீண் தர்க்கத்தைத் தவிர்ப்பதற்காக விட்டுக்கொடுத்து நடப்பவருக்கு சுவனத்தின் ஓரத்தில் ஒரு வீட்டை பெற்றுக்கொடுக்க நான் வாதிடுகிறேன். விளையாட்டுக்கேனும் பொய்யைத் தவிர்ந்து கொள்பவருக்கு சுவனத்தின் மத்தியில் ஒரு வீட்டைப் பெற்றுக்கொடுக்க நான் வாதிடுகிறேன். யாரது ஒழுக்கம் சீராகின்றதோ அவருக்கு சுவர்க்கத்தின் மேலால் ஒரு வீட்டைப் பெற்றுக்கொடுக்க நான் வாதிடுகிறேன்.'' (அபூ தாவூத்)*

மேற்கூறப்பட்ட ஹதீஸ்கள் நல்லொழுக்கத்தின் சிறப்பையும் முக்கியத்து வத்தையும் பொதுவாகக் கூறுகின்றதே ஒழிய நற்பண்புகளாகக் கருதப்படக்கூடிய விடயங்களைத் தனித்தனியாகக் குறிப்பிடவில்லை. ஆனாலும் வேறு பல அல் குர்ஆன் வசனங்களும் ஹதீஸ்களும் இஸ்லாத்தின் பார்வையில் நல்லொழுக்கமாகக் கருதப் படக் கூடிய விடயங்களைத் தனித்தனியாகக் குறிப்பிட்டுள்ளன. அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தி நோக்கலாம்.

### உயர் பெறுமானங்களைக் கடைபிடித்தல்

அன்பு, நீதி, வாய்மை, நேர்மை, வாக்கு மீறாமை, விசுவாசமாய் நடத்தல், முகமலர்ச்சி ஆகியன அனைத்து மனிதர்களும் வரவேற்கும் உயர் பெறுமானங்களாகும். இவற்றை இஸ்லாம் வரவேற்பது மாத்திரமல்லாது ஒரு முஸ்லிமை அடையாளப் படுத்தும் விடயமாக இருக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கின்றது.

### மரியாதைக்குரிய செயல்களை மதித்து நடத்தல்

பெற்றோர் - ஆசிரியர் - கல்விமான்கள் - மூத்தோர்களைக் கண்ணியப்படுத்தல், அவர்கள் முன்னிலையில் பணிவாக நடத்தல் மற்ற மனிதர்களது சுய கௌரவத்தை மதித்தல் மற்றும் வெட்க உணர்வு போன்றன இஸ்லாம் வலியுறுத்தும் மரியாதைக்குரிய நற்பண்புகளாகும்.

### நாகரிகமற்றவைகளைத் தவிர்ந்து நடத்தல்

பொது இடங்களில் துப்புதல் மற்றும் மலசலம் கழித்தல், அவசியமின்றி உயர்ந்த சப்தத்தில் பேசுதல், சபை ஒழுங்குகளை முறித்தல், உண்ணும் போது உணவுத் தட்டின் பல இடங்களிலும் கைகளைப் போட்டு உண்ணுதல் போன்ற விடயங்களைத் தவிர்ந்து கொள்ளலும் இஸ்லாம் வலியுறுத்தும் ஒழுக்கப் பண்புகளாகும்.

### ஆபாசமானவைகளைத் தவிர்ந்து கொள்ளல்

கீழ்தரமான முறையில் பாலுணர்வைத் தூண்டக்கூடிய ஆடை அலங்காரங்கள், வார்த்தைகள், களியாட்டங்கள், கலை நிகழ்ச்சிகள், ஆண் பெண் ஒன்று கூடல்கள் ஆகிய அனைத்தையும் தவிர்ந்து கொள்வதையும் இஸ்லாம் நல்லொழுக்கமாகக் கருதுவதுடன் இவ்வாறான விடயங்களில் கடைப்பிடிக்க வேண்டிய சட்ட ஒழுங்குகளையும் அவற்றை மீறும் போதுள்ள தண்டனைகளையும் விளக்கியுள்ளது.

### சூழல் சார் விழுமியங்களைக் கடைப்பிடித்தல்

சுற்றுச் சூழலில் காணப்படும் பயன் தரும் தாவரங்களைப் பாதுகாத்தல், பொது இடங்கள், நீர்நிலைகள் ஆகியவற்றின் சுத்தத்தைப் பேணல், மனிதர்களுக்கோ அல்லது ஏனைய உயிர்களுக்கோ நோவினை அல்லது இடைஞ்சலை ஏற்படுத்தக்கூடியவற்றைச் சூழலில் இருந்து அகற்றுதல் போன்றன இவ்வாறான நல்லொழுக்கங்களுள் சிலவாகும்.

மனிதன் நல்லொழுக்கங்களைக் கடைப்பிடிக்காது தீய செயல்களில் ஈடுபடக் காரணம் அவனிடம் சீரிய நம்பிக்கைகள் உருவாக்கப்படாமையும் சிறந்த நெறிப்படுத்தலுக்கு உட்படாமையுமேயாகும். ஆகவே தான் இஸ்லாம் எல்லா நற்காரியங்களையும் ஈமானோடு தொடர்புபடுத்துவதுடன் வணக்க வழிபாடுகள் மூலம் அவனுக்குப் பயிற்சியையும் வழங்குகின்றது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''நல்லொழுக்கமும் நம்பிக்கையும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவையாகும். ஒன்றை விட்டுவிடுபவன் அடுத்ததையும் விட்டுவிட வேண்டியதுதான்''

இஸ்லாமியக் கடமைகள் எவ்வாறு நல்லொழுக்கங்களின் பால் ஈர்க்கப்படுவதற்குப் பயிற்றுவிக்கின்றன என்பதை நோக்குவோம்.

**தொழுகை:** இது ஒவ்வொரு முஸ்லிமும் அவசியம் நிறைவேற்ற வேண்டிய கடமையாகும். உயிரோட்டத்துடன் தொழுகின்ற மனிதன் தன் தொழுகை மூலம் இறையச்சத்தையும் அல்லாஹ்வுடனான நெருக்கத்தையும் பெறுகின்றான். இது அவனது உள்ளத்தில் பிரகாசத்தை ஏற்படுத்துகிறது. அதன் மூலம் நல்லொழுக்கத்தையும் தீய செயல்களையும் பிரித்தறிந்து

நல்லொழுக்கத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கின்றான். இதனையே அல் குர்ஆன் *''...நிச்சயமாக தொழுகையானது மானக்கேடான தீய காரியங்களில் இருந்தும் பாவங்களிலிருந்தும் (மனிதனை) விலக்கிவிடும்...'' (29 அன்கபூத் : 45)* என்று கூறுகின்றது.

**ஸக்காத்:** இது மனிதனின் செல்வத்தின் மீது விதியாக்கப்பட்ட கடமையாகும். இதனை நிறைவேற்றும் ஒருவனிடம், வறிய மக்கள் மீது அன்பும், அவர்களுக்குக் கொடுத்துதவ வேண்டும் என்ற தயாள சிந்தையும் உருவாகின்றது. உலோபித் தனம் அவனை விட்டும் அகன்று விடுகிறது. அத்துடன் அவனது உள்ளம் உலக ஆசை எனும் அசுத்தத்தில் இருந்து தூய்மை பெறுகிறது. இதுபற்றி அல் குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது.

*''அவர்களுடைய பொருளை தானமாக எடுத்துக்கொண்டு, அவர்களைப் பரிசுத்தமாக்கி வைத்து அதைக் கொண்டு அவர்களைத் தூய்மைப்படுத்தி அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்...'' (9 தௌபா :103)*

**நோன்பு:** உள்ளத்தில் இருந்து எழுகின்ற ஆசைகளையும் தீய உணர்வுகளையும் கட்டுப்படுத்தி இறையச்சம், பொறுமை, ஈகை போன்ற உயர் பண்புகளைப் பயிற்றுவிக்கும் ஒரு கடமையே நோன்பாகும். அதன் நோக்கத்தைப் பின்வரும் ஹதீஸ் விளக்குகிறது.

''வெறுமனே உண்ணாமலும் பருகாமலும் இருப்பதல்ல நோன்பு. அது தீமையானவற்றில் இருந்தும் மானக்கேடானவற்றில் இருந்தும் விலகி இருப்பதாகும். நீங்கள் நோன்பிருக்கும் போது யாராவது உங்களோடு தர்க்கித்தால் நான் நோன்பிருக்கின்றேன் என்று சொல்லிவிடுங்கள்'' (இப்னு ஹுஸைமா)

**ஹஜ்:** இது அல்லாஹ்வுக்காக மேற்கொள்ளப்பட்ட தியாகத்தினதும் அர்ப்பணிப்பினதும் ஒரு வரலாற்றுப் பாடத்தை சொல்லிக் கொடுப்பதுடன் அல்லாஹ்வுக்காகத் தியாகங்களை மேற்கொள்வதற்கான பயிற்சியையும் வழங்குகிறது. அத்துடன் உலகின் நாற்புறமிருந்தும் ஒன்று கூடும் மனிதர்களின் பல்வகைமைக்கு மத்தியில் சகோதரத்துவம், சமத்துவம், சகிப்புத்தன்மை, புரிந்துணர்வு ஆகிய உயர்குணங்களால் எல்லோரையும் ஒன்றிணைக்கின்றது.

*''... எவரேனும் (இஹ்ராம் அணிந்து) ஹஜ்ஜை தன்மீது கடமையாக்கிக் கொண்டால் ஹஜ் (மாதத்தின் பத்தாம் நாள் )வரையில் வீடு கூடுதல், தீச்சொல் பேசுதல், சச்சரவு செய்து கொள்ளுதல் கூடாது...'' (2 அல் பகரா - 197)* என அல்குர்ஆன் கூறுகிறது.

நல்லொழுக்கங்களைப் பின்பற்றுவதற்கு ஒருவரின் முன்மாதிரி மிகவும் முக்கியமானதாகும். ஆகவே தான் அல்குர்ஆன் *''உங்களுக்குரிய அழகிய முன்மாதிரி அல்லாஹ்வின் தூதரிடத்திலேயே இருக்கிறது'' (33 அஹ்ஸாப்: 31)* என்று கூறுவதுடன் நபியவர்களைப் பார்த்து,

''நபியே நிச்சயமாக நீர் மகத்தான உயர் பண்புகளைக் கொண்டவராக இருக்கின்றீர்'' *(68 அல் கலம் :4)* என்றும் உறுதிப்படுத்துகிறது.

நல்லொழுக்கப் பண்புகள் மனிதனின் உள உணர்வுகளினதும் நம்பிக்கைகளினதும் வெளிப்பாடாகவே உருவாகின்றன. எனவே எமது வாழ்வை நல்லொழுக்கத்தால் அலங்கரிக்க உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவது இன்றியமையாததாகும்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ الْخَلْقُ ❁ الْخُلُقُ ❁ الآدَابُ

**பயிற்சி**

1. ஒழுக்கத்தை வலியுறுத்தும் மூன்று ஹதீஸ்களைக் குறிப்பிடுக.
2. நல்லொழுக்கப் பண்புகளை வகைப்படுத்தக் கூடிய பிரதான தலைப்புக்கள் ஐந்தினைக் கூறுக.
3. சூழல் சார் விழுமியங்கள் தொடர்பில் இஸ்லாம் கற்றுத்தரும் ஒழுக்கங்களை விளக்குக.
4. தொழுகை எவ்வாறு நற்பண்புகளை ஏற்படுத்துகிறது என்பதை விளக்குக.

# 13

# ஆன்மீக மேம்பாட்டுக்கான வழிமுறைகள்

أَلا , إِنَّ فِي الْجَسَدِ مُضْغَةً إِذَا صَلُحَتْ صَلُحَ الْجَسَدُ كُلُّهُ،
وَإِذَا فَسَدَتْ فَسَدَ الْجَسَدُ كُلُّهُ، أَلا وَهِيَ الْقَلْبُ " . (رواه البخاري).

''அறிந்துகொள்ளுங்கள் நிச்சயமாக மனித உடலில் ஒரு தசைதுண்டு உண்டு. அது சீர்பட்டால் உடல் முழுதும் சீர்படும் அது சீர்கெட்டால் உடல் முழுதும் சீர்கெடும். அறிந்து கொள்ளுங்கள் அதுதான் உள்ளமாகும்.'' (புஹாரி)

மனிதன் அல்லாஹ்வின் பூமியில் இருந்து பெறப்பட்ட ஒருபிடி மண்ணும் அல்லாஹ்விடமிருந்து ஊதப்பட்ட ரூஹும் (ஆன்மா) ஒன்று சேர்ந்ததனால் உருவானவனே மனிதனாவான். இவ்வகையில் மனிதன் தனது உடலை மண்ணிலிருந்தும் ஆன்மாவாகிய உயிரை அல்லாஹ்விடமிருந்தும் பெற்றுள்ளான்.

*''நபியே உமதிறைவன் மலக்குகளைப் பார்த்து நான் களிமண்ணினால் மனிதனைப் படைக்கப் போகிறேன். எனவே நான் அவனை செம்மைப்படுத்தி எனது ரூஹில் இருந்து அவனில் ஊதியதும் நீங்கள் அவனுக்காக ஸுஜூத் செய்யுங்கள் என்று கூறியதை (நினைவுபடுத்துவீராக)'' (38 ஸாத் :71,72)*

உடல் உயிர் ஆகிய இரு கூறுகளும் சீராகின்றபோதே மனிதன் பூரண ஆரோக்கியம் பெறுகின்றான். உடல் மண்ணிலிருந்து பெறப்பட்டது என்ற வகையில் உடலாரோக்கியம் மண்ணைச் சார்ந்தும் ஆன்மா அல்லாஹ்விடம் இருந்து கிடைக்கப் பெற்றது என்ற வகையில் அதன் ஆரோக்கியம் அல்லாஹ்வைச் சார்ந்தும் அமைந்துள்ளது. ஆகவேதான் அல்லாஹ்வை ஈமான் கொள்வது ஆன்மாவை ஆரோக்கியப்படுத்துவதற்கான முதற் படியாகக் கருதப்படுகிறது.

மனிதனில் ஆன்மா முக்கியம் பெறுவதனால் அது பற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''அறிந்து கொள்ளுங்கள் நிச்சயமாக மனித உடலில் ஒரு தசைத் துண்டு உண்டு. அது சீர்பட்டால் உடல் முழுதும் சீர்படும் அது சீர்கெட்டால் உடல் முழுதும் சீர்கெடும். அறிந்து கொள்ளுங்கள் அதுதான் உள்ளமாகும்'' (புஹாரி) என்று கூறியுள்ளார்கள்.

உள்ளத்தின் முக்கியத்துவத்தை எல்லா மதங்களும், தத்துவங்களும் ஏற்றுக் கொள்வதால் அதை சீராக்கவும் பலப்படுத்தவும் அவற்றின் நம்பிக்கைகளுக்கு ஏற்ப பல்வேறு வழிமுறைகளைக் கையாள்கின்றன. நவீன அறிவியல், உளவியல் மூலம் உளப்பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முயல்கிறது. இஸ்லாம் அல்லாஹ்வுடன் தொடர்பு படுத்துவதன் மூலம் உள்ளத்தை சீர்படுத்தவும் பலப்படுத்தவும் வழிகாட்டுகிறது.

தொழுகை, ஸக்காத், நோன்பு, ஹஜ், குர்ஆன் திலாவத், திக்ர், இறைவனின் படைப்புக்கள் பற்றிய சிந்தனை போன்றன ஆன்மாவை பரிசுத்தப்படுத்தக் கூடிய இஸ்லாம் காட்டித்தரும் பயிற்சிகளாகும். இப்பயிற்சி வெற்றியளிக்கின்றபோது மனிதன் உயர்ந்த ஆன்மீகப் பண்புகளை வெளிப்படுத்துவான். இப்பண்புகளை அல்குர்ஆனும் ஸுன்னாவும் பாராட்டுவதுடன் அதனைக் கடைப்பிடிக்குமாறும் போதிக்கின்றன. **ஸப்ர், தவக்குல், மஃரிபா, ரிழா** என்பன அவ்வான்மீகப் பண்புகளுள் சிலவாகும்.

## 1. அஸ்-ஸப்ர் الصَّبْر

ஸப்ர் என்றால் பொறுமை என்று பொருள்படும். அவசரம், கோபம், பதட்டம், பேராசை, பழிக்குப் பழி போன்ற தீய குணங்களை அடக்கும் ஆற்றல் கொண்ட பலம் பொருந்திய உயர் பண்பே பொறுமையாகும். ஆகவேதான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''மல்யுத்தத்தில் வெற்றி பெறுபவன் உண்மையான வீரனல்லன். கோபத்தின் போது தன்னை அடக்கிக் கொள்பவனே உண்மையான வீரனாவான்'' ( புஹாரி) என்றார்கள்.

பொறுமையின் முக்கியத்துவம் பற்றியும் அதன் சிறப்புப் பற்றியும் அல்குர்ஆனும் ஸுன்னாவும் கூறியுள்ளவற்றுள் சில வருமாறு:

*''...எங்கள் இறைவனே எங்கள் மீது பொறுமையைச் சொரிவாயாக. (உனக்கு) முற்றிலும் வழிப்பட்டவர்களாக (எங்களை ஆக்கி) எங்களை நீ கைப்பற்றிக் கொள்வாயாக. (7 அல் அஃராப் : 126)* நபி அவர்கள் கூறியுள்ளார்கள்,

''முஃமினின் காரியங்கள் ஆச்சரியத்தைத் தருகின்றன. அனைத்தும் அவனுக்கு சிறப்பாகவே முடிவுறுகின்றன. முஃமின் அல்லாத வேறு எவருக்கும் அவ்வாறு வாய்ப்பதில்லை. அவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டால் நன்றி செலுத்துவான். அது அவனுக்குச் சிறந்த முடிவைக் கொடுக்கிறது. துன்பம் நேர்ந்தால் பொறுமை கொள்வான். அதுவும் அவனுக்குச் சிறந்த முடிவைக் கொடுக்கிறது''. (முஸ்லிம்)

அடியானின் ஆன்மா பக்குவப்பட்டுள்ளதா என்பதை அல்லாஹ் பல வழிகளிலும் சோதிக்கின்றான். பொறுமையாளர்கள் மட்டுமே அந்த சோதனையில் வெற்றி பெறுவர்.

*''நாம் உங்களை அச்சம், பட்டினி மூலமும் செல்வம், உயிர், விளைச்சல் ஆகியவற்றில் இழப்புக்களை ஏற்படுத்துவதன் மூலமும் சோதிப்போம். நபியே பொறுமையாளருக்கு நன்மாராயம் கூறுங்கள். பொறுமையாளர் யாரெனில் அவர்களுக்கு ஏதும் துன்பம் நிகழ்ந்தால் நாம் அல்லாஹ்வுக்குரியவர்கள் அவனிடமே நாம் மீள்பவர்களாகவும் உள்ளோம் என்று கூறுவார்கள்''.(2 அல் பகரா :155,156)*

**பொறுமை கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப பொறுமையின் வடிவங்கள் வேறுபடுகின்றன. உதாரணத்துக்காக சிலவற்றை இங்கே தருகின்றோம்**

கோபம் வருகின்றபோது - அடக்கிக்கொள்ளல், பேராசை வருகின்றபோது- போதுமாக்கிக் கொள்ளல், சோதனைகள் வருகின்றபோது - தாங்கிக் கொள்ளல், கவலையும் துக்கமும் வருகின்றபோது - சகித்துக் கொள்ளல், பாவத்தின் பால் உள்ளம் ஈர்க்கப்படும் போது-தவிர்ந்து கொள்ளல், நற்காரியங்களில் சோர்வு ஏற்படும் போது- திட உறுதியாய் நிற்றல், இழப்புக்கள் ஏற்படும் போது-பொருட்படுத்தாமல் நிற்றல், வாழ்க்கைச் சுமைகள் அதிகரிக்கின்ற போது-தாங்கிக் கொள்ளல், பிரச்சினைகள் வரும் போது-எதிர்கொள்ளல், பழிக்குப் பழி உணர்வு ஏற்படும் போது-மன்னித்தல், விருப்பத்துக்கு மாறான முடிவுகளைக் கேட்கும் போது - ஏற்றுக் கொள்ளல்.

இதுபோன்ற சந்தர்ப்பங்களில் கடைப்பிடிக்கும் பொறுமையானது மனிதனுக்கு அவனின் வெற்றிப் பாதையை வெளிச்சமிட்டுக் காட்டுகிறது. அதனால் தான் நபி ஸல்லல்லாஹுˢ அலைஹி வஸல்லம் அவர்கள் ''பொறுமை ஒளியாகும்'' (முஸ்லிம்) என்று அதனை வர்ணித்தார்கள்.

## 2. அத்-தவக்குல் التَّوَكُّلُ

'தவக்குல்' என்பதன் மொழிக்கருத்து பொறுப்புச் சாட்டுதல் என்பதாகும். இது முயற்சி, அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கை ஆகிய இரண்டினதும் சேர்க்கையாகும். ஆகவேதான் இஸ்லாமிய வழக்கில் எமது முயற்சிகளின் முடிவை அல்லாஹ்விடம் பொறுப்புச் சாட்டுதல் தவக்குல் எனப்படுகின்றது. இது அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கையின் வெளிப்பாடாகும். ''நம்பிக்கையாளர் யாரெனில் அல்லாஹ் அவர்களுக்கு நினைவு கூரப்பட்டால் அவர்களது உள்ளங்கள் நடுங்கும். அவனது வசனங்கள் அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கப்பட்டால் அவர்களது ஈமான் அதிகரிக்கும். இன்னும் தங்கள் றப்பின் மீதே தவக்குல் வைப்பார்கள்'' (8 அன்பால்:2)

அல்லாஹ் உலகில் ஒவ்வொரு காரியத்தினதும் வெற்றியை இன்னொன்றில் -ஸபப்களில் (காரண காரியங்கள்) தங்க வைத்துள்ளான். என்றாலும் முடிவைத் தீர்மானிப்பவன் அல்லாஹ் மாத்திரம் தான். ஆகவே உண்மையான தவக்குலை உடைய ஒரு முஃமின் ஸபப்களைக் கடைப்பிடிப்பதுடன் முடிவை அல்லாஹ்விடம் சாட்டுவான். அல்லாஹ்மீது நம்பிக்கை இல்லாதவர்கள் ஸபப்கள் மீதே முழு நம்பிக்கை வைப்பார்கள். அவர்களின் இறுதி முடிவும் அல்லாஹ்வின் நாட்டப்படியே நடக்கும்.

**முஃமின்கள் இரு காரணங்களுக்காக அல்லாஹ் மீது தவக்குல் வைப்பார்கள்.**

- ★ ஸபபும் அல்லாஹ்வின் ஏற்பாடே. அல்லாஹ்வின் நாட்டமின்றி ஸபபுகளினால் மாத்திரம் வெற்றியடைய முடியாது.
- ★ அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைப்பதன் மூலம், அல்லாஹ் இம்மையிலோ மறுமையிலோ அதற்குரிய கூலியைத் தருவான் என்பதில் உறுதிகொள்ளல்.

எனவே முஃமினானவன் அல்லாஹ்வுக்குப் பொருத்தமான காரியத்தைச் செய்ய நாடினால் அதற்குரிய ஸபப்களை இயலுமான அளவு கடைபிடிப்பான். முடிவை

அல்லாஹ்விடம் பொறுப்புச்சாட்டுவான். யாருக்கும் அஞ்சாமல் முயற்சியில் தொடர்ந்தும் ஈடுபடுவான்.

''அன்றி ஒரு சிலர் அவர்களிடம் வந்து உங்களுக்கு எதிராகப் போர் புரிய எல்லா வகுப்பினரும் நிச்சயமாக ஒன்று சேர்ந்திருக்கின்றனர். ஆதலால் அவர்களுக்குப் பயந்து கொள்ளுங்கள் என்று கூறிய சமயத்தில் அவர்களுக்குப் பயம் ஏற்படுவதற்குப் பதிலாக நம்பிக்கையே அதிகரித்தது. அன்றி அல்லாஹ்வே எங்களுக்குப் போதுமானவன். அவன் சிறந்த பொறுப்பேற்பவனாகவும் (பாதுகாவலனாகவும்) இருக்கின்றான் என்று கூறினார்கள்'' (3 ஆல இம்ரான் :173).

ஒருவன் தன் வீட்டைவிட்டு வெளியே செல்கின்றபோது, ஒரு தொழில் முயற்சியில் ஈடுபடும்போது, கற்றல் நடவடிக்கைகளில் ஈடுபடும்போது, தன் எதிரியை எதிர்கொள்கின்றபோது, தூங்கச் செல்கின்றபோது என பல சந்தர்ப்பங்களில் அல்லாஹ் மீது தவக்குல் வைக்கவேண்டியவனாக இருக்கின்றான். அல்லாஹ்வின் தூதர் அவ்வாறான சந்தர்ப்பங்களை நினைவுபடுத்தித் தவக்குல் வைப்பதை வலியுறுத்தியுள்ளார்கள்.

''எவர் தனது வீட்டை விட்டு வெளியேறும் போது

بِسْمِ اللهِ تَوَكَّلْتُ عَلَى اللهِ لَا حَوْلَ وَلَا قُوَّةَ إلاَّ بِالله என்று கூறுவாரோ அவருக்கு

''நீர் நேர்வழியில் செலுத்தப்பட்டீர், போதுமாக்கிக் கொள்ளப்பட்டீர், எதிர்பார்ப்பு நிறைவேற்றப்பட்டீர். அத்துடன் ஷைத்தான் உன்னை விட்டும் வெருண்டு ஓடிவிடுவான்.'' என்று சொல்லப்படும். (அபூ தாவூத்)

''இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் நெருப்பில் தூக்கி எறியப்பட்டபோது கூறிய இறுதி வார்த்தை حَسْبِيَ اللهُ وَنِعْمَ الْوَكِيْلِ என்பதாகும்'' (புஹாரி)

அல்லாஹ் கூறுகின்றான். ''...நீங்கள் ஒரு விடயத்தைச் செய்ய முடிவு செய்தால் அல்லாஹ்விடம் பொறுப்புச் சாட்டுங்கள். அல்லாஹ்விடம் பொறுப்புச் சாட்டுவோரை அல்லாஹ் நேசிக்கின்றான். (3 ஆல இம்ரான் - 159)

## 3. அல்-மஃரிபா الْمَعْرِفَةُ

மஃரிபா என்பதன் மொழிக்கருத்து அறிவு என்பதாகும். இஸ்லாமிய ஆன்மீகப் பரிபாசையில் இரட்சகனாகிய அல்லாஹ்வைக் கண்ணால் காண்பது போன்று அறிவதன் மூலம் உளப் பேரின்பமடைவதைக் குறிக்கின்றது.

இமாம் கஸ்ஸாலி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறினார்கள்: ''ஒவ்வொன்றினதும் இன்பம் அதற்குரிய இயல்பிலேயே தங்கியுள்ளது. கண்ணின் இன்பம் அழகிய காட்சியைப் பார்ப்பதன் மூலம் கிடைக்கின்றது. காதின் இன்பம் அழகிய ஓசையைச் செவிமடுப்பதன் மூலம் கிடைக்கின்றது. உள்ளத்தின் இன்பம் அல்லாஹ்வை அறிவதன் மூலம் கிடைக்கின்றது''

முஹ்யுத்தீன் அப்துல் காதிர் ஜீலானி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறினார்கள்: ''நீ அல்லாஹ்வின் தீர்ப்பைக் கொண்டு படைப்புக்களை விட்டும், அவனது கட்டளைகளைக் கொண்டு உனது ஆசைகளை விட்டும், அவனது செயலைக் கொண்டு உனது நாட்டத்தை விட்டும் வெறுமையாகி நில். அல்லாஹ்வின் அறிவைச் சுமக்கும் பாத்திரமாக மாறுவதற்கு நீ தகுதி பெறுவாய்''.

மஃரிபா எனும் பேரின்ப நிலையை அடைந்தவர் அல்லாஹ்வுக்காகத் தான் அடையும் துன்பங்களையும் இன்பமாகக் காண்பார். அல்லாஹ்வின் ஷரீஅத்தை முழுமையாகப் பின்பற்றுவதிலும் அவனை வணங்குவதற்காக அதிகமதிகம் நேரம் ஒதுக்குவதிலும் அவனுக்காக தன்னிடமுள்ள அனைத்தையும் அர்ப்பணிப்பதிலும் தயங்கவும் மாட்டார். பின்நிற்கவும் மாட்டார். முழுமையாக அல்லாஹ்விலேயே தங்கி நிற்பார்.

## 4. அர்-ரிழா الرِّضَا

'ரிழா' என்பதன் மொழிக் கருத்து பொருந்திக் கொள்ளல் என்பதாகும். எமக்கு அல்லாஹ்வின் ஏற்பாட்டின்படி அமையும் அனைத்து நிலைகளையும் பொருந்திக் கொண்டு மனத்திருப்தியடைவதற்கே ரிழா என்று சொல்லப்படும். இது ஈமான் கொண்ட முஃமினின் உயர்ந்த உள நிலையாகும். அந்நிலையில் அல்லாஹ் அடியானைப் பொருந்திக் கொள்கின்றான். அடியான் அல்லாஹ்வைப் பொருந்திக் கொள்கின்றான்.

அந்த அந்தஸ்த்தை ஸஹாபாக்கள் பய்அதுஷ் ஷஜரா எனும் ஒப்பந்தத்தின் போது அடைந்து கொண்டார்கள். அவ்வொப்பந்தம் பய்அதுர் ரிழ்வான் என்றும் அழைக்கப்படுகிறது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கண்ட கனவின் அடிப்படையில் உம்ராவை நிறைவேற்றுவதற்காக மனமகிழ்வுடன் ஸஹாபாக்கள் மக்காவை நோக்கிச் சென்றார்கள். அவர்கள் தடுத்து நிறுத்தப்பட்ட போது தம் உடைவாளுடன் பெரும் படையை எதிர்த்துப் போராட நிர்ப்பந்திக்கப்பட்டனர். ஸஹாபாக்கள் இதை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டார்கள். இத்தகையோரையே ''...அல்லாஹ்வும் அவர்களைப் பொருந்திக் கொண்டான் அவர்களும் அல்லாஹ்வைப் பொருந்திக் கொண்டார்கள்'' ( 98 பய்யினா :8 ) என்று அல்குர்ஆன் பாராட்டுகிறது.

இமாம் குஷைரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறினார்கள்: ''ரிழா எனும் அந்தஸ்த்தை அடைய விரும்புகின்றவர் அல்லாஹ் திருப்தியடைகின்றவற்றைக் கடைப்பிடிக்கட்டும்'' என்றார்கள். புழைல் இப்னு இயாழ் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறினார்கள்: ''உலகில் பற்றற்று வாழ்வதை விட ரிழா எனும் மனத்திருப்தி மேலானது. ஏனெனில், மனத்திருப்தியடைந்தவன் தனது அந்தஸ்த்துக்கு மேலாக எதிலும் ஆசைப்பட மாட்டான்'' என்றார்கள்.

மேலே கூறப்பட்ட ஆன்மீகப் பண்புகள் அனைத்தும் ஒன்றுடன் ஒன்று தொடர்புபட்டதாகும். அவை அனைத்தும் உள்ளத்தைப் பரிசுத்தப்படுத்துகின்றன. அடியானின் உள்ளத்தை **கல்புன் ஸலீம்** எனும் தூய நிலைக்குக் கொண்டு வந்து சேர்க்கின்றன. மறுமையில் அடியான் அல்லாஹ்வைச் சந்திக்கும்போது அல்லாஹ்வின் ரூஹைச் சுமந்துள்ள உள்ளம் அப்பரிசுத்த நிலையை அடைந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கின்றான். அதுவே மனிதனின் வெற்றியடைந்த நிலையுமாகும்.

*''அந்நாளில் செல்வமோ பிள்ளைகளோ பயனளிக்காது. தூய உள்ளத்துடன் அல்லாஹ்வை வந்தடைந்தவர்களைத் தவிர''* *(26 ஷுஅரா - 88-89)*

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ بَيْعَةُ الشَّجَرَةِ ❁ بَيْعَةُ الرِّضْوَان ❁ المسْتَحَبُّ ❁ قَلْبٌ سَلِيْمٌ ❁ الشَّرِيْعَة ❁ الوَاجِبُ

**பயிற்சி**

1. பின்வருவனவற்றுக்கு சிறுகுறிப்பு எழுதுக.

★ தவக்குல் ★ ஸப்ர் ★ ரிழா ★ மஃரிபா

2. பொறுமைக்குரிய சந்தர்ப்பங்களையும் அதன்போது கடைப்பிடிக்க வேண்டிய பொறுமையின் வடிவங்களையும் அட்டவணை மூலம் காட்டுக.

3. ''உடலாரோக்கியம் மண்ணைச் சார்ந்துள்ளது. உள ஆரோக்கியம் அல்லாஹ்வைச் சார்ந்துள்ளது''என்ற கூற்றை தெளிவுபடுத்துக.

# 14

# அல் குர்ஆன்

ذٰلِكَ الْكِتٰبُ لَارَيْبَ فِيْهِ هُدًى لِّلْمُتَّقِيْنَ

''இது, (அல்லாஹ்வின்) திருவேதமாகும்; இதில் எத்தகைய சந்தேகமும் இல்லை; பயபக்தியுடையோருக்கு (இது) நேர்வழிகாட்டியாகும்.'' (2:2)

## *1. அல்குர்ஆன் சட்ட மூலாதாரம்*



ஒரு சமுதாயம் சீராக அமைவதற்குச் சட்டங்களும், விதிமுறைகளும் தேவைப் படுகின்றன. அவை சில சமுதாயங்களில் தனிநபர்களாலும், வேறு சில சமுதாயங்களில் சமூகக் குழுக்களாலும் உருவாக்கப்படுகின்றன. எனினும், மனித சிந்தனையிலுள்ள குறைபாடு காரணமாக, அவை பொருத்தமற்றவையாகவோ, பின்பற்ற முடியாதனவாகவோ, சமநிலை பேணாதவையாகவோ, காலத்துக்குக் காலம் மாற்றப்பட வேண்டியனவாகவோ அமைந்து விடுகின்றன. இவை மனித பலவீனங்களின் வெளிப்பாடாகும்.

மனித அறிவு வரையறுக்கப்பட்டது. அவனது உணர்வுகளும் விருப்பங்களும் பலதரப்பட்டவை. நிகழ்காலத்தை மட்டுமே அவன் காண்கிறான். எதிர்காலம் பற்றி அவனால் சரியாகத் தீர்மானிக்க முடியாது. இதனால் மனித சிந்தனை மூலம் உருவாகும் சட்டங்களில் இவற்றின் தாக்கத்தை அவதானிக்கலாம்.

இஸ்லாம் என்பது மனித சிந்தனைக்கு அப்பால், அல்லாஹ்விடமிருந்து வஹி மூலம் வழங்கப்பட்ட அல் குர்ஆனையும் ஸுன்னாவையும் சட்ட மூலாதாரங்களாகக் கொண்டமைந்த மார்க்கமாகும். கால, தேச நிலைமைகளுக்கேற்ப அவற்றின் அடிப்படையில் விதிமுறைகளை வகுக்கவும் தீர்வுகளைப் பெறவும் இஜ்திஹாத் எனும் வழிமுறையையும் அங்கீகரித்துள்ளது. எனவே, நிலைமைகளுக்கேற்ப நெகிழும் தன்மையும், நெகிழாத் தன்மையும் கொண்ட ஒரு ஷரீஅத்தை அது வழங்கியிருக்கின்றது.

அல்குர்ஆன், பிரபஞ்சத்தையும் அதிலுள்ளவற்றையும் படைத்த அல்லாஹ்வினால் அருளப்பட்டது. அவன் மனிதனைப் படைத்தவன். மனித இயல்புகளை அறிந்தவன். குறைபாடுகள் இல்லாதவன். முக்காலங்களையும் தெரிந்தவன். எனவே சட்டமியற்றும் அதிகாரம் அவனுக்கு மட்டுமே உண்டு. அவனால் வகுக்கப்பட்ட சட்டங்கள் எல்லா மக்களுக்கும், எல்லாக் காலத்துக்கும் பின்பற்றத்தக்கனவாக உள்ளன. இதனால் அதன் சட்டங்களும், நியதிகளும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலம் முதல் உலகம் அழியும் வரை பின்பற்றத்தக்கனவாக உள்ளன. அல்லாஹ்வின் உத்தரவாதத்துக்கேற்ப அது எந்த மாற்றத்திற்கும், திரிபுக்கும் உட்படாத நிலையில் உள்ளங்களில் பதியப்பட்டும், ஏடுகளில் எழுதப்பட்டும் இன்னும் பல வடிவங்களிலும் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

அல்லாஹ் மனிதனுக்குப் பொருத்தமான சட்டங்களைக் காலத்துக்கும் சூழ்நிலைக்குமேற்ப அவனால் அனுப்பப்பட்ட தூதர்களான ரஸூல்மார்கள் மூலம் வழங்கியுள்ளான். அவை ரிஸாலத் என அழைக்கப்படும். இதற்கான ஊடகமாக வஹி அமைகின்றது. வஹி மூலம் வழங்கப்பட்ட சட்டங்களை அல்லாஹ்வின் தூதர்கள் மக்களுக்கு எடுத்துரைப்பார்கள், சமூகத்தில் நடைமுறைப்படுத்தியும் காட்டுவார்கள்.

அந்த வகையில்தான், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குக் கிடைத்த வஹி மத்லுவ்வின் தொகுப்பாக அல் குர்ஆன் காணப்படுகின்றது. இந்த அல் குர்ஆனே இஸ்லாத்தின் முதலாவது அடிப்படைச் சட்ட மூலாதாரமாக அமைகிறது. முஸ்லிம் சமூகத்துக்கான அடிப்படை விதிகள், நியதிகள், நோக்கங்கள், நடைமுறைகள் போன்றன பற்றிய விளக்கங்களை அல் குர்ஆன் முன்வைக்கின்றது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மக்கா வாழ்க்கைப் பகுதியில் தொடங்கி மதீனா வாழ்க்கைப் பகுதியை முடிக்கும் வரை முஸ்லிம் சமூகத்தைக் கட்டியெழுப்புவதற்கான படிமுறையான வழிமுறைகள் வஹி மூலமாகவே காண்பிக்கப்பட்டன.

அவ்வழிமுறைகளுக்கூடாகவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது காலத்தில் முஸ்லிம் சமூகத்தைக் கட்டியெழுப்பி வழிநடாத்தினார்கள். சமூகத்தில், தேவைகள் ஏற்பட்ட போதும், சிக்கல்கள் தோன்றியபோதும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வஹி மூலமாகவே அவற்றைத் தீர்த்து

வைத்தார்கள். வஹி கிடைப்பது தாமதமாகும் சந்தர்ப்பத்தில் தமது இஜ்திஹாதின்படி தீர்த்து வைத்தார்கள். அது சரியாயின் அல்லாஹ்வின் அங்கீகாரம் கிடைக்கும். பிழையாயின் வழிகாட்டல்கள் வழங்கப்படும்.

'வஹி மூலமான ஓர் அறிவித்தலை நான் பெறாதபோது, எனது சொந்த இஜ்திஹாதின் அடிப்படையில் நான் உங்கள் மத்தியில் தீர்ப்பு வழங்குகிறேன்' (அபூதாவூத்) என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே சுட்டிக் காட்டியுள்ளார்கள்.

அல் குர்ஆன் சட்ட மூலாதாரம் என்ற வகையில் இரண்டு நிலைகளில் செயற் படுகின்றது.

1. சட்டத்தை நேரடியாக வழங்குகின்றது.
2. சட்டத்துக்கான அடிப்படையை வழங்கி அதிலிருந்து சட்டங்களைத் தேர்ந்தெடுக்க இடமளிக்கின்றது. இதன் மூலம் இஜ்திஹாத்துக்கான வழியும் காண்பிக்கப்படுகின்றது.

அல்குர்ஆன் ஏவல் தொடர்பான சட்டங்களையும், சட்ட விதிகளையும் முன்வைப்பது போன்றே விலக்கல் தொடர்பான சட்டங்களையும் சட்ட விதிகளையும் முன்வைக்கின்றது. சிலபோது அவை விரிவாகக் கூறப்படுகின்றன. சிலபோது சுருக்கமாக முன்வைக்கப்படுகின்றன. சுருக்கமாக முன்வைக்கப்பட்ட விடயங்கள் ஸுன்னாவின் மூலம் விளக்கப்படுகின்றன. காலவோட்டத்தில் தேவையின் போது இஜ்திஹாத் மூலமும் அது விளக்கப்படுகின்றது. அல்லது நடைமுறைப்படுத்துவதற்கான ஒழுங்குமுறையினை எடுத்துக் காட்டுகின்றது.

உதாரணமாக, பேரீச்சம் பழத்திலிருந்து பெறப்படும் மதுசாரமான 'அல் ஹம்ரு' அல்குர்ஆன் மூலம் ஹராமாக்கப்பட்டது. அதற்கான தண்டனையை ஸுன்னா எடுத்துக்காட்டியது. பேரீச்சம் பழம் மூலம் பெறப்படும் மதுசாரம் மாத்திரமல்ல ஏனையவற்றிலிருந்து பெறப்படும் (எல்லா) மதுசாரங்களும் ஹராம் என்பது இஜ்திஹாத் மூலம் நிரூபிக்கப்பட்டது. எனவே அல்குர்ஆனுடன், ஸுன்னாவும் அவற்றின் அடிப்படையில் தோன்றிய துணை மூலாதாரங்களும் ஷரீஅத்தை நிலைநாட்டுவதற்குத் துணை நிற்கின்றன.

மனிதன் இயற்றிய சட்டங்கள் அல்லது அவற்றின் தொகுப்புக்கள் மனித ஆக்கமாக இருக்க, அல் குர்ஆன் தெய்வீக ஆக்கமாக நிலைநிற்கின்றது. ஏனைய சட்ட நூல்கள் காலவோட்டத்தில் செயலிழக்க அல் குர்ஆன் எக்காலத்திலும் செயல்படத்தக்கதாக இருந்து வருகின்றது. ஏனைய சட்ட நூல்களுக்கில்லாத தெய்வீக பெறுமானமும், கட்டுப்படுத்தும் ஆற்றலும், மனித அங்கீகாரமும் அல் குர்ஆனுக்கு மட்டுமே உண்டு.

## 2. அல் குர்ஆன் - அற்புதம்

ஏதாவது ஒரு விடயம் இயல்புக்கு மாறாக நிகழும்போது, அதனை அற்புதம் என்கிறோம். இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வாழ்வில் சுட்டெரிக்கும் நெருப்பு, சாந்தியளிக்கும் குளிராக மாறியமை ஓர் அற்புதமாகும். இலைதழைகளைப் பறிப்பதற்குப் பயன்படுத்திய மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கைத்தடி பாம்பாக உருமாறியமை ஓர் அற்புதமாகும். கருங்கற் பாறையிலிருந்து ஒட்டகம் வெளியாகியமை ஸாலிஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கால அற்புதமாகும். இவ்வாறு அல்லாஹ் தான் வழங்கும் தூதை உறுதிப்படுத்துவதற்காக வெவ்வேறு அற்புதங்களை நபிமார்களுக்கு அருளியுள்ளான்.

பொதுவாக ஒவ்வொரு காலகட்டத்திலும் மக்கள் எந்தத் துறையை பிரபலமாகக் கருதி வந்தார்களோ, அந்தத்துறை சார்ந்தே அவ்வக்கால நபிமார்களின் அற்புதங்கள் வெளியாகியிருக்கின்றன. சூனியம் பிரபலமடைந்த காலத்தில் அதை முறியடிக்கும் விதத்தில் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமது அற்புதங்களை வெளிக்காட்டினார்கள். மருத்துவம் பிரபலமடைந்த காலகட்டத்தில், ஈஸா அலைஹிஸ்ஸலாம் நோயாளியைத் தடவி சுகப்படுத்தி அற்புதத்தை வெளிப்படுத்தினார்கள். அறபு மொழிப்புலமையும் இலக்கியமும் உயர்ந்து நின்ற காலகட்டத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல் குர்ஆனைத் தனது அற்புதமாக எடுத்துரைத்தார்கள்.

எல்லா நபிமார்களுக்கும் அவர்களுக்குத் தகுதியான அற்புதங்கள் வழங்கப்பட்டன. எனக்கு வழங்கப்பட்ட அற்புதம் அல் குர்ஆன் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே சுட்டிக்காட்டியிருந்தார்கள். அல்குர்ஆன் அருளப்பட்ட காலகட்டத்தில் அறபு மொழிப்புலமை உயர்வாகக் கணிக்கப்பட்டது. நாடோடிகள் கூட கவிபாடும் வல்லமையைப் பெற்றிருந்தார்கள். உக்காழ் சந்தையில் ஆண்டு தோறும் கவிதைப்போட்டிகள் இடம்பெற்றன. வெற்றி பெறும் கவிதைகள் கஃபாவில் தொங்கவிடப்பட்டு அந்தக் கவிஞர்கள் கௌரவிக்கப் பட்டார்கள். இதுபோன்ற நிலையிலேயே அன்றைய கவிஞர்களின் புலமையை மிகைக்கும் விதத்தில் அல் குர்ஆன் தனது அற்புதத்தை வெளிக்காட்டியது.

இஸ்லாத்தின் எதிரியாக செயல்பட்ட வலீத் இப்னு முகீரா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் உரையாடிவிட்டு வந்து, மற்றோர் எதிரியான அபூஜஹ்லிடம் இவ்வாறு கூறினான். 'நிச்சயமாக என்னைவிட திறமையாகக் கவி பாடக்கூடிய எவரும் உலகினில் இல்லை. இறைவன் மீதாணையாக (முஹம்மத் ஆகிய) அவரின் சொல்லானது அவற்றுள் எதையும் ஒத்ததாக இல்லை. அவர் கூறும் சொற்கள் இனிமையானவை; இதமானவை, அதன் மேற்பகுதி கனிந்தது, கீழ்ப்பகுதி பசுமையானது. அது அனைத்தையும் மிகைக்கும்; எதுவும் அதனை மிகைக்காது. கீழுள்ளதை அது தகர்த்து விடும். இதே போன்று அன்று பிரபலமான மற்றொரு கவிஞன் லபீத், அல் குர்ஆனுக்கு முன் தனது இயலாமையை ஒத்துக் கொண்டதோடு கவிபாடுவதையே நிறுத்திக் கொண்டதாக வரலாறு கூறுகின்றது.

அல் குர்ஆன், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சொந்த ஆக்கமல்ல, மற்றொரு புலமைவாதியிடம் கேட்டுச் சொன்னதுமல்ல. அது வஹி மூலம் அருளப்பட்ட அல்லாஹ்வின் வசனங்களாகும்.

இதனால் தான், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தாமாகவோ, மற்றொரு நபரின் துணையுடனோ அதனைக் கூறுகிறார் என்று நீங்கள் கருதுவதாயின், இது போன்ற ஒரு குர்ஆனை (52:34) அல்லது ஓர் அத்தியாயத்தை (2:23) பத்து ஆயத்துகளை (11:13) கொண்டு வாருங்கள் என்று அல் குர்ஆன் சவால்விட்டது. மனிதர் மட்டுமல்ல; ஜின் இனத்தையும் சேர்த்துக் கொண்டாவது அவ்வாறான ஒன்றைக் கொண்டுவர முடியாது (17;88) என்று அது அழுத்தமாகவே சொல்லிக் காட்டியது. அந்தச் சவால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்திலோ, பின்னரோ எவராலும் முறியடிக்கப்பட வில்லை. பலரும் முயற்சித்து தோல்வியையே சந்தித்தனர்.

அறபு மொழியிலும் இலக்கியத்திலும் அல் குர்ஆன் மிகுந்த செல்வாக்குச் செலுத்தியுள்ளது. இலக்கியத்திலிருந்து இலக்கணம் வகுக்கப்படுகின்றது என்ற பொது விதியின் படி, அல் குர்ஆன் அறபு இலக்கணத்துக்கான ஆதார நூலாக அமைந்திருக்கிறது.

பிற்காலத்தில் முபஸ்ஸிர்கள் அல் குர்ஆனைப் பல்வேறு கண்ணோட்டங்களில் ஆராய முற்பட்டபோது இமாம் ஸமஹ்ஷரி அவர்கள் இலக்கியக் கண்ணோட்டத்தில் தப்ஸீர் எழுதியுள்ளார். இது கஷ்ஷாப் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

அல் குர்ஆனின் ஈர்ப்புச் சக்தியைப் பல நிகழ்வுகள் எடுத்துக் காட்டுகின்றன. ஓரிரவு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கஃபாவுக்கருகில் ஸூறதுன் நஜ்மை ஓதித் தொழுது கொண்டிருந்தார்கள். குறைஷிக் காபிர்கள் எதிர்த்திசையில் மறைந்திருந்து அதன் இனிமையைச் சுவைத்துக் கொண்டிருந்தார்கள். நீங்கள் அல்லாஹ்வுக்கு சிரந்தாழ்த்துங்கள் என்ற அதன் இறுதி ஆயத்தை ஓதிய நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸுஜூதில் வீழ்ந்தார்கள். கூடவே, எதிர்த்திசையில் கேட்டுக் கொண்டிருந்த காபிர்களும் தம்மையறியாமலே ஸுஜூதில் வீழ்ந்தார்கள். (புஹாரி)



எந்த வேத நூலும் மனிதர்களால் முழுமையாக மனனமிட்டு நினைவில் வைத்திருக்கப்படுவதில்லை. ஆனால், சிறுவர் முதல் பெரியோர் வரை இலட்சக்

கணக்கானோர் எல்லாக் காலத்திலும் அல்குர்ஆனை முழுமையாக மனனமிட்டு வைத்திருக்கிறார்கள் என்பது கூட அல்குர்ஆனின் ஓர் அற்புதமேயாகும்.

அல் குர்ஆன், மொழிசார்ந்த அற்புதமாக இருப்பது போன்றே, அறிவியல் சார்ந்த அற்புதமாகவும் காணப்படுகின்றது. அது ஒரு விஞ்ஞான நூலல்ல, எனினும் பிற்காலத்தில் அறிவியல் மூலம் பெறப்பட்ட உண்மைகள், அல் குர்ஆனில் முற்கூட்டியே கூறப்பட்டுள்ளன. அல்லது, அல்குர்ஆனில் கூறப்பட்ட கருத்துக்கள் அறிவியல் ரீதியாக ஆய்வுக்குட்படுத்தப்பட்டு மெய்ப்பிக்கப்பட்டுள்ளன. அல் குர்ஆன், அல்லாஹ்வின் படைப்புகள் பற்றி அவதானிக்குமாறும் ஆராயுமாறும் கேட்கின்றது. அதன் மூலம் அல்லாஹ்வின் படைப்பாற்றலை விளங்கிக்கொள்வதோடு அவற்றின் நுட்பத்தை அறிந்து கொள்ளவும் வழிகாட்டியது. இதன் பயனாகவே அனேக விஞ்ஞான உண்மைகள் அல்குர்ஆனின் நம்பகத்தன்மையை மேலும் உறுதிபடுத்துகின்றன.




*நிச்சயமாக வானம், பூமி என்பவற்றின் படைப்பிலும், இரவு பகல் மாறிமாறி வருவதிலும் அறிவுடையோர்க்கு பல சான்றுகள் காணப்படுகின்றன. (3 ஆல இம்ரான்:190)* என்று அல்குர்ஆன் அறிவியலின் பால் அழைக்கின்றது. எனவேதான் சில சான்றுகளை ஆராய்ந்த பேராசிரியர் ஜேம்ஸ் ஜீன்ஸ், ஐம்பது ஆண்டுகளாகப் புலன்கள் மூலமும் ஆய்வு மூலமும் கண்டறிந்த விடயங்களை முஹம்மதுக்கு அறிவித்தவர் யார்? என ஆச்சரியத்தோடு கேட்கிறார்.

பேராசிரியர் கீதமோர், சிசு உருவாக்கம் பற்றிய அல் குர்ஆனின் கருத்தை ஆய்வு மூலம் உறுதிப்படுத்துகிறார். தேனில் மருத்துவ குணம் உண்டென்பதை அல் குர்ஆன் அன்றே சுட்டிக்காட்டியுள்ளது *(16 அந்நஹ்ல்:69)*.

'பூமியிலிருந்து மேலே செல்லச் செல்ல ஒட்சிசனின் அடர்த்தி குறைகிறது' என்று குர்ஆன் குறிப்பிட்டுள்ளது *(6 அல் அன்ஆம்:125)*.

அல் குர்ஆனின் அற்புதம் பற்றிய மற்றோர் அம்சம் அதன் எதிர்வு கூறுதலாகும். நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வரலாற்றை எடுத்துக் கூறும் அல்குர்ஆன், அவர்களின் கடும் எதிரியாகச் செயற்பட்ட பிர்அவ்னை நீரில் மூழ்கடித்ததோடு அவனது

உடலைப் பாதுகாப்பதாகவும் குறிப்பிட்டது. (10:92) இது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் கூட நிரூபனமாகவில்லை. ஆனால் கி.பி 19 ஆம் நூற்றாண்டில் இடம்பெற்ற அகழ்வாய்வின்போது அவனது உடல் கண்டெடுக் கப்பட்டது. அது இன்று கூட, எகிப்திய அரும்பொருட் சாலையில் வைக்கப்பட்டுள்ளது.

இஸ்லாம் மக்காவில் மாத்திரம் அறிமுகமாகியிருந்த காலகட்டத்தில் உரோமர் களுக்கும், பாரசீகர்களுக்குமிடையே தென் அரேபியாவில் போராட்டம் நிகழ்ந்தது. உரோம - பாரசீக போராட்டமொன்றில் பாரசீகர் வெற்றி பெற்றனர். இதனை உதாரணமாகக் காட்டி, 'பாரசீகர், வேதக்காரர்களை வெற்றி கொண்டது போல நாம் உங்களை வெற்றி கொள்வோம்' எனக் குறைஷியர் முஸ்லிம்களுக்கு எச்சரிக்கை செய்தனர். அவ்வேளை மற்றொரு போரில் உரோமர் பாரசீகரை வெல்வர் (அர் ரூம் 30:2 - 4) என அல்குர்ஆன் எதிர்வு கூறியது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவில் வாழும் காலகட்டத்தில் தென் அரேபியாவில் மீண்டும் உரோமர்களுக்கும் பாரசீகர்களுக்குமிடையில் போர் (கி. பி 623) நிகழ்கிறது. அல் குர்ஆன் குறிப்பிட்டது போலவே அப்போரில் உரோமர் வெற்றி கண்டனர்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ الْوَحْيُ الْمَتْلُوُّ ❁ الاِجْتِهَادُ ❁ التَّمْرُ ❁ العُكَاظُ ❁ الكَشَّافُ

**பயிற்சி**

1. சட்ட மூலாதாரம் என்றால் என்ன?
2. இஸ்லாத்தின் சட்ட மூலாதாரங்கள் எவை?
3. மனிதன் சட்டம் இயற்றுவதால் ஏற்படும் பாதகங்கள் எவை?
4. ஷரீஅத் சட்டங்கள் மனிதனை எவ்வாறு பாதுகாக்கின்றன?
5. சட்ட மூலாதாரங்களில் காணப்பட வேண்டிய இரண்டு பண்புகளைக் குறிப்பிடுக.
6. அற்புதம் என்றால் என்ன?
7. நபிமார்களால் காண்பிக்கப்பட்ட அற்புதங்கள் மூன்றைத் தருக.
8. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அற்புதம் எது? அது ஏனைய நபிமார்களின் அற்புதங்களிலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது?
9. அல் குர்ஆனின் முன்னால் தமது பலவீனத்தை ஒப்புக்கொண்ட மூவரின் பெயர்களைக் குறிப்பிடுக.
10. அல் குர்ஆனின் அறிவியல் சார்ந்த அற்புதத்தை எடுத்துக்காட்டும் மூன்று வசனங்களைக் குறிப்பிடுக.

# 15

# அஸ் ஸுன்னா

وَمَا يَنْطِقُ عَنِ الْهَوٰى إِنْ هُوَ إِلَّا وَحْيٌ يُّوْحٰى

''அவர் தன் இஷ்டப்படி எதனையும் கூறுவதில்லை. இது அவருக்கு வஹி மூலம் அறிவிக்கப்பட்டதேயன்றி (வேறு) இல்லை.''

(53 அந் நஜ்ம் : 3-4)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சொல், செயல், அங்கீகாரம் ஆகிய மூன்றையும் உள்ளடக்கியவை ஸுன்னா அல்லது ஹதீஸ் எனப்படுகின்றது. அல் குர்ஆனை 'வஹி மத்லுவ்வு' (ஓதிக் காண்பிக்கப்பட்ட வஹி) எனக் குறிப்பிடுவதுபோல ஸுன்னாவை 'வஹி கைரு மத்லுவ்வு' எனக் குறிப்பிடுவர். இதன் கருத்து ஓதிக் காண்பிக்கப்படாத வஹி என்பதாகும். அல் குர்ஆனின் மொழியும் கருத்தும் அல்லாஹ்வுடையதாக இருக்கும். ஸுன்னாவின் மொழி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடையதாகவும் கருத்து அல்லாஹ்வுடையதாகவும் இருக்கும்.

*''அவர் தன் இஷ்டப்படி எதனையும் கூறுவதில்லை. இது அவருக்கு வஹி மூலம் அறிவிக்கப்பட்டதேயன்றி (வேறு) இல்லை. (ஜிப்ரீல் எனும்) வலுவான ஆற்றலுடையவர் அவருக்குக் கற்றுக்கொடுக்கிறார்''. (53 அந்நஜ்ம்: 3-5)* என்று அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது.

*''எவர் (அல்லாஹ்வுடைய) தூதருக்கு (முற்றிலும்) கட்டுப்பட்டு நடக்கிறாரோ அவர் நிச்சயமாக அல்லாஹ்வுக்கு வழிப்பட்டவராவார்''. (4 அந்நிஸா: 80)*

*''(நம்முடைய) தூதர் உங்களுக்குக் கொடுத்ததை நீங்கள் (மனமொப்பி) எடுத்துக் கொள்ளுங்கள்'' (59 அல் ஹஷ்ர்: 7)*

*''நபியே நீர் கூறும். நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவராக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான்''. (3 ஆல இம்ரான் : 31)*

அல் குர்ஆன் மனிதனின் தனிப்பட்ட குடும்ப, சமூக வாழ்வு பற்றி எவ்வாறு வழிகாட்டுகின்றதோ அவ்வாறே ஸுன்னாவும் மனிதனின் தனிப்பட்ட, குடும்ப, சமூக விவகாரங்கள் தொடர்பாக வழிகாட்டுகின்றது. மற்றொரு வகையில் சொல்வதானால், அல் குர்ஆன் கோட்பாட்டு ரீதியாக முன்வைத்த கருத்துக்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நடைமுறைப்படுத்திக் காட்டியுள்ளார்கள். மட்டுமன்றி மனிதன் என்ற நிலையில் நடைமுறைப்படுத்தும்போது ஏற்படும் சிக்கல்களையும் தீர்த்து வைத்துள்ளார்கள். எனவேதான் ஸுன்னா ஒரு சட்ட மூலாதாரமாக அமைகின்றது.

மேலும் அல் குர்ஆன் சுருக்கமாகக் கூறியவற்றை ஸுன்னா விளக்கிக் காட்டியுள்ளது. அல் குர்ஆனின் போதனைகளை மேலும் வலியுறுத்தி விளக்கிக் காட்டியது. அல் குர்ஆன் குறித்துக்காட்டாத சில விடயங்களை எடுத்துக்காட்டி, இஜ்திஹாத் செய்வதற்கு வழிகாட்டியாகவும் அமைந்துள்ளது. எனவேதான், 'நிச்சயமாக என் இறைவன் எனக்குக் கற்றுத் தந்ததிலிருந்து நீங்கள் அறியாததை உங்களுக்குக் கற்றுத் தருமாறு அவன் எனக்குக் கட்டளை பிறப்பித்துள்ளான்' (முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே இதனை விளக்கிக் கூறியுள்ளார்கள்.

மேற்குறிப்பிட்டவை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஸுன்னா, ஷரீஆவின் மூலாதாரங்களில் ஒன்றாக இருக்கின்றது என்பதையும் ஷரீஆ சட்டங்களை உருவாக்குவதிலும் பங்காற்றியிருக்கிறது என்பதையும் எடுத்துக் காட்டு கின்றன. ஆகவே, அல் குர்ஆனைக் கற்பது, பாதுகாப்பது. நடைமுறைப்படுத்துவது போதிப்பது போலவே ஸுன்னாவையும் கற்பதும் பாதுகாப்பதும் நடைமுறைப் படுத்துவதும் போதிப்பதும் முஸ்லிம் சமூகத்தின் கடமையாகும். எனவேதான், 'எனக்கு அல் குர்ஆனும் (அதனோடிணைந்து) அதனையொத்த இன்னொன்றும் அருளப்பட்டுள்ளது' என்றும், நான் உங்களுக்கு மத்தியில் இரண்டை விட்டுச் செல்கின்றேன். அவற்றைப் பின்பற்றும் காலமெல்லாம் நீங்கள் வழிதவற மாட்டீர்கள்; அவை அல்லாஹ்வின் வேதமும், அவனது தூதரின் வழிமுறையுமாகும்' (முவத்தா) என்றும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எடுத்துக்காட்டி ஊக்குவித்துள்ளார்கள்.

ஸுன்னா அல்லது ஹதீஸ் கியாமநாள் வரை உலகில் சரியாக முன்வைக்கப்பட வேண்டும் என்பதில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிகுந்த கவனம் செலுத்தியுள்ளார்கள். தன்னைப் பற்றி ஒரு வசனமேனும் தெரிந்திருப்பின் அதனை எத்தி வைக்குமாறு அறிவுறுத்தினார்கள். தான் கூறாததைக் கூறியதாக பொய்யாக முன்வைப்பவர்கள் நரகில் தனது தங்குமிடத்தை ஆக்கிக்கொள்வார் என எச்சரித்துள்ளார்கள். ஹதீஸ்களைத் திருத்தமாக மனனமிடச் செய்வதிலும், எழுதி வைப்பதிலும் மிகுந்த அக்கறை செலுத்தினார்கள். ஹதீஸ் கற்றல் - கற்பித்தலுக்கென சில ஸஹாபாக்களை நியமித்தார்கள். அஸ்ஹாபுஸ் ஸுப்பாக்களையும் இதற்குப் பயன்படுத்தினார்கள்.

இதன் காரணமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் போதனைகளும் (கவ்ல்) செய்கைகளும் (பிஅல்) அங்கீகாரங்களும் (தக்ரீர்)

ஸஹாபாக்களால் நுணுக்கமாக அவதானிக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டுள்ளன.



நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்துக்குப் பின் சமூகத்திலெழுந்த சட்டப் பிரச்சினைகள் ஹதீஸின் தேவையை உணர்த்தி நின்றன. அவ்வேளை ஸஹாபாக்கள் சாட்சிகளுடன் அவற்றை முன்வைத்தனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சில ஸஹாபாக்களை ஹதீஸ் துறைக்கென்றே பயிற்றுவித்ததனால் அவர்கள் மூலம் இளம் ஸஹா பாக்களும், தாபிஈன்களும் செவி வழியாக ஹதீஸ்களைக் கற்றுக்கொண்டனர். புறநடையாக எழுத்து வடிவிலும் பதிந்தும் கற்பித்தும் வந்தனர்.



அல் குர்ஆன் அழிந்துவிடும் என்ற அச்சத்தின் காரணமாக அல் குர்ஆனைத் தொகுக்கும் முயற்சி கலீபா அபூ பக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் மேற்கொள்ளப்பட்டது. ஹதீஸைப் பொறுத்தவரை, அதனை நூலுருவாக்கும் முயற்சி கலீபா உமர் பின் அப்துல் அஸீஸ் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் காலத்திலேயே முக்கியத்துவம் பெற்றது. கலீபாவின் உத்தரவுக்கிணங்க இமாம் ஷிஹாபுத்தீன் ஸுஹ்ரி ஹதீஸ்களைத் திரட்டினார். எனினும் அது முழுமை பெறவில்லை. தாபிஈன்கள் காலத்தில் முஸ்லிம் பேரரசின் தலைநகரங்களில் ஹதீஸ் போதனைகள் இடம்பெற்றன. ஹதீஸ்துறை அறிஞர்கள் அவற்றை நடத்தி வந்தார்கள். அவர்களின் முயற்சியால் ஹதீஸ் தொகுப்பு நூல்களும் தோன்ற ஆரம்பித்தன. இதற்கு உதாரணமாக இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ் அவர்களின் முவத்தாவையும், இமாம் அஹ்மத் ரஹிமஹுல்லாஹ் அவர்களின் முஸ்னதையும் குறிப்பிடலாம்.

அத்துடன் முஸ்லிம் சமூகத்தை, இஸ்லாத்தை விட்டும் தூரமாக்கும் நோக்கில் ஹதீஸ் என்ற பெயரில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் தொடர்புபடாத விடயங்களும் ஹதீஸ்களாக எடுத்துக் காட்டப்பட்டன. இடைக் காலத்தில் போலி ஹதீஸ்களும் உலவ ஆரம்பித்தன. இதன்போது ஹதீஸ் அறிந்தவர்களை நேரில் சந்தித்து அவற்றின் உண்மை நிலையை உய்த்தறிந்து எழுதும் முயற்சி ஆரம்பமானது. இதன் விளைவாக ஹதீஸ்கள் திறனாயப்பட்டன. தரம் பிரிக்கப்பட்டன. ஹதீஸ் கலா நிலையங்கள் வளர்ச்சியடைந்தன. ஆதாரபூர்வமான ஹதீஸ் நூல்கள் கிடைத்தன. இமாம் புஹாரி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் ஸஹீஹ் புஹாரி, இமாம் முஸ்லிம் ரஹிமஹுல்லாஹ் அவர்களின் ஸஹீஹ் முஸ்லிம், இமாம் திர்மிதி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் ஜாமிஉத் திர்மிதி, இமாம் அபூ தாவூத் ரஹிமஹுல்லாஹ் அவர்களின் ஸுனன் அபூ தாவூத், இமாம் நஸஈ ரஹிமஹுல்லாஹ் அவர்களின் ஸுனனு நஸஈ, இமாம் இப்னு மாஜா ரஹிமஹுல்லாஹ் அவர்களின் ஸுனனு இப்னு மாஜா போன்ற கிரந்தங்கள் தோற்றம் பெற்றன. இந்த ஆறு

கிரந்தங்களும் ஸிஹாஹுஸ் ஸித்தா என்று அழைக்கப்படுகின்றன. ‘அல்குர்ஆனுக்கு அடுத்தடுத்த தரங்களில் மதிக்கப்படும் முன்னணி ஹதீஸ் கிரந்தங்களாகத் திகழ்கின்றன. இவை பல விளக்கவுரை நூல்களையும் பெற்றுள்ளன. இவற்றுக்கான விரிவுரைகளும் மொழிபெயர்ப்புகளும்கூட வெளிவந்திருக்கின்றன.

### ஆறு ஹதீஸ் கலை இமாம்கள் பற்றிய குறிப்புக்கள்

| பெயர் | பிறப்பு ஹிஜ்ரி | புனைப் பெயர் | தந்தை பெயர் | பிறந்த ஊர் | ஹதீஸ் தொகுப்பு | உள்ள டக்கம் | மறைவு ஹிஜ்ரி |
|---|---|---|---|---|---|---|---|
| முஹம்மத் | 194 | புஹாரி | இஸ்மாஈல் | புஹாரா | ஸஹீஹ் புஹாரி | 7275 | 256 |
| முஸ்லிம் | 204 | | ஹஜ்ஜாஜ் | நைசாபூர் | ஸஹீஹ் முஸ்லிம் | 4000 | 261 |
| முஹம்மத் | 209 | திர்மிதி | ஈஸா | திர்மிதி | ஜாமிஉத் திர்மிதி | 4800 | 279 |
| ஸுலைமான் | 201 | அபூ தாவூத் | அஷ்அஸ் | சிஜிஸ்தான் | ஸுனன் அபூதாவூத் | 4800 | 275 |
| அஹ்மத் | 215 | நஸாஈ | சுஐப் | நஸாஃ | ஸுனன் நஸாஈ | 4341 | 303 |
| முஹம்மத் | 209 | இப்னு மாஜா | யஸத் | கஸ்வின் | ஸுனன் இப்னு மாஜா | 4000 | 273 |

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ وَحْي غَيْرُ مَتْلُوّ ❁ قَوْلٌ ❁ فِعَلٌ ❁ تَقْرِيْر ❁ المُوَطَّأ ❁ مُسْنَدُ ❁ الصِّحَاحُ السِّتَّةُ ❁ السُّنَّةُ

**பயிற்சி**

1. ஸுன்னாவுக்குக் கட்டுப்பட வேண்டும் என்பதற்கான அல்குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்கள் இவ்விரண்டை எடுத்துக் காட்டுக.
2. அல்குர்ஆன் கோட்பாட்டு ரீதியாக முன்வைத்துள்ளதை ஸுன்னா நடைமுறைப்படுத்திக் காட்டுகின்றது என்பதற்கு உதாரணங்கள் இரண்டை முன்வைக்குக.
3. ஸுன்னாவைப் பாதுகாப்பதற்காக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மேற்கொண்ட மூன்று நடவடிக்கைகளைக் குறிப்பிடுக.
4. ஸஹாபாக்களும், தாபிஈன்களும் ஸுன்னாவைப் பாதுகாப்பதற்காக மேற்கொண்ட பணிகளை எடுத்துக்காட்டுக.
5. ஸுன்னா சட்ட மூலாதாரம் என்பதை எவ்வாறு நிறுவுவீர்?

# 16

# அல் இஜ்திஹாத்

﴿ يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا أَطِيعُوا اللَّهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَأُولِي الْأَمْرِ مِنْكُمْ فَإِنْ تَنَازَعْتُمْ فِي شَيْءٍ فَرُدُّوهُ إِلَى اللَّهِ وَالرَّسُولِ.... ﴾

'விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு நடவுங்கள். அவ்வாறே அல்லாஹ்வுடைய தூதருக்கும், உலுல் அம்ர்களுக்கும் வழிப்பட்டு நடவுங்கள். (விசுவாசிகளே) உங்களுக்குள் ஏதாவதொரு விடயத்தில் பிணக்கு ஏற்பட்டால் அதனை அல்லாஹ்விடமும் (அவனுடைய) தூதரிடமும் ஒப்படைத்துவிடுங்கள்' ( 4 அன் நிஸா :59)

இஸ்லாத்தின் மூலாதாரங்களை அடிப்படை மூலாதாரங்கள், துணை மூலாதாரங்கள் என இரண்டாக வகுப்பர். அல்குர்ஆனும் ஸுன்னாவும் அடிப்படை மூலாதாரமாக அமைய, அந்த இரண்டிலிருந்தும் இஜ்திஹாத் மூலம் பெறப்பட்ட மூலாதாரங்கள் துணை மூலாதாரங்கள் எனப்படுகின்றன. இவை காலத்துக்குக் காலம் தோன்றக் கூடிய சட்டச் சிக்கல்களைத் தீர்த்து வைக்க மேற்கொள்ளப்படும் இஜ்திஹாத் நடவடிக்கைகளின்போது அடிப்படை ஆதாரங்களுக்குத் துணையாக அமைகின்றன.

'இஜ்திஹாத்' என்ற சொல் 'ஜஹத' என்ற மூலச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். இதன் கருத்து முயற்சித்தல் என்பதாகும். புதிய பிரச்சினையொன்று தோன்றி அதற்கான தீர்வை அல் குர்ஆனோ, ஸுன்னாவோ நேரடியாக வழங்கியிருக்காதபோது அல் குர்ஆனிலும் ஸுன்னாவிலும் ஆழமான அறிவுள்ளவர்கள் அவ்விரண்டையும் அடிப்படையாக வைத்துத் தீர்வினைப் பெறுவதற்காக மேற்கொள்கின்ற ஆய்வு முயற்சியையே இது குறிக்கின்றது. இந்தப் பணியில் ஈடுபடுவோர் முஜ்தஹிதுகள் என அழைக்கப்படுகின்றனர்.

இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்களின் ஆழமான கருத்துக்களிலிருந்து ஷரீஆ எதிர்கொள்ளும் நடைமுறைப் பிரச்சினைகளுக்கான தீர்வுகளைப் பெறுவதற்கு ஒரு சட்டத்துறை அறிஞர் தனது ஆற்றல்களைப் பிரயோகிப்பதே இஜ்திஹாத் என இமாம் ஷவ்கானி வரைவிலக்கணப்படுத்துகிறார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உயிர்வாழ்ந்து கொண்டிருந்த போதும், அவரது சமூகத்தில் புதுப் பிரச்சினைகள் தோன்றின. குறிப்பிட்ட அப்பிரச்சினைகளுக்கான தீர்வை அல்லாஹ் வஹி மூலம் அறிவித்தான். சிலபோது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவற்றுக்கான தீர்வுகளை முன்வைத்தார்கள்.

முஆத் இப்னு ஜபல் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை யமனுக்கு கவர்ணராக அனுப்பியபோது, 'உங்களிடம் புதிய பிரச்சினைகள் முன்வைக்கப்பட்டால் எவ்வாறு தீர்ப்பளிப்பீர்கள்?' என வினவினார்கள். அப்போது 'அல்லாஹ்வின் கலாமாகிய அல்குர்ஆனில் கூறப்பட்டிருப்பதுபோல் தீர்ப்பளிப்பேன்' என்றார்கள். 'அதில் காணப்படாவிட்டால்?' என்று கேள்வி எழுப்பியபோது, 'அல்லாஹ்வின் தூதரின் முன்மாதிரியிலிருந்து பெற்றுக்கொள்வேன்' என்றார்கள். 'அதிலும் தீர்ப்புக் கிடைக்காதுபோனால்?' எனக் கேட்கப்பட்டபோது, 'அவ்விரண்டையும் அடிப்படையாகக்கொண்டு இஜ்திஹாத் செய்து தீர்ப்பளிப்பேன்' என்றார்கள். அவ்வேளை 'அல்லாஹ்வின் தூதரின் தூதருக்கு இவ்வாறான தீர்வுக்கு உதிப்பை ஏற்படுத்திய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்' (திர்மிதி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வாழ்த்துத் தெரிவித்தார்கள்.

இது தவிர, ஸஹாபாக்கள் இஜ்திஹாத் காண்பதற்கான வெவ்வேறு சந்தர்ப்பங்களையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஏற்படுத்திக்கொடுத்து பயிற்சி அளித்துள்ளார்கள் என்பதற்கு பல சான்றுகள் உள்ளன.

''விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு நடவுங்கள். அவ்வாறே அல்லாஹ்வுடைய தூதருக்கும், உலுல் அம்ர்களுக்கும் வழிப்பட்டு நடவுங்கள். (விசுவாசிகளே) உங்களுக்குள் ஏதாவதொரு விடயத்தில் பிணக்கு ஏற்பட்டால் அதனை அல்லாஹ்விடமும் (அவனுடைய) தூதரிடமும் ஒப்படைத்துவிடுங்கள்'' *(4 அந்நிஸா:59)* என்ற அல்குர்ஆன் வசனத்தில் இடம்பெற்றுள்ள 'உலுல் அம்ர்' எனப்படுபவர்கள் முஜ்தஹித்களாவர் என முபஸ்ஸிரீன்கள் விளக்கமளித்துள்ளனர்.

முஜ்தஹித்களிடம் இருக்க வேண்டிய பண்புகளை பின்வருமாறு வகைப்படுத்தி நோக்கலாம்.

1. முஸ்லிமாக இருத்தல்.
2. அல்குர்ஆன், ஸுன்னாவில் ஆழமான அறிவுடையவராக இருத்தல்.
3. கலைகளில் நிபுணத்துவம் பெற்றிருத்தல்.
4. அரபு மொழியில் பாண்டித்தியம் பெற்றிருத்தல்.
5. முன்னைய முஜ்தஹித்களின் இஜ்திஹாத் பற்றிய விளக்கம் காணப்படல்.
6. ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட பிரச்சினைகள் பற்றிய தெளிவு காணப்படல்.
7. தக்வாவும் நன்னடத்தையும் உடையவராயிருத்தல்.

'ஒரு முஜ்தஹித் இஜ்திஹாத் செய்து அவரது முடிவு சரியாக அமைந்தால் அவருக்கு இரண்டு கூலிகள் உண்டு. இஜ்திஹாத் செய்து அவரது முடிவு பிழையாக அமைந்துவிட்டால் அவருக்கு ஒரு கூலி உண்டு' (புஹாரி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டுள்ளமை, தகுதியானவர் இஜ்திஹாத் பணியில் ஈடுபடுவதை ஊக்குவிப்பதாக அமைந்துள்ளது.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ الاِجْتِهَادُ ❁ جَهَدَ ❁ المُجْتَهِدُ ❁ أُولِى الْأَمْرِ

**பயிற்சி**

1. இஜ்திஹாத் என்ற சொல்லின் கருத்தை விளக்குக.
2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஜ்திஹாத் செய்வதற்கு அனுமதித்துள்ளார்கள் என்பதற்கான இரண்டு ஆதாரங்களைத் தேடி எழுதுக.
3. முஜ்தஹித்கள் பெற்றிருக்க வேண்டிய தகைமைகளைப் பட்டியற் படுத்துக.

# 17

# பிக்ஹுக் கலை

"مَنْ يُرِدِ اللَّهُ بِهِ خَيْرًا يُفَقِّهْهُ فِي الدِّينِ". (رواه البخاري ومسلم)
யாருக்கு அல்லாஹ் நலவை நாடுகிறானோ அவருக்கு மார்க்கத்தில் தெளிவைக் கொடுப்பான் (புஹாரி, முஸ்லிம்)

இஸ்லாமிய வரலாற்றில் பல்வேறு அறிவியற் கலைகள் தோற்றம் பெற்றுள்ளன. அவற்றுள் பிக்ஹுக்கலை முதன்மையானதாகும். இஸ்லாமியக் கலைகளில் இதுவே முதலில் தோன்றிய கலையாகக் கருதப்படுகின்றது.

'பிக்ஹு' என்ற சொல்லின் கருத்து விளக்கம் என்பதாகும். ஷரீஅத்தில் அல்குர்ஆன், ஸுன்னா, இஜ்திஹாதின் அடிப்படையில் பெறப்பட்ட சட்டங்கள் பிக்ஹில் உள்வாங்கப்பட்டுள்ளன.

பிக்ஹு ஒரு தனிக்கலையாகத் தாபிஈன்கள் காலத்திலிருந்து வளர்ச்சியடைய ஆரம்பித்தது. இவர்களது காலத்தில் இஸ்லாமிய தேசத்தின் பிரதானமான நகரங்களில் பிரபலமான முஜ்தஹித்களின் பிக்ஹு விளக்க வகுப்புக்கள் நடைபெற்று வந்தன. புதிய பிரச்சினைகள் தோன்றியபோது அவர்கள் தமது இஜ்திஹாதின் அடிப்படையில் தீர்ப்புக்களை வழங்கினர்.

தபஉத் தாபிஈன்கள் காலம் பிக்ஹுத் துறையின் ஒரு பொற்காலமாக அமைந்தது. இக்காலத்தில் பல்வேறு புதிய பிரச்சினைகளுக்கு மார்க்கத் தீர்ப்பு சொல்லப்பட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. எனவே அறிஞர்கள் இஜ்திஹாதின் அடிப்படையில் அவற்றுக்குத் தீர்வுகளை முன்வைத்தனர். பின்னர் அத்தீர்வுகள் ஒன்று திரட்டப்பட்டு பிக்ஹு சட்டத் தொகுப்புக்களாக வெளியாகின. அவை மத்ஹப்கள் தோற்றம் பெறுவதற்கு வழிகோலின.

வரலாற்றில் பல மத்ஹப்கள் தோன்றினாலும் பல்வேறு காரணங்களால் நான்கு மத்ஹப்கள் நிலைபெற்றன. இம்மத்ஹப்கள் அவற்றின் தோற்றத்திற்குக் காரணமாய் அமைந்த இமாம்களின் பெயர்களால் அழைக்கப்படுகின்றன. இவர்களது முயற்சியானது முகல்லிதுகளாகிய பொது மக்கள் இஸ்லாத்தின் அடிப்படையில் வாழ்வதற்கு இலகுவாக அமைந்தது.

## இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ் (ஹிஜ்ரி 80-150)

நுஃமான் இப்னு ஸாபித் என்ற இயற்பெயரைக் கொண்ட இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ் கூபாவில் பிறந்தார். இவர் இமாமுல் அஃழம் என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டார்.

இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ் ஒரு வியாபாரியாக இருந்தபோதிலும் மார்க்கக் கலைகளைக் கற்பதில் ஆர்வம் காட்டினார். கூபாவின் பிரபல அறிஞர் ஹம்மாத் பின் அபீசுலைம் அவர்களின் வகுப்பில் சேர்ந்து தேர்ச்சி பெற்றார். ஹஜ் பயணங்களின் போது மக்கா, மதீனாவில் வாழ்ந்த அறிஞர்களிடமும் கற்றுக் கொண்டார். சில சந்தர்ப்பங்களில் ஹம்மாதின் வகுப்பில் இவரும் பாடபோதனை நடாத்தினார். ஹம்மாதின் வபாத்துக்குப் பின்னர் இவரே அப்பாட போதனா வகுப்பைத் தலைமை ஏற்று நடத்தினார்.

இக்காலகட்டத்தில் சட்டப் பிரச்சினைகள் தோன்றிய போது இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தாமாகவும், சில சந்தர்ப்பங்களில் சமகால அறிஞர்களுடன் இணைந்தும் அவற்றுக்கான தீர்வுகளை முன்வைத்தார்கள். அவை ஆவணப் படுத்தப்பட்டு பிற்காலத்தில் பிக்ஹுல் அக்பர் என்ற பெயரில் நூலாக வெளியாகிப் பிரபல்யமடைந்தது.

இவர் வாழ்ந்த காலத்தில் ஹதீஸ்களின் நம்பகத்தன்மை தெளிவின்மையால் தாம் சரியென இனங்கண்ட ஹதீஸ்களை ஆதாரமாகக் கொண்டு இஜ்திஹாத் மூலம் தீர்ப்புக்களை வழங்கினார். இதனால் இவரது சிந்தனைப்போக்கு 'மத்ரஸதுர் ரஃயு' எனப்பட்டது. இவரது மாணவர்களான இமாம் அபூயூசுப், ஸுபர், ஹஸன் ஷைபானி ஆகியோர் தமது ஆசிரியரின் கருத்துக்களை பிற்காலத்தில் ஹதீஸ்களுடன் இணைத்து மெருகூட்டினர்.

இவரது மத்ஹப் பிற்காலத்தில் ஹனபி மத்ஹப் என வழங்கப்பட்டது. இமாம் அபூயூசுப், கலீபா ஹாரூனின் காலத்தில் பிரதம நீதியரசராகப் பணியாற்றியதால், கலீபா ஹாரூனின் காலத்தில் ஹனபி மத்ஹப் அரச மத்ஹபாகப் பிரகடனப்படுத்தப்பட்டது.

## இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ் (ஹிஜ்ரி 93-179)

மாலிக் இப்னு அனஸ் என்ற இயற் பெயர் கொண்ட இவர் மதீனாவில் பிறந்தார். இமாமுல் மதீனா என்ற சிறப்புப் பெயராலும் அழைக்கப்பட்டார். இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ்வின் சமகாலத்தவரான இவர், மதீனாவில் வாழ்ந்த தாபிஈ அறிஞர்களிடம் ஹதீஸையும் பிக்ஹையும் கற்றுக் கொண்டார். இவர் மதீனாவில் பாடபோதனைகளை நடாத்திவந்தார். அதில் அவரது மாணவர்களும் பொதுமக்களும் கலந்து கொண்டனர். சிலபோது கலீபாக்களும் கலந்துகொண்டனர்.

இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ் மதீனாவில் வாழ்ந்தமையால் ஹதீஸ்களைப் பெற்றுக் கொள்வது அவருக்கு இலகுவாக இருந்தது. எனவே பிக்ஹுப் பிரச்சினைகளுக்கான தீர்வை அல் குர்ஆன், ஸுன்னாவின் அடிப்படையில் முன்வைத்தார். இதனால் இவரது பிக்ஹு சிந்தனை 'மத்ரஸதுல் அஸர்' எனப்பட்டது. இவரது மத்ஹப் மாலிகி மத்ஹப் என வழங்கப்படுகிறது.

இவரது நூல்களுள் முவத்தா பிரபல்யமானதாகும். இவரது மாணவர் யஹ்யா அந்தலூஸி என்பவரால் ஸ்பானியாவில் மாலிகி மத்ஹப் அறிமுகமாகியதோடு, கலீபா இரண்டாம் ஹகமின் காலத்தில் அங்கு அரச மத்ஹபாகவும் அது பிரகடனப்படுத்தப்பட்டது.

மாலிகி மத்ஹப் மதீனாவில் அறிமுகமாகியபோதும் அது வட, மேற்கு ஆபிரிக்க நாடுகளில் குறிப்பிடத்தக்க செல்வாக்கைப் பெற்றது.

## இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ் (ஹிஜ்ரி 150 - 204)

முஹம்மத் இப்னு இத்ரீஸ் என்ற இயற்பெயரைக் கொண்ட இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ் பலஸ்தீன் காஸாவில் பிறந்தார். குறைஷி வம்சத்தைச் சேர்ந்த இவர் ஆலிமுல் குறைஷ் என்ற சிறப்புப் பெயராலும் அழைக்கப்பட்டார்.

மக்காவிலும் மதீனாவிலும் கல்வி கற்று இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் தலைநகர் பக்தாதில் கற்பித்து வந்தார். யமனில் சில காலம் அரச பணியிலும் ஈடுபட்டார். பக்தாதில் முப்தியாகவும், போதகராகவும் பணியாற்றினார். பக்தாதில் முஃதஸிலாக்களின் தலையீடு அதிகரித்தமையால் அங்கிருந்து எகிப்துக்குச் சென்றார்.

ஸுன்னாவிலும் பிக்ஹிலும் தேர்ச்சி பெற்ற இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ், ஏக காலத்தில் அரபு இலக்கியம், மருத்துவம் போன்ற துறைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். கவிஞராகவும் புகழ்பெற்றிருந்தார். முஸ்னத் இமாம் ஷாபிஈ, கிதாப் அல் உம்மு, அர்ரிஸாலதுல் உஸூலிய்யா ஆகியன இவரது நூல்களுள் பிரபல்யமானவையாகும்.

இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ் அவர்கள், இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ், ஹனபி மத்ஹபைச் சேர்ந்த இமாம் அபூயூஸுப் அவர்களிடமும் கற்றுக்கொண்டார். இதனால் அவரது சிந்தனைப் போக்கு 'மத்ரஸதுல் அஸர், மத்ரஸதுர் ரஃயு' ஆகிய இரண்டையும் உள்வாங்கியாகியதால் முற்போக்குத் தன்மை கொண்டதாக அமைந்தது.

இவர் பக்தாதில் வாழ்ந்தபோது வழங்கிய தீர்ப்புக்கள் கதீம் (பழையவை) எனவும் எகிப்தில் வழங்கிய தீர்ப்புகள் ஜதீத் (புதியவை) எனவும் வழங்கப்படுகின்றன. இவரது மத்ஹப், சுல்தான் ஸலாஹுத்தீனின் காலத்தில் எகிப்தில் அரச மத்ஹபாகப் பிரகடனப் படுத்தப்பட்டதால் அம்மத்ஹப் வளர்வதற்கான சாதக நிலைமைகள் உருவாகின. இலங்கை, இந்தோனேசியா, மலேசியா, எகிப்து, போன்ற நாடுகளில் பெரும்பாலானவர்கள் ஷாபிஈ மத்ஹபைப் பின்பற்றுகின்றனர்.

## இமாம் ஹன்பலி ரஹிமஹுல்லாஹ் (ஹிஜ்ரி 164– 241)

அஹ்மத் இப்னு முஹம்மத் ஹன்பல் என்ற இயற் பெயருடைய இவர் பக்தாதில் பிறந்து வளர்ந்தார். இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ், இமாம் அபூ யூசுப் ஆகியோரின் மாணவராக இருந்தமையாலும் பக்தாதில் வாழ்ந்தமையாலும் பல்துறைகளிலும் தேர்ச்சி பெற்றுக்கொள்வதற்கு வாய்ப்புக் கிட்டியது.

இவர் ஹதீஸ், பிக்ஹு ஆகிய இரு துறைகளிலும் பங்காற்றியுள்ளார். இவரது நூல்களுள் முஸ்னத் அஹ்மத் பிரபல்யமானது. கிரேக்க சிந்தனையின் செல்வாக்கினால்

தோற்றம் பெற்ற முஃதஸிலாக்களின் கருத்துக்கள் பரவியிருந்த அக்காலத்தில் அவர் அல் குர்ஆன், ஸுன்னாவின் அடிப்படையில் தனது சிந்தனைகளை முன்வைத்தார்.

இதனால் இவரது சிந்தனைப் போக்கு 'மத்ரஸதுல் அஸரை' சார்ந்திருந்தது. அப்பாஸியக் கலீபா முதவக்கிலின் காலத்தில் ஹன்பலி மத்ஹப் அரச மத்ஹபாக பிரகடனப்படுத்தப்பட்டது.

சவுதி அரேபியாவில் அரச அங்கீகாரம் பெற்ற மத்ஹபாக விளங்கும் இது அரேபிய தீப கற்பத்தில் செல்வாக்குப் பெற்றுள்ளது.

இந்நால்வரைத் தவிர வேறு பல அறிஞர்களும் பிக்ஹுத் துறைக்குப் பெரும் பங்காற்றியுள்ளனர். அவர்களின் பிக்ஹு சிந்தனை மக்களிடையே பரவலான அங்கீகாரத்தைப் பெறாத போதிலும், சட்டப் பிரச்சினைகளுக்கான தீர்வுகளைத் தேடுவதில் அவர்களின் கருத்துக்களும் கவனத்தில் கொள்ளப்படுகின்றன.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

الْفِقْهُ ❁ التَّفْسِيرُ ❁ المَعْرُوفَاتُ ❁ المُنْكَرَات ❁ مَسْأَلَةٌ فِقْهِيَّة ❁ مَذْهَبٌ
❁ الإِجْمَاعُ ❁ القِيَاسُ ❁ مَدْرَسَةُ الأَثَرِ ❁ مَدْرَسَةُ الرَّأْيِ

**பயிற்சி**

*அ. அடைப்புக் குறிக்குள் இருக்கும் மிகச் சரியான சொல்லை அடையாளப்படுத்துக.*

1. இஜ்திஹாதை அடிப்படையாகக் கொண்ட கலை
   (ஹதீஸ், பிக்ஹு, தப்ஸீர், தஜ்வீத்)
2. இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ் அவர்களின் பிறப்பிடம்
   (பக்தாத், கூபா, மதீனா, காஸா)
3. இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ் பிறந்த ஆண்டு
   (ஹிஜ்ரி 80, ஹிஜ்ரி 93, ஹிஜ்ரி 150, ஹிஜ்ரி 204)
4. இமாமுல் அஃழம் எனப்பட்டவர்
   (இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ், இமாம் ஹனபி ரஹிமஹுல்லாஹ், இமாம் ஹம்பலி ரஹிமஹுல்லாஹ், இமாம் மாலிகி ரஹிமஹுல்லாஹ்)
5. இமாம் அஹ்மதிப்னு ஹன்பலி ரஹிமஹுல்லா அவர்களின் பிரதான ஆசிரியர்
   (ஹம்மாத், மாலிக், ஷாபிஈ, அபூஹனீபா) ரஹிமஹுல்லாஹ் ஆவார்.

6. பலஸ்தீனில் பிறந்து எகிப்தில் மரணித்த இமாமின் இயற்பெயர்
(அஹ்மத், முஹம்மத், நுஃமான், மாலிக்)

7. ஷாபிஈ மத்ஹபை அரச மத்ஹபாக பிரகடப்படுத்திய ஆட்சியாளர்

(கலீபா இரண்டாம் ஹகம், சுல்தான் ஸலாஹுத்தீன், கலீபா முதவக்கில், கலீபா ஹாரூன்)

8. இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ் அவர்களால் தொகுக்கப்பட்ட பிக்ஹு நூல்
(முவத்தா, உம்மு, பிக்ஹுல் அக்பர், முஸ்னத் அஹ்மத்)

ஆ. பின்வரும் சொற்களுக்கிடையேயுள்ள வேறுபாட்டை விளக்குக.

மத்ரஸதுல் அஸர் - மத்ரஸதுர் ரஃயு

முஜ்தஹித் - முகல்லித்

இ. பிக்ஹுக் கலை தோன்றி வளர்ந்த முறையைச் சுருக்கமாக எடுத்துக்காட்டுக.

18

அல் குலபாஉர் ராஷிதூன்

# கலீபா அபூபக்ர் ஸித்தீக் றழியல்லாஹு அன்ஹு

فَعَلَيْكُمْ بِسُنَّتِي ، وَسُنَّةِ الْخُلَفَاءِ الرَّاشِدِينَ الْمَهْدِيِّينَ ، فَتَمَسَّكُوا بِهَا،
وَعَضُّوا عَلَيْهَا بِالنَّوَاجِذِ. (رواه أحمد)

எனது ஸுன்னாவையும் நேர்வழி நடந்த குலபாஉர் ராஷிதூன்களின் ஸுன்னாவையும் கடைவாய்ப் பற்களால் இறுகப் பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள் (அஹ்மத்)

## அல்-குலபாஉர் ராஷிதூன்கள்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்திற்குப் பின் ஆட்சி செய்த நான்கு ஸஹாபாக்களும் அல்குலபாஉர் ராஷிதூன்கள் என அழைக்கப்படுகின்றனர்.

இவர்களின் தனிப்பட்ட, குடும்ப, சமய, சமூக, அரசியல், பொருளாதார, கல்வி கலாசார விவகாரங்கள் அனைத்தும் அல்லாஹ்வின் திருப்தியை நாடியதாகவும் அவனதும் அவனது தூதரதும் வழிகாட்டலுக்கு அமைய, நேர்மையாகவும் தன்னலமின்றியும் அமைந்திருந்தன. இதனாலேயே, அவர்களை அல் குலபாஉர் ராஷிதூன்கள் (நேர்வழி நடந்த கலீபாக்கள்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.

எனவே அவர்களது வாழ்க்கை வரலாற்றை அறிந்து, அவர்களது முன்மாதிரிகளைப் பின்பற்றி நடப்பது அவசியமாகும். அவர்களுள் முதலாமவரான கலீபா அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் பற்றி நோக்குவோம்.

## கலீபா அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு

அப்துல்லாஹ் இப்னு அபீ குஹாபா எனும் இயற்பெயர் கொண்ட இவர்கள் கி.பி 573 இல் மக்காவில் பிறந்தார்கள். ஜாஹிலிய்யாக் காலத்தில் ஒரு சிறந்த வர்த்தகராகவும், சமூகத்தில் மதிக்கப்படும் தலைவர்களுள் ஒருவராகவும் காணப்பட்டார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறைதூதராகத் தெரிவு செய்யப்பட முன்னரே இருவருக்குமிடையில் நட்புறவு இருந்துள்ளது. எனவே, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஸ்லாத்தைப் பற்றி எடுத்துக் கூறியபோது, எவ்விதத் தயக்கமுமின்றி இஸ்லாத்திற் பிரவேசித்தார்கள். இந்த வகையில் ஆண்களுள் முதன் முதலில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களேயாவார்கள்.

ஹிஜ்ரி 11 ஆம் வருடம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்தைத் தொடர்ந்து இஸ்லாமிய அரசின் தலைமைப் பொறுப்பை ஏற்ற அவர்கள் இரண்டு வருடங்களும் மூன்று மாதங்களும் கிலாபத்தை வழிநடத்தியுள்ளார்கள்.

ஒரு முறை அபூபக்ர் , உமர் ரழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவருக்கு மிடையில் சிறிய முரண்பாடொன்று ஏற்பட்டது. அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்னிலையில் வந்தார்கள். அவர்களைக் கண்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முகம் கோபத்தால் சிவந்தது. இதனை அவதானித்த அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பயந்தவராக ‘‘நபியே நான்தான் அவருக்கு அநியாயம் செய்தேன்’’ எனக் கூறினார்கள். அப்போது அங்கிருந்தவர்களை விழித்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ‘‘அல்லாஹ் என்னைத் தூதராக உங்களிடம் அனுப்பிய வேளை எல்லோருமே என்னைப் பொய்யன் என்றீர்கள். ஆனால், அபூபக்ர் என்னை உண்மைப்படுத்தினார். அவரது ஆயுளையும் முழுச் சொத்து செல்வங்களையும் எனக்காக அர்ப்பணித்தார். அத்தகைய என் நண்பரை என்னிலிருந்து ஒதுக்கிப் பார்க்கிறீர்களா?’’ என இருமுறை கேட்டார்கள். இந்நிகழ்வின் பின்னர் யாருமே அவர் புண்படுமளவு நடந்து கொள்வதில்லை என அபூதர்தா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இஸ்லாத்தை ஏற்ற தினத்திலேயே அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மக்காவின் முக்கியஸ்தர்கள் சிலரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அழைத்து வந்து இஸ்லாத்தில் இணைத்து விட்டார்கள். அவர்களுள் உஸ்மான், தல்ஹா, ஸுபைர், ஸஃதுப்னு அபீ வக்காஸ், அப்துர்றஹ்மான் இப்னு அவ்ப் றழியல்லாஹு அன்ஹும் போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிஃறாஜ் சென்ற செய்தியைக் கேள்வியுற்ற அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் சிறிதளவேனும்

தயக்கமின்றி அதனை உண்மைப்படுத்தினார்கள். அதனாலேயே அவர் ஸித்தீக் (உண்மைப் படுத்தியவர்) எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டார்.

இவ்வாறான பல சம்பவங்கள் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் மேன்மையை எடுத்துக்காட்டுகிறன.

## ஆளுமைப் பண்புகள்

ஹிஜ்ரத்தின் போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களே துணை நின்றார்கள். நெருக்கடி நிறைந்த அச்சூழ்நிலையில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் துணிவுடன் பக்கபலமாக இருந்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத்தான செய்திகேட்டு ஸஹாபாக்கள் நிலைகுலைந்த போது அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மிக நிதானமாக செயற்பட்டார்கள். மக்களை ஆறுதலடையச் செய்து நெருக்கடியான சூழலை இயல்பு நிலைக்குக் கொண்டு வந்தார்கள்.

கிலாபத் தலைமையைப் பொறுப்பேற்ற போது நிலவிய சிக்கலான சூழலில் திடவுறுதியுடன் சாமர்த்தியமான முடிவுகளை மேற்கொண்டார்கள். அதன் மூலம் சமூகத்தை வழிநடாத்தி இஸ்லாத்தையும் இஸ்லாமிய அரசையும் பாதுகாத்தார்கள்.

இவ்வாறு இஸ்லாத்தை ஏற்றது முதல் வபாத் வரையிலான காலம் முழுவதையும் அதற்காக அர்ப்பணித்த அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் பங்களிப்புக்கள் அவரது உயர்ந்த ஆளுமைக்குச் சான்றாக அமைந்துள்ளன.

## கலீபாவாகத் தெரிவுசெய்யப்பட்ட முறை

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உயிருடனிருக்கும் போது கலீபாத் தெரிவோ நியமனமோ நடைபெறவில்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத்தாகிய தினம் அன்ஸார்கள் ஸகீபது பனீ ஸாஇதாவில் ஒன்று கூடி தலைவர் தெரிவு சம்பந்தமாக ஆலோசித்தனர். இச்செய்தியறிந்த ஸஹாபாக்கள் சிலர் அங்கு சென்று அவ்வாலோசனை நிகழ்விற் கலந்துகொண்டனர். அதன் போது அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கலீபாவாக ஏற்றுக் கூடியிருந்தோர் பைஅத் செய்தார்கள்.

அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின்னர் கலீபாவாக வருவதற்கு மிகத் தகுதி வாய்ந்தவர் என்பதை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது காலத்தில் இடம்பெற்ற பல சம்பவங்கள் உணர்த்துகின்றன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது இறுதிக் காலத்தில் நோய் அதிகமாகி எழுந்து நிற்பதற்கேனும் முடியாமலிருந்தார்கள். தொழுகைக்காக அதான் சொல்லப்பட்டதும் ஒருவரைத் தொழுகையை நடாத்தும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பணித்தார்கள். உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் உட்பட பல ஸஹாபாக்கள் இருந்த போதும் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கே தொழுகையை நடாத்தும் படி பணித்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது இறுதி நாளில் அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு, அலீ ரழியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரது தோள்களிலும் தாங்கியவாறு தொழுகைக்கு வந்தார்கள், அப்போது தொழுகை நடத்திக் கொண்டிருந்த அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு விட்டுக் கொடுத்து ஸப்பில் சேர முற்பட்டார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதனைத் தடுத்து அவர்களும் உட்கார்ந்து பின்தொடர்ந்து தொழுதார்கள். (புஹாரி)

ஒரு முறை நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், எனக்குப் பின்னால் அடுத்தடுத்துவரும் அபூபக்ர், உமர் ஆகிய இருவரையும் உங்களுக்கு வழிகாட்டிகளாக எடுத்துக் கொள்ளுங்கள் எனக் கூறினார்கள். (திர்மிதீ)

மற்றொரு தடவை ஒரு பெண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் (தமது பிரச்சினைகளை முறையிட) வந்தார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை வேறொரு சந்தர்ப்பத்தில் வருமாறு கூறினார்கள். அதற்கு அப்பெண்மணி 'நான் வரும்போது நீங்கள் இல்லாது (மரணித்து)விட்டால் என்ன செய்வது?' என வினவியபோது, 'நான் இல்லாவிட்டால் அபூபக்ர் அவர்களை வந்து சந்திக்கலாம்' எனக் கூறினார்கள். (புஹாரி)

## பணிகளும் பங்களிப்புக்களும்

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்தின் பின்னர் கிலாபத்தைப் பொறுப்பேற்று நல்லாட்சியைத் தொடர்ந்தமை.
2. பொய் நபிமார்களின் சவால்களை அனுபவமிக்க தளபதிகளின் பங்களிப்புடன் முறியடித்து கிலாபத்தின் பலத்தை நிரூபித்தமை.
3. ஸக்காத் வழங்க மறுத்த கூட்டத்தின் சூழ்ச்சியை முறியடித்தமை
4. அல்குர்ஆனைத் தொகுத்து நூலுருப்படுத்தியமை
5. அரசியல் அனுபவமிக்க பல கவர்னர்களை நியமித்து நிர்வாகத்தை ஸ்திரப்படுத்தியமை.

6. எல்லைப்புற ஆட்சியாளர்களால் இஸ்லாமிய உலகுக்கிருந்த அச்சுறுத்தல்களை முறியடித்தமை.

7. தமக்குப் பின்னர் ஆட்சி செய்ய மிகப் பொருத்தமான ஒருவரை கலீபாவாக நியமித்துச் சென்றமை.

இஸ்லாமிய அரசின் தலைமைப் பொறுப்பினை ஏற்று அதனை மேலும் ஈராண்டுகளுள் ஸ்திரப்படுத்திய கலீபா அபூபக்ர் ஸித்தீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி பதின்மூன்றில் தனது 63 ஆம் வயதில் வபாத்தானார்கள்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ السِّيرَة وَالتَّارِيْخُ ❁ الْخُلَفَاءُ الرَّاشِدُوْنَ ❁ سَقِيْفَةُ بَنِيْ ساعِدَة ❁ الْخِلافَةُ ❁ الخَلِيْفَةُ

**பயிற்சி**

1. அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு அஸ்ஸித்தீக் என்னும் சிறப்புப் பெயர் வழங்கக் காரணம் யாது?

2. முதல் கலீபாவின் ஆளுமைப் பண்புகளை வெளிப்படுத்தும் இரண்டு நிகழ்வுகளைக் குறிப்பிடுக.

3. அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களே முதலாவது கலீபாவாக நியமனம் பெறத் தகுதியானவர் என்பதற்கான ஆதாரங்கள் இரண்டு தருக.

4. அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கிலாபத்துக்காற்றிய பங்களிப்புக்கள் நான்கு தருக.

# 19

# கலீபா உமர் றழியல்லாஹுˢ அன்ஹுˢ

" إِنَّ اللَّهَ جَعَلَ الْحَقَّ عَلَى لِسَانِ عُمَرَ وَقَلْبِهِ " (رواه الحاكم)

நிச்சயமாக அல்லாஹ் உமரின் உள்ளத்திலும் நாவிலும் சத்தியத்தை வைத்துள்ளான் (ஹாகிம்)

## கலீபா உமர் றழியல்லாஹுˢ அன்ஹுˢ

குறைஷியரின் கௌரவத்துக்குரியவராகக் கருதப்பட்ட உமர் றழியல்லாஹுˢ அன்ஹுˢ அவர்கள் கி.பி.580 களில் ''அதீ'' பரம்பரையில் பிறந்தார். எழுத வாசிக்கத் தெரிந்தவராகவும் மல்யுத்த வீரராகவும் திகழ்ந்த இவர் ஆரம்பத்தில் நபி ஸல்லல்லாஹுˢ அலைஹி வஸல்லம் அவர்களதும் இஸ்லாத்தினதும் முன்னணி எதிரிகளில் ஒருவராகக் காணப்பட்டார். நபி ஸல்லல்லாஹுˢ அலைஹி வஸல்லம் அவர்களைக் கொல்வதுதான் மக்காவில் அமைதியை ஏற்படுத்தப் பொருத்தமான தீர்வு எனக் குறைஷியர் தீர்மானித்தபோது அதனை நிறைவேற்றச் சென்ற வேளையிலேயே நுபுவ்வத் 6 இல் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்.

## ஆளுமைப் பண்புகள்

உமர் றழியல்லாஹுˢ அன்ஹுˢ அவர்களின் ஆளுமைப் பண்புகளுள் துணிவும் வீரமும் குறிப்பிடத்தக்கவையாகும். அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டமை முஸ்லிம்களுக்குப் புத்துணர்ச்சியையும், உத்வேகத்தையும் ஏற்படுத்தியது. அதேவேளை குறைஷிக் காபிர்களுக்குப் பேரிடியாக அமைந்தது. உமர் றழியல்லாஹுˢ அன்ஹுˢ அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டபின் சற்றும் தாமதியாது ஒவ்வொரு

குறைஷித் தலைவரது வீட்டையும் தட்டி தான் முஸ்லிமாகி விட்டதைத் தெரிவித்தார். கஃபாவிலும் அதனைப் பிரகடனம் செய்ததோடு அங்கு பகிரங்கமாகத் தொழுகை நடாத்த வழிசெய்தார். இவற்றைக் கண்டு முஷ்ரிக்குகள் ஆத்திரமடைந்த போதிலும் உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் வீரத்துக்கும் துணிவுக்கும் முன் எதனையும் செய்ய முன்வரவில்லை.

உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆலோசனைகளைப் பல்வேறு சந்தர்ப்பங்களில் அங்கீகரித்து வஹீ அறிவிக்கப்பட்டுள்ளமை அவர்களின் பரந்த அறிவையும் விவேகத்தையும் காண்பிக்கின்றது.

கலீபா அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் அல்குர்ஆனை நூலுருப்படுத்திப் பாதுகாப்பதற்கு ஆலோசனை வழங்கியமை அவரது தூரநோக்கிற்கு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

### கலீபாவாக நியமிக்கப்படல்

அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது மரணத்திற்கு முன்னரே உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கலீபாவாக நியமனம் செய்ய விரும்பினார்கள். அன்றைய சமூகத்தில் முக்கியத்துவம் பெற்றிருந்த பல ஸஹாபாக்களைத் தனித்தனியாகவும் குழுக்களாகவும் அழைத்து கலந்தாலோசித்தார்கள். அனைவருமே உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் விடயத்தில் பூரண திருப்தியை வெளிப்படுத்தினர். அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களை அடுத்த கலீபாவாகப் பிரகடனப்படுத்தினார்கள். மக்களும் அதனை ஏகமானதாக ஏற்றுக் கொண்டனர். ஹிஜ்ரி 13 ஆம் ஆண்டு ஜமாதுல் ஆகிர் பிறை 22 இல் உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கிலாபத்தைப் பொறுப்பேற்றார்கள்.

### பணிகளும் பங்களிப்புக்களும்

உரோம பாரஸீக வல்லரசுகளால் ஒடுக்கப்பட்டிருந்த மக்களை விடுவித்து அவர்களுக்கு சுபீட்சமான வாழ்வினை ஏற்படுத்துவதற்காக அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்ட கிலாபத் விரிவாக்க நடவடிக்கைகளைத் தொடர்ந்து முன்னெடுத்தார். சிறந்த நிர்வாகிகளை ஆளுநர்களாக நியமனம் செய்து நிர்வாகப் பணிகளை ஒழுங்குபடுத்தினார். வித்தியாசமான வழிமுறைகளைக் கையாண்டு மக்கள் குறைகளை அறிந்து அவற்றை உடனுக்குடன் தீர்த்து வைத்தார். நேர்மையானதும் கண்டிப்பானதுமான இவர்களின் நிர்வாக முறைமையால் வளமும்,

வலிமையும் பெற்றுக் காணப்பட்ட இஸ்லாமிய ஆட்சியின் கீழ் வாழ்வதற்கு அயல் தேச மக்களும் ஆர்வம் காட்டினர்.

கலீபா உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சியில் இஸ்லாமிய அரசு பன்மடங்கு விரிவடைந்ததால் நிர்வாகத்தைத் திறம்பட மேற்கொள்ளப் புதிய கட்டமைப்புக்களை அறிமுகம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதனடிப்படையில் பல புதிய ஒழுங்குகளை அறிமுகம் செய்தார்கள். அவற்றுள்

★ கலீபாவின் உரிமைகள், கடமைகள், மக்களோடு அவருக்கிருக்க வேண்டிய தொடர்புகள் போன்றவற்றிற்கு ஒழுங்குகளையும் வரையறைகளையும் ஏற்படுத்தியமை.

★ ஆளுநர் நியமனத்திற்கான ஒழுங்குகளையும் விதிகளையும் அறிமுகப்படுத்தி அவர்களது அதிகாரங்களையும் வரையறை செய்தமை.

★ நீதித்துறையினை சுயாதீனமாக இயங்க வைத்தமை.

★ அரசவரிகளை வசூலிப்பதற்காக அதிகாரிகளை நியமித்தமை.

★ நிர்வாகப் பணிகளை இலகுபடுத்துவதற்காக பிராந்திய ரீதியில் பல அலகுகளை ஏற்படுத்தி அவற்றுக்கு:-

- வாலி - ஆளுநர்
- காதிப் - தலைமைக் காரியதரிசி
- காதிபுத் தீவான் - இராணுவக் காரியதரிசி
- ஸாஹிபுல் கறாஜ் - இறைவரி வசூலுக்கான அதிகாரி
- ஸாஹிபுல் அஹ்தாத் - பொலிஸ் அதிகாரி
- ஸாஹிபு பைதில் மால் - திறைசேரிப் பொறுப்பாளர்
- காழீ - தலைமை நீதிபதி ஆகியோர் நியமனம் செய்யப்பட்டமை.

★ பைதுல்மாலை ஸ்தாபித்து, ஸக்காத், ஜிஸ்யா, கனீமத், கறாஜ், வாரிசற்றவர்கள் விட்டுச் சென்ற சொத்துக்கள் போன்றவற்றினூடாக அதற்கான வருமான வழிகளை ஏற்படுத்தியமை.

★ ஒழுங்கமைக்கப்பட்ட இராணுவம் உருவாக்கப்பட்டமை.

★ இஸ்லாமிய வரலாற்றில் முதன்முதலாக தனித்துவமான நாணயமொன்று அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டமை.

★ நகரங்கள் நிர்மாணம், சுகாதார சேவைகள், நீர்ப்பாசன வசதிகள் மேற்கொள்ளப்பட்டமை

★ ஹிஜ்ரி நாளேடு (கலண்டர்) அறிமுகம் செய்யப்பட்டமை

போன்றன குறிப்பிடத்தக்கவைகளாகும்.

இவ்வாறு இன்னும் பல ஒழுங்கு முறைகளையும் சேவைகளையும் வழங்கிய கலீபா உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் முழு மனித சமூகத்துக்கும் முன்மாதிரியான ஆட்சியை மேற்கொண்டார்கள். கலீபா உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் சுமார் பத்தரை வருட ஆட்சியின் பின்னர் ஹிஜ்ரி 23 துல்ஹஜ் பிறை 26ல் அபூ லுஃலுஆ எனும் பாரஸீக மஜூஸியின் தாக்குதலால் படுகாயமுற்று வபாத்தானார்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ العَدِيّ ❁ الوَالِي ❁ الكاتِبُ ❁ كاتِبُ الدِّيْوانِ ❁ صَاحِبُ الأَحْدَادِ ❁ صَاحِبُ الخَرَاجِ
❁ صَاحِبُ بيْتِ المَالِ ❁ القاضِيْ ❁ الجِزْيَةُ ❁ الغَنِيْمَةُ ❁ الخَرَاجُ ❁ أبُو لُؤْلُؤة

**பயிற்சி**

1. உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆளுமைப் பண்புகள் சிலவற்றைக் குறிப்பிடுக.
2. உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட பின் முஸ்லிம்கள் புத்துணர்ச்சி பெற்றார்கள் என்பதைத் தெளிவுபடுத்துக.
3. உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கலீபாத் தெரிவு பற்றிக் குறிப்பிடுக.
4. உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்ற பின்னர் நடந்த சீர்திருத்தங்கள் பற்றி எழுதுக.

# 20

# கலீபா உஸ்மான் றழியல்லாஹு அன்ஹு

" أَلا أَسْتَحِي مِنْ رَجُلٍ تَسْتَحِي مِنْهُ الْمَلائِكَةُ " (رواه مسلم)

மலக்குகளே அவரைக் கண்டு நாணப்படும் ஒரு மனிதனுக்கு நான் நாணப்படக் கூடாதா? (முஸ்லிம்)

## கலீபா உஸ்மான் றழியல்லாஹு அன்ஹு

உஸ்மான் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் குறைஷிக் கோத்திரத்தின் உமைய்யாப் பரம்பரையில் கி.பி. 576ல் பிறந்தார்கள். அழகிய தோற்றமும் வெட்க சுபாவமும் கொண்ட இவர்கள் தனது தந்தையைப் பின்பற்றி மக்காவின் சிறந்த வர்த்தகர்களுள் ஒருவராகவும் செல்வந்தராகவும் மாறியிருந்தார்கள். எழுத்தறிவு, இலக்கியம், வரலாறு போன்ற துறைகளிலும் சிறந்து விளங்கினார்கள். விவேகமும் சிறந்த ஆளுமையும் கொண்ட இவர்கள் தர்மம் செய்வதில் அதிக விருப்பம் கொண்டிருந்தார்கள். ஆதலால், குறைஷியர் மத்தியில் இவருக்குப் பெரு மதிப்பும் மரியாதையும் கிடைத்திருந்தன.

இஸ்லாத்தில் நுழைந்த முதற் பத்துப்பேருள் ஒருவரான உஸ்மான் றழியல்லாஹு அன்ஹு அவர்கள், அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்களது அழைப்பினால் இஸ்லாத்தை ஏற்றார்கள். அப்போது அவர்களுக்கு வயது முப்பத்து நான்காகும். அன்று தொடக்கம் இஸ்லாத்தைப் பின்பற்றுவதிலும் பிரச்சாரம் செய்வதிலும் முழுமையாக ஈடுபட்டார்கள். அதற்காகத் தனது செல்வத்தைத் தாராளமாகச் செலவிட்டார்கள்.

## ஆளுமைப் பண்புகள்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் அனைத்து விடயங்களிலும் பங்கேற்ற இவர்கள், ஸஹாபாக்கள் மத்தியில் அபூபக்ர், உமர் றழியல்லாஹு அன்ஹுமா ஆகியோருக்கடுத்த நிலையில் கணிக்கப்பட்டார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் பல முறை சுவன வாக்குறுதியைப் பெற்றுக் கொண்டதோடு அஷறதுல் முபஷ்ஷறாஹ் சுவனம் நன்மாராயம் கூறப்பட்ட பத்துப் பேர்களுள் ஒருவராகவும் காணப்படுகிறார்கள். எழுத்தறிவு பெற்றிருந்தவராதலால் வஹியை எழுத்துருவில் பாதுகாக்கும் பணியிலும் ஈடுபடுத்தப்பட்டார்கள்.

ஒருவர் பின் ஒருவராக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இரு பெண்மக்களைத் திருமணம் செய்து அவர்களுடன் சிறப்பாக வாழ்க்கை நடத்திய காரணத்தால் இவர் 'துன்னூறைன்' எனும் சிறப்புப் பெயர் கொண்டு அழைக்கப்படுகின்றார்கள். 'வானவர்கள் வெட்கப்படும் ஒருவருக்கு நான் ஏன் வெட்கப்படக்கூடாது' (முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டது இவர்களது நாணமிகு இயல்புக்குச் சிறந்த சான்றாகும்.

முஸ்லிம்களால் மேற்கொள்ளப்பட்ட முதல் ஹிஜ்ரத்திலும் ஏனைய ஹிஜ்ரத்களிலும் பங்கேற்றுள்ளார்கள். ஹிஜ்ரி ஆறாம் ஆண்டில் உம்றாப் பயணத்தின் போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சமாதானத் தூதுவராகக் குறைஷியரிடம் அனுப்பப்பட்டார்கள்.

இவ்வாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் முழுமையாக இணைந்து செயலாற்றிய அவர்கள் கலீபா அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்களது நிர்வாகத்தில் ஷூறா சபையின் முக்கிய உறுப்பினராக ஓர் அமைச்சரின் ஸ்தானத்திலிருந்து பங்களிப்புச் செய்துள்ளர்கள். அவ்வாறே கலீபா உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களது காலத்திலும் அவருக்கு மிக நெருக்கமாக இருந்து ஆலோசனைகள் வழங்கி நிர்வாகப் பணிக்கு உதவி செய்தார்கள்.

## கலீபாவாக நியமனம்

கலீபா உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் அபூலுஃலுஆவின் தாக்குதலுக்குள்ளாகி நிலைமை மோசமானபோது, அங்கு குழுமியிருந்த ஸஹாபாக்கள் அவரை விழித்து, ''அமீருல் முஃமினீன் அவர்களே! எங்களுக்கு வஸிய்யத் செய்யுங்கள். அத்துடன் உங்களுக்குப் பின்னால் ஒருவரைக் கலீபாவாக நியமியுங்கள்'' என கேட்டுக்கொண்டார்கள். ''அதற்கு மிகப்பொருத்தமானவராக (சுவனம் வாக்களிக்கப் பட்டவர்களில் மீதமுள்ள) அறுவரில் ஒருவரையே நான் காண்கிறேன் எனக் கூறி, உஸ்மான், அலீ, தல்ஹா, ஸுபைர், அப்துர் றஹ்மான் இப்னு அவ்ப், ஸஃத் இப்னு அபீவக்காஸ் றழியல்லாஹு அன்ஹும் ஆகிய அறுவரையும் நியமித்தார்கள். அவர்கள் தங்களுக்குள் ஒருவரைத் தெரிவு செய்யும்படி அறிவுறுத்தினார்கள்.

உமர் றழியல்லாஹு அன்ஹு வபாத்தாகி அடக்கம் செய்யப்பட்ட பின் குறிப் பிட்ட அறுவரும் ஒன்றுகூடினர். நீண்ட கருத்துப்பரிமாற்றங்களின் பின்னர் உஸ்மான் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கலீபாவாகத் தெரிவுசெய்யப்பட்டார்கள். அப்துர் ரஹ்மான் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் பைஅத் செய்ததைத் தொடர்ந்து ஏனைய ஸஹாபாக்களும் பைஅத் செய்தனர்.

## பணிகளும் பங்களிப்பும்

### 1. அல்குர்ஆனைப் பாதுகாத்தல்

உஸ்மான் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பக்கத்திலிருந்து வஹீ எழுதும் குத்தாபுல் வஹியில் ஒருவராகப் பணியாற்றினார்கள். பிற்காலத்தில் அரபியரல்லாத பலர் இஸ்லாத்தை ஏற்றதனால் அல்குர்ஆனை ஓதுவதில் அவர்கள் மத்தியில் குழப்பநிலை காணப்பட்டது. எனவே, கலீபா அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் தொகுக்கப்பட்டு, ஹப்ஸா றழியல்லாஹு அன்ஹா அவர்களால் பாதுகாக்கப்பட்டு வந்த அல்குர்ஆன் பிரதியின் அடிப்படையில் எட்டுப் பிரதிகளை உருவாக்கினார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலத்தில் காதிபுல் வஹியாகவும், அபூ பக்ர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் அல்குர்ஆனை எழுத்துருப்ப டுத்தும் குழுவின் தலைவராகவும் அனுபவமும் அங்கீகாரமும் பெற்றிருந்த ஸைத் பின் ஸாபித் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் தலைமையிலேயே இப்பணி நடைபெற்றது. கலீபா அப்பிரதிகளை அல் குர்ஆனைச் சரிவர ஓதுவதில் பயிற்சி பெற்ற காரிகளுடன் அனுப்பி வைத்தார்கள். இதன் மூலம் அல்குர்ஆனை ஓதுவதில் காணப்பட்ட முரண்பாடுகள் நீங்கி அனைவரும் ஒரே விதமாக ஓதுவதை உறுதிப்படுத்தினார்கள். இது அவருக்கு 'ஜாமிஉல் குர்ஆன்' என்ற சிறப்புப் பெயரையும் பெற்றுக்கொடுத்தது.

### 2. கடற்படையை உருவாக்கல்

இஸ்லாத்தின் தூதை அரேபியத் தீபகற்பத்திற்கு வெளியே கடல் கடந்து கொண்டு செல்லவும் எதிரிகளிடமிருந்து வந்த சவால்களை எதிர்கொள்வதற்காகவும் கடற்படை ஒன்றை நிறுவுவதற்கு முழு அங்கீகாரமும் ஒத்தாசையும் வழங்கினார்கள். ஷாம் பிரதேச கவர்னராகப் பணிபுரிந்த முஆவியா றழியல்லாஹு அன்ஹு அவர்களின் தலைமையில் ஹிஜ்ரி 27 இல் இந்நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது.

### 3. ஆட்சி விஸ்தரிப்பு

முதலிரு கலீபாக்களினதும் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட பாதுகாப்பு நடவடிக்கைகள் தொடர்ந்து முன்னெடுக்கப்பட்டன. இவரது ஆட்சியில் அலெக் சாந்திரியா, எகிப்தின் தென்பகுதிகள், தூனிஸிய்யா, மொரோக்கோ போன்ற வட ஆபிரிக்காவின் பல பகுதிகளிலும், மத்திய தரைக்கடல் தீவுகளிலும் பாரசீக பிராந்தியங்களிலும் இஸ்லாமிய ஆட்சி பரவியது.

#### *4. அரசியல் நிர்வாக ரீதியான பங்களிப்புக்கள்*

*அரசியல் ரீதியிலும் இஸ்லாமிய உலகுக்குப் பல பங்களிப்புக்களை வழங்கியுள்ளார்கள். முன்சென்ற இரு கலீபாக்களாலும் முன்னெடுக்கப்பட்ட நிர்வாகப் பணிகளைத் தேவையான மாற்றங்களுடன் மிகச் சிறப்பாக முன்னெடுத்தார்கள்.*

#### *5. அபிவிருத்திப் பணிகள்*

*ஹிஜ்ரி 26 இல் மஸ்ஜிதுல் ஹராமையும், ஹிஜ்ரி 29 இல் மஸ்ஜிதுந் நபவியையும் விஸ்தரித்தார்கள். பைதுல் மாலின் பணிகளைப் பரவலடையச் செய்தார்கள். கால்வாய்கள், பாதைகள், பொதுக்கிணறுகள் அமைத்தல் முதலான கீழ்கட்டுமானப் பணிகளில் அதிக ஈடுபாடுகாட்டினார்கள்.*

*இவ்வாறு பரந்து விரிந்ததொரு சாம்ராஜ்யத்தை நிர்வகித்த கலீபா, அவர்கள் காலத்தின் பொருத்தப்பாட்டுக்கேற்ப நிர்வாகத்திலும் மாற்றங்களை ஏற்படுத்தினார்கள். எனினும் இதனைத் தவறாக விமர்சித்த எதிரிகள் முஸ்லிம்களுக்கு மத்தியில் குழப்பங்களை ஏற்படுத்தி இஸ்லாமிய அரசைப் பலவீனப்படுத்தும் தமது திட்டங்களை நிறைவேற்றிக்கொள்ள முயன்றனர். இதில் நிலைமையைத் தெளிவாகப் புரிந்து கொள்ளாத சில முஸ்லிம்களும் சிக்கிக் கொண்டனர். இக்குழப்ப நிலையைத் தோற்றுவிப்பதில் அப்துல்லாஹ் இப்னு ஸபாஃ என்ற யூதன் முழுப் பங்காற்றினான்.*

*இதனால் ஏற்பட்ட பிரச்சினைகளின் போது கலகக் காரர்களால் கலீபா உஸ்மான் றழியல்லாஹுஅன்ஹு அவர்கள் சுற்றி வளைக்கப்பட்டு ஹிஜ்ரி 35 ஆம் ஆண்டு தமது 82 ஆம் வயதில் ஷஹீதாக்கப்பட்டார்கள்.*

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❖ العَشَرَةُ المبَشَّرَةُ ❖ كَاتِبُ الوَحْيِ ❖ جَامِعُ الْقُرْآنِ ❖ ذُو النُّورَيْنِ

**பயிற்சி**

1. *கலீபா உஸ்மான் றழியல்லாஹுஅன்ஹு அவர்கள் துன்னூறைன் என அழைக்கப்பட்டமைக்கான காரணம் யாது ?*
2. *அல்குர்ஆனுக்கு உஸ்மான் றழியல்லாஹுஅன்ஹு அவர்கள் செய்த சேவைகளை விளக்குக.*
3. *இஸ்லாமிய உலகில் முதன்முதலில் கடற்படையை உருவாக்கிய பெருமை உஸ்மான் றழியல்லாஹுஅன்ஹு அவர்களையே சாரும். இதுபற்றி நீர் கற்ற பின்னணியில் எடுத்துரைக்க.*

## 21

# கலீபா அலீ றழியல்லாஹு அன்ஹு

### கலீபா அலீ றழியல்லாஹு அன்ஹு

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தந்தையின் சகோதரர்களில் ஒருவரான அபூதாலிப் என்பவரின் மகனாகிய அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது பால்ய வயதிலிருந்தே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அரவணைப்பில் வளர்ந்து வந்தார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நுபுவ்வத் பொறுப்பு வழங்கப்பட்டபோது அலீ அவர்கள் பத்து வயதுச் சிறுவராயிருந்தார்கள். முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அளவிலா மதிப்பும் பாசமும் கொண்டிருந்த அவர்கள் எவ்வித தயக்கமுமின்றி முதற்கணத்திலேயே இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள். இதன் மூலம் இஸ்லாத்தில் நுழைந்த முதற் சிறுவர் எனும் சிறப்பினைப் பெறுகிறார்கள்.

### இஸ்லாத்தை ஏற்றலும் ஆளுமைப் பண்புகளும்

சிறுபராயம் முதலே வீரம் விவேகம் ஆளுமை போன்றவற்றில் சிறப்புற்று விளங்கிய இவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோடு ஒன்றாக வாழ்ந்த காரணத்தால் ஆரம்ப முதலே இஸ்லாமியப் பணிகளிலும் சமூகப் பணிகளிலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் பங்கேற்கும் வாய்ப்பைப் பெற்றார்கள். மதீனா ஹிஜ்ரத்தின்போது பெரும் எண்ணிக்கையான குறைஷிக் காபிர்கள் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தீர்த்துக்கட்டும் முடிவுடன் அவர்களது வீட்டை முற்றுகையிட்டனர். குறைஷியர் எவ்வேளையும்

வீட்டினுள் புகுந்து ஒருமித்துத் தாக்கி தான் பல துண்டங்களாக வெட்டப்பட நேரிடும் என்ற ஆபத்தான கட்டத்தில்கூட, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பதிலாக அவர்களது படுக்கையில் உறங்கினார்கள். இது அவர்களது துணிச்சலுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

சிறந்த குதிரை வீரரும் பலசாலியுமான அலீ றழியல்லாஹு அன்ஹுஅவர்கள் இஸ்லாத்தினதும் முஸ்லிம்களதும் பாதுகாப்புக்காக மேற்கொள்ளப்பட்ட அனைத்துப் போர்களிலும் கலந்து கொண்டு தனது வியக்கத்தக்க ஆற்றல்களை வெளிப் படுத்தினார்கள். எத்தகைய பலமிக்க எதிரியாயினும் அவனது சவாலை ஏற்று முன் சென்று தாக்குவதில் தனித்துவம் பெற்றிருந்த அலீ றழியல்லாஹு அன்ஹுஅவர்கள் 'அல்லாஹ்வின் சிங்கம்' **أَسَدُ الله** என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் புகழப்பட்டார்கள்.

பிற்காலங்களில் இஸ்லாத்திற்கெதிரான சவால்கள் முஸ்லிம் உலகிலும் அதன் வெளியிலும் தோற்றம்பெற்ற போது அவற்றைக் கட்டுப்படுத்தி இல்லாதொழித்தார்கள். அறிவில் சிறந்து விளங்கிய அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது விவேகத்தையும் ஞானத்தையும் இஸ்லாத்திற்காகச் செலவிட்டார்கள். சிறந்த மார்க்கத்தீர்ப்புக்களை வழங்கிய இவர்கள் நீதிபதியாகவும் செயற்பட்டுள்ளார்கள். தனக்கு முன்வந்த அனைத்து கலீபாக்களதும் ஆலோசனை சபைகளில் முக்கிய உறுப்பினராகப் பணியாற்றிய அவர்கள் மிகத் துல்லியமாகவும் பொறுப்புடனும் ஆலோசனைகளும் ஒத்தாசையும் புரிந்து இஸ்லாத்தைப் பாதுகாப்பதிலும் நல்லாட்சி புரிவதிலும் உறுதுணையாக செயலாற்றியுள்ளார்கள்.

## கிலாபத்தைப் பொறுப்பேற்ற பின்னணி

நான்காம் கலீபா அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கிலாபத்தை ஏற்று விசு வாசப் பிரமாணம் செய்யப்பட்ட நிகழ்வும் சூழ்நிலையும் முன்சென்ற மூவரினதும் தேர்வுச் சூழலுக்கு முற்றிலும் வித்தியாசமானதாகும்.

முதல் மூன்று கலீபாத் தெரிவுகள் இஸ்லாமிய அரசியல் கோட்பாட்டின்படி மக்களின் ஆலோசனையுடனும், பூரண அங்கீகாரத்துடனும் இடம்பெற்றன. ஆனால், அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்களது தெரிவு அவற்றிலிருந்து வேறுபட்டுக் காணப்பட்டது. அதாவது, அன்றைய சமூகத்தில் அலீ றழியல்லாஹு அன்ஹுஅவர்களே மிகப் பொருத்தமானவராயிருந்தார்கள். ஆயினும், கலீபாத் தெரிவுக்காகப் புத்திஜீவிகள் ஒன்று கூடவோ, ஆலோசனைகள் மேற்கொள்ளப்படுவதற்கான பொருத்தமான சூழ்நிலை காணப்படவோ இல்லை. ஏனெனில், புதிதாக இஸ்லாத்தில் நுழைந்தவர்கள், கல்வியறிவற்றவர்கள், யதார்த்தத்தினை விளங்கியிராதவர்கள் எனப் பல்வேறு அடிப்படைகளைக் கொண்ட ஒரு கூட்டம் வெளி மாகாணங்களில் இருந்து தலைநகரில்

ஒன்று திரட்டப்பட்டிருந்தனர். கிளர்ச்சி மூலம் கலீபாவைக் கொன்றுவிட்ட அவர்கள் மதீனாவையும் ஆயுதமுனையில் தமது கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர்.

இந்நிலையில் இஸ்லாமிய கிலாபத்தைப் பாதுகாத்து, முஸ்லிம் உலகை இயல்பு நிலைக்குக்கொண்டு வருதல் அவசியமானதும் அவசரமானதுமாகக் காணப்பட்டது. அலீ, தல்ஹா, ஸுபைர், அப்துல்லாஹ் இப்னு உமர், ஸஃதிப்னு அபீவக்காஸ் றழியல்லாஹு அன்ஹும் போன்ற முன்னணி ஸஹாபாக்களில் ஒருவர் கிலாபத் பொறுப்பினை ஏற்க வேண்டுமென குழப்பக்காரர்கள் வலியுறுத்திக் கொண்டிருந்தனர். ஆனால், அவர்களுள் எவருமே அதற்கு முன்வராது ஒதுங்கிக் கொண்டிருந்தனர். இறுதியில் அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்களை நிர்ப்பந்தித்த அவர்கள் கிலாபத்தைப் பொறுப்பேற்காவிட்டால் கண்ணிற்படும் மதீனா வாசிகள் அனைவரையும் வாளுக்கிரையாக்கி விடுவோம் என எச்சரித்தனர்.

இவ்வபாய நிலையை உணர்ந்த அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள், ''கலீபாவைத் தெரிவு செய்யும் தகைமை உங்களுக்கில்லை. சமூக அங்கீகாரம் பெற்ற முக்கியஸ்தர்கள் உடன்பாடு தெரிவித்தாலேயே என்னால் கிலாபத்தைப் பொறுப்பேற்க முடியும் '' எனக் கூறிவிட்டார்கள். அதனையேற்ற அக்கும்பல் முக்கியஸ்தர்களை ஆயுத முனையில் ஒன்று கூட்டி சம்மதம் பெற்றனர். அதன் பின்னரே அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பதவியேற்பு இடம்பெற்றது.

குழப்பமான சூழ்நிலையில் நிர்வாகத்தைத் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதற்காக மாகாண கவர்னர்களிற் சிலரை பதவிநீக்கம் செய்யத் திட்டமிட்டார். இவ்விடயத்தில் நெகிழ்ச்சியைக் கடைப்பிடிக்குமாறு ஹஸன், முகீறா றழியல்லாஹு அன்ஹுமா போன்ற சில ஸஹாபாக்கள் ஆலோசனை கூறினர். ஆயினும், கலீபா தனது முடிவில் உறுதியாயிருந்தார். மிகக் குறுகிய காலப்பகுதிக்குள் விஸ்வரூபம் பெற்றுவிட்ட இவ்விடயம் முஸ்லிம்கள் வரலாற்றில் மறக்கமுடியாத துக்ககரமான நிகழ்வுகளுக்கு இட்டுச் சென்றது. இதன் விளைவாகவே ஜமல், ஸிப்பீன் மற்றும் நகர்வான் யுத்தங்கள் நடைபெற்றன.

### பணிகளும் சேவைகளும்

அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் இணைந்து இஸ்லாத்திற்காக எண்ணிலடங்காத சேவைகளையும் தியாகங்களையும் செய்து வந்தது போல், தனக்கு முன் ஆட்சிபுரிந்த மூன்று கலீபாக்களது நிர்வாகங்களிலும் முக்கிய பொறுப்புக்களை வகித்து, பல சேவைகளையும் செய்துள்ளார்கள். கலீபா அபூபக்ர் றழியல்லாஹு அன்ஹுஅவர்களது ஆட்சியில் பைத்துல்மால் நிதியைப் பங்கீடு செய்யும் பணியிலும், உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களது ஆட்சியில் நீதிச் சேவையிலும், உஸ்மான் றழியல்லாஹு அன்ஹு

அவர்களது நிர்வாகத்தில் முக்கிய ஆலோசகராகவும் செயலாற்றினார்கள். விசேடமாக அனைவரது அவையிலும் சிரேஷ்ட ஆலோசகராகப் பணியாற்றி, பலதரப்பட்ட அனுபவங்களையும் பெற்றிருந்தார்கள்.

இஸ்லாமிய அரசின் நான்காவது ஆட்சியாளராகக் கிலாபத் பொறுப்பை ஏற்ற அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்களது ஆட்சிக் காலம் சவால்கள் நிறைந்ததாகக் காணப்பட்டமையால் பாரிய பணிகளை முன்னெடுக்கும் வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கவில்லை. இருப்பினும் நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தி கிலாபத்தின் ஸ்திரத்தன்மையைப் பாதுகாக்க அவசர நடவடிக்கைகள் பலவற்றை மேற் கொண்டார்கள். அவற்றுள் முக்கியமானவையாக:

- குடிமக்களின் அதிருப்தியைப் பெற்றிருந்த சில கவர்னர்களைப் பதவி நீக்கம் செய்தமை.
- மக்களதும் கிலாபத்தினதும் பாதுகாப்பினைக் கருத்திற் கொண்டு அரசியல் ஸ்திரம் ஏற்படும் வரை உஸ்மான் றழியல்லாஹு அன்ஹுஅவர்களின் கொலை தொடர்பான நடவடிக்கைகளைத் தாமதப்படுத்தியமை.
- இஸ்லாத்தைத் தவறாகப் புரிந்து கொண்டு தீவிரவாத நடவடிக்கைகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்த கவாரிஜ்களின் அட்டூழியங்களைக் கட்டுப்படுத்தியமை.
- ஆட்சிபீடமாக விளங்கிய கூபா நகரம் அபிவிருத்தி செய்யப்பட்டமை.
- நகரமயமாக்கல் கலாசார மேம்பாட்டு நடவடிக்கைகள் முன்னெடுக்கப் பட்டமை.
- பொலிஸ் திணைக்களம் மறுசீரமைப்புச் செய்யப்பட்டமை
- நீதி விசாரணைகளுக்கெனத் தனியான மண்டபங்கள் ஏற்படுத்தித் தரப்பட்டமை.
- கவனிப்பாரற்றிருந்த கால்நடைகளுக்கான தொழுவங்கள் உருவாக்கப் பட்டமை.
- சிறைச்சாலைகள் நிர்மாணிக்கப்பட்டமை.
- அறபு இலக்கணம் பிக்ஹ் கலைகளைக் கற்பிப்பதற்கான கல்விக்கூடங்கள் ஸ்தாபிக்கப்பட்டமை.
- பிரபல இலக்கண மேதை அபுல் அஸ்வத் அத்துஅலி அவர்களின் மூலம் அல்குர்ஆன் எழுத்துக்களுக்கு உயிர்க்குறி இடப்பட்டமை.

மேற்குறிப்பிட்டது போன்ற பல சேவைகளைக் குறுகிய காலத்தினுள் மேற்கொண்ட கலீபா அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி நாற்பதாம் வருடம் றமழான் மாதம் அப்துர் றஹ்மான் இப்னு முல்ஜிம் எனும் காரிஜீயின் தாக்குதலுக்கு இலக்காகி ஷஹீதானார்கள்.

**பயிற்சி**

1. அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கிலாபத் பொறுப்பினை ஏற்ற சூழ்நிலையின் பின்னணி பற்றி விளக்குக.
2. கலீபா அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கொலையின் பின்னணியில் காணப்பட்ட சிந்தனைப் பிரிவினர் யாவர்?
3. அலீ றழியல்லாஹு அன்ஹு அவர்களது காலத்தில் முஸ்லிம்களுக்கிடையே இடம்பெற்ற யுத்தங்கள் யாவை?

# 22

# இலங்கை முஸ்லிம்களின் வரலாறும் பங்களிப்பும்

## அரேபியருக்கும் இலங்கைக்கும் இடையிலான உறவு

இலங்கையின் அமைவிடமும் அரேபியரிடம் காணப்பட்ட கடற் பயணங்கள் சம்பந்தமான அறிவு மற்றும் அனுபவங்களும் அவர்கள் கிறிஸ்தவ சகாப்தம் ஆரம்பமாவதற்கு முன்பே இலங்கையுடன் தொடர்புகொள்ளக் காரணங்களாக அமைந்தன.

அறபு வணிகர்களுக்கும் இலங்கைக்கும் இடையிலான உறவு எக்காலப் பிரிவில் இருந்து ஆரம்பமாகின்றது என்பதனைத் திட்டவட்டமாகக் கணித்துக் கூற முடியாத போதும், பண்டைக்காலம் தொட்டே இந்தத் தொடர்பு இருந்து வந்துள்ளது என்பதனை அறிய வரலாற்றுச் சான்றுகள் துணை செய்கின்றன.

இஸ்லாம் உலகில் உதயமாவதற்கு முன்னதாகவே அரபு வர்த்தகர்கள் இந்து சமுத்திரப் பிராந்தியத்திற் கப்பல் விட்டு வர்த்தகம் செய்தனர். கிழக்கிற்கும் மேற்கிற்கும் வர்த்தகப் பண்டங்களைப் பரிமாற்றம் செய்வதில் முகவர்களாகச் செயற்பட்ட அவர்கள் இலங்கையைப் பற்றியும் அறிந்து வைத்திருந்தனர். அக்காலை கிழக்கையும் மேற்கையும் இணைத்த வணிகப்பாதைக்கு மத்தியில் இலங்கை அமைந்திருந்ததால், அரேபியரின் வணிகப் போக்குவரத்துக்கு இலங்கை ஒரு தங்கு தளமாக அமைந்தது.

இலங்கையின் துறைமுகங்கள், துறைமுகங்களை அண்டிய நகரங்களில் காணப்பட்ட வியாபாரப் பொருட்கள், பாதுகாப்பு வசதிகள், உணவு மற்றும் குடிநீர் வசதிகள்,, கப்பல்களைப் பழுது பார்க்கும் வசதிகள் போன்றன அரபு வியாபாரிகள் இங்கு தங்கிச் செல்ல வழிவகுத்தன.

இவ்வாறு அரேபியர் பண்டைக் காலம் முதல் இந்து சமுத்திரத்தை அறிந்து வைத்திருந்ததுடன் அடிக்கடி கடற்பயணங்களை மேற்கொள்ளவும் பழக்கப் பட்டிருந்தனர். அவர்கள் தென் ஆசியா, தென் கிழக்கு ஆசியப் பிரதேசங்களில் குடியிருப்புக்களை அமைப்பதற்கு ஆர்வம் கொண்டிருந்தனர்.

கி.மு. 310 இற்கு முன்பிருந்தே அவர்கள் மடகஸ்கர், சுமாத்ராவுக்கு இடையே வணிக நடவடிக்கைகளை மேற்கொள்ளும்போது இலங்கையை இடையிலுள்ள ஒரு வலயமாக வைத்து அந்நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும். மலபார் கடலோரங்களிலும் இலங்கையிலும் இருந்த அரேபியர் கடல் சார்ந்த நடவடிக்கைகளில் நிபுணர்களாகக் காணப்பட்டதாக பிளினி (கி.பி. 23 - 79) குறிப்பிடுகிறார்.

டொலமியின் (கி.பி 150) வரைப்படத்தின் விளக்கத்தின்படி அவன் இச்சிறு தீவு பற்றிய அறிவைப் பெற்றிருப்பது கடற் பயணங்களை மேற்கொண்ட அரேபியரிடமிருந்தே ஆகும். என்றாலும் பிளினியின் கூற்றின்படி மலபார் பிரதேசத்தில் பெருந்தொகையான அரேபியர் வாழ்ந்த அதேவேளை இலங்கையில் ஒரு சிறு தொகையினரே வாழ்ந்துள்ளனர்.

மேற்கூறப்பட்ட கூற்றுக்கள் யாவும் அரேபியருக்கும் இலங்கைக்கும் இடையில் நிலவி வந்த உறவு வரலாற்றுத் தொன்மையானது, இஸ்லாத்தின் தோற்றத்துக்கு முன்பிருந்தே இத்தொடர்பு இருந்து வந்துள்ளது என்பதை நிரூபணம் செய்கின்றது. அத்துடன் இஸ்லாத்தின் வருகையைத் தொடர்ந்து இத்தொடர்பு மேலும் உறுதியடைந்தது.

## இஸ்லாம் இலங்கையில் அறிமுகமாதல்

இலங்கைக்கு இஸ்லாம் எப்போது அறிமுகமானது என்பது பற்றிய தெளிவான சான்றுகள் காணப்படாத போதும், இங்கு இஸ்லாம் அறிமுகமாவதற்குக் காரணமாக அமைந்த ஆதாரபூர்வமான சான்றுகள் ஏராளம் கிடைக்கின்றன. இவற்றின் துணை கொண்டு நம் நாட்டுக்கு இஸ்லாம் அறிமுகமான காலப் பகுதியைப் பின்வருமாறு அனுமானித்தறிய முடிகிறது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது இறுதிக் காலப் பகுதியில் உலகின் பல நாடுகளுக்கும் இஸ்லாத்தின் தூதை அனுப்பி வைத்தார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனுப்பி வைத்த கடிதங்கள் இதற்குச் சான்றாகும். இது போலவே கீழை நாடுகளுக்கும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் நிருபங்கள் அனுப்பப்பட்டன என்பதை வரலாற்றாசிரியர்கள் முன்வைக்கின்றனர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தூதைச் சுமந்து கொண்டு வஹப் இப்னு ஹப்ஸா என்ற தோழர் சீனாவுக்குச் சென்றார் என தோமஸ் ஆர்னல்ட் என்பவர் குறிப்பிடுகின்றார். சீனாவுக்குச் சென்றதாக ஆர்னல்ட் குறிப்பிடும் அதே நபித் தோழரான அபீ ஹப்ஸாவை ஆதாரம் காட்டி எம். ஸீ. சித்திலெப்பை தனது முஸ்லிம் நேசன் மூலம் பின்வரும் கருத்தை முன்வைக்கின்றார்.

''கி. பி. 628 இல் வஹப் இப்னு அபீ ஹப்ஸா எனும் தோழரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இலங்கை மன்னனிடம் அனுப்பி வைத்தார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கடிதத்தை மன்னனிடம் கொடுத்த தோழருக்கு அவரது பணியை மேற்கொள்ள அவருக்கு அனுமதியும் வழங்கப்பட்டது.'' இங்கு பணியாற்றிய அவர் கி.பி. 632 இல் தனது தாயகம் மீண்டார்.

இவ்விரு சான்றுகளும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலத்திலேயே இலங்கையில் இஸ்லாம் அறிமுகமாகியது என்பதற்கு ஆதாரங்களாக அமைகின்றன.

கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலப்பகுதியில் இலங்கையில் இஸ்லாம் அறிமுகமாகியிருக்கலாம் என ஊகிப்பதற்கு, வரலாற்றாசிரியர் இப்னு ஷஹ்ராயார் தனது அஜாஇபுல் ஹிந்து எனும் நூலில் குறிப்பிடும் பின்வரும் சம்பவம் துணை செய்கின்றது.

ஏற்கனவே இலங்கையில் குடியேறி வாழ்ந்த அரேபியர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றிக் கேள்வியுற்று அது பற்றிய சரியான தகவல்களை அறிந்து கொள்ளும் நோக்கில் தம்மிலிருந்து மிகத் திறமையான ஒருவரைத் தெரிவு செய்து அவருக்குத் துணையாக இன்னொருவரையும் சேர்த்து அனுப்பி வைத்தனர்.

இத்தூதர் அரேபியா சென்றடைந்த போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் மறைந்து அவருக்குப் பின்வந்த கலீபாவும் மறைந்து இரண்டாம் கலீபா ஆட்சியில் இருந்தார். கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் இஸ்லாத்தைப் பற்றி அறிந்து இலங்கைக்கு மீண்டார். வரும் வழியில் பாகிஸ்தான் மக்ரான் கரையில் அவர் காலம் செல்ல, அவரோடு சென்ற பணியாள் இலங்கையை அடைந்து இஸ்லாம் பற்றிய தகவல்களைத் தெரிவித்தார்.

கி. பி. 8 ஆம் நூற்றாண்டில் உமையாக் கலீபா அப்துல் மலிக் மற்றும் வலீத் ஆட்சிக் காலத்தில் ஈராக் கவர்னராக இருந்த ஹஜ்ஜாஜின் கொடுமைக்கு அஞ்சி உமையா வம்ச அரசின் எதிரிகளாகக் கருதப்பட்ட பனூ ஹாஷிம்கள் தென்னிந்தியா

மற்றும் இலங்கைக் கரையோரங்களில் குடியேறிய தகவலொன்றை 'சிலோன்' எனும் நூலில் சேர் ஜேம்ஸ் எமர்சன் டெனண்ட் குறிப்பிடுகின்றார். இதே போன்று இடம் பெற்ற மற்றுமொரு இடம்பெயர்வு நிகழ்வொன்றை வரலாற்றாசிரியர் அல்பலாதூரி தனது புதூஹுல் புல்தான் எனும் நூலில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

கி. பி. 8 ஆம் நூற்றாண்டின் ஆரம்பப் பகுதியில் அப்போதைய இலங்கை மன்னரான இரண்டாம் தாடோபதிஸ்ஸ இலங்கையில் காலம் சென்ற அரேபிய வர்த்தகர்கள் சிலரின் விதவை மனைவிகளையும், அநாதைகளான பிள்ளைகளையும் அரேபியாவுக்கு அனுப்பி வைத்தான்.

இவர்களும் இவர்கள் சென்ற கப்பலும் இன்றைய கராச்சிக்கு அணித்தாக உள்ள தேபல் எனுமிடத்தில் வைத்து கொள்ளைக்காரர்களால் சிறைப்பிடிக்கப்பட்டனர். இவ்விடயத்தை அறிந்த ஹஜ்ஜாஜ் சிந்து நாட்டு மன்னன் ரோய் தாகருக்கு அப்பெண்களை உடனே விடுதலை செய்யுமாறு கடிதமெழுதினார். ஹஜ்ஜாஜின் வேண்டுகோள் உதாசீனம் செய்யப்பட்டதால் சிந்து நாட்டின் மீது முஹம்மத் பின் காஸிம் தலைமையில் பெரும் படையொன்று அனுப்பப்பட்டு கி. பி. 715 இல் சிந்து பிரதேசம் முஸ்லிம்களால் வெற்றி கொள்ளப்பட்டது.

மேற்குறித்த சம்பவங்கள் அனைத்தும் இஸ்லாத்தின் தோற்ற காலத்திலேயே இஸ்லாம் இலங்கையில் அறிமுகமாகியிருந்திருக்கிறது என்பதை நிறுவுவதற்குப் போதுமான சான்றுகளாகும். தொடர்ந்து வந்த காலப்பிரிவுகளிலும் குறிப்பாக, ஹிஜ்ரி 2 ஆம், 3 ஆம் நூற்றாண்டுகளில் இலங்கையில் முஸ்லிம்கள் வாழ்ந்திருக்கிறார்கள் என்பதனை இலங்கையில் கண்டெடுக்கப்பட்ட அரபு நாணயங்கள் உறுதிப் படுத்துகின்றன.

இலங்கையில் கண்டெடுக்கப்பட்ட கல்லறை நடுகற்கள் கல்வெட்டுக்கள் இலங்கையில் இஸ்லாம் அறிமுகமான வரலாற்றைக் குறிப்பிடுவதற்கான மற்றுமொரு சான்றாகும். ஹிஜ்ரி 337 இல் பதிக்கப்பட்ட காலித் இப்னு பகாயாவின் கல்லறை நடுகல் 1787 இல் இலங்கையில் கண்டெடுக்கப்பட்டது. இவர் இஸ்லாத்தைப் போதிப்பதற்கென பக்தாத் கலீபாவிடமிருந்து இலங்கைக்கு அனுப்பப்பட்டுள்ளார்.

ஆரம்பத்தில் அரபிகளும் தொடர்ந்து அரபு முஸ்லிம்களும் இலங்கைக்கு வந்து வர்த்தக முயற்சியில் ஈடுபட்ட சமயத்திலும், அவர்கள் இங்கு வந்து குடியேறிய சமயத்திலும் அவர்களை இலங்கை மன்னர்களும் மக்களும் வரவேற்று உபசரித்துள்ளனர். இவ்வாறு இவர்கள் தமது வர்த்தக ஏற்றிறக்குமதிகளுக்கு வசதியாக கடலோரங்களிலேயே குடியேற்றங்களையும் பண்டகசாலைகளையும் அமைத் திருந்தனர்.

இலங்கை மன்னர்களுக்கும் மக்களுக்கும் தேவையான வெளிநாட்டுப் பொருட்களை அந்நாடுகளிலிருந்து அரபு முஸ்லிம்கள் கொண்டு வந்து கொடுத்தனர். அத்துடன் நில்லாது உள்நாட்டு உற்பத்திப் பொருட்களை சர்வதேச சந்தைக்கு எடுத்துச் சென்று பொருட்களையும் நாட்டையும் சர்வதேச மட்டத்தில் அறிமுகமும் செய்தனர்.

மேலும், அவர்கள் சுதேச மன்னர்களோடும் மக்களோடும் பண்போடு நடந்து கொண்டனர். மருத்துவ, போக்குவரத்து சேவைகளையும் இவர்கள் வழங்கினர். இலங்கை வந்த அரேபியரிடம் இலங்கையை ஆக்கிரமிக்கும் எண்ணமோ இங்குள்ள வளங்களைச் சூரையாடும் நோக்கமோ சிறிதும் இருக்கவில்லை. இதனால் அவர்களுக்கு பரிச்சயமில்லாத கலாசாரப் பாரம்பரியங்களைக்கொண்ட சுதேச மக்களோடு நேசமாக வாழ்வது அவ்வளவு சிரமமானதாக அமையவில்லை.

ஆரம்பகால முஸ்லிம்களிடம் காணப்பட்ட இவ்வாறான நற்பண்புகளின் காரணமாக அவர்கள் இலங்கையின் ஏற்றிறக்குமதி வர்த்தகத்தில் ஏகபோக உரிமையைப் பெற்றது மட்டுமன்றி வர்த்தகம் தொடர்பான விடயங்களில் அரசுக்கு ஆலோசனை கூறுவோராகவும் இருந்தனர்.

இவர்கள் தாம் வாழ்ந்த நாட்டுக்கு ஆற்றிய சேவைகளுக்காக இவர்களுக்கென்று தனியான குடியிருப்புப் பிரதேசங்கள் வழங்கப்பட்டதோடு சுதேச பெண்களையும் மணம் செய்து கொடுக்குமளவுக்கு சுதேசிகளின் உள்ளத்தை முஸ்லிம்கள் வென்றிருந்தனர். சிங்கள மன்னர் ஆட்சியில் இவர்கள் மந்திரி, தூதுவர் போன்ற உயர் பதவிகளையும் வகித்தனர்.

இக்காலகட்டத்தில் இஸ்லாமிய கிலாபத் கூட இலங்கை முஸ்லிம்களைக் கண்காணித்து வந்திருக்கிறது. அப்பாஸிய ஆட்சிக் காலத்தில் இலங்கை முஸ்லிம்களின் வேண்டுகோளுக்கிணங்க அப்பாஸிய கலீபா ஒருவர், காலித் இப்னு பகாயா என்ற போதகரை கொழும்புக்கு அனுப்பி வைத்தார். அவர் கொழும்பு நகரில் சமயப் பணி புரிந்தார். அவரது நினைவாக அவரது அடக்கஸ்தலத்தில் நடப்பட்ட கல்லறை நடுகல் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கண்டெடுக்கப்பட்டது.

இலங்கை முஸ்லிம்கள் ஆரம்பத்தில் கொழும்பு, பேருவளை, காலி, மாத்தறை போன்ற கரையோர நகர்களிலும் பின்னர் படிப்படியாக குருணாகலை, கம்பளை, மத்திய மலைநாடு போன்ற பகுதிகளிலும் குடியேறி வாழ்ந்துள்ளனர். அவர்களின் சந்ததியினரே இன்று நம்நாட்டின் பல பகுதிகளிலும் பரந்து வாழும் முஸ்லிம் சமூகத்தினராவர்.

## தேசிய நலனில் பங்கேற்பு

இலங்கை முஸ்லிம்கள் தம்மை வளர்த்துக் கொள்வதற்காக மட்டுமன்றி தமது நாட்டின் தேசிய நலனுக்காகவும் தம்மாலான பல பங்களிப்புக்களைச் செய்துள்ளனர். இலங்கையின் மாணிக்கக் கற்கள், யானைத்தந்தம், வாசனைத் திரவியங்கள் முதலியவற்றை வெளிநாடுகளுக்குக் கொண்டு சென்றனர். ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பாதம் பதிந்த மலை இலங்கையில்தான் பதியப்பட்டுள்ளது என்று நம்பியிருந்த அரேபிய வணிகர்களும், இலங்கையை அடிக்கடி தரிசித்துச் சென்ற அரபு யாத்திரிகர்களும் தமது பயணங்கள் மூலமும் பிரபலமடையச் செய்தனர்.

இலங்கையின் பொருளாதார அபிவிருத்தியிலும் முஸ்லிம்களின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாகும். இலங்கையின் ஏற்றுமதிப் பொருட்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து அந்நியச்செலாவணியை ஈட்டிக்கொள்வதற்கு முஸ்லிம்களும் பாரிய பங்களிப்புச் செய்துள்ளனர். அவ்வாறான ஏற்றுமதிப் பொருட்களை மக்கள் உற்பத்தி செய்யத் தொடங்கியதால் நாட்டின் வருமானம் அதிகரித்தது. வர்த்தகத்தில் மட்டுமன்றி நாட்டின் விவசாய மேம்பாட்டுக்காகவும் முஸ்லிம்கள் உழைத்தனர். உற்பத்தியைப் பெருக்கும் நோக்கில் தாமும் விவசாயத்தில் ஈடுபட்டனர்.

வெளிநாடுகளிலிருந்து நெசவுத் தொழிலாளர்களை அழைத்து வந்து அதனை வளர்க்கப் பாடுபட்டனர். உள்நாட்டில் அதுவரை காணப்பட்டு வந்த போக்குவரத்து முறையில் தவளம் எனும் போக்குவரத்து முறையை அறிமுகப்படுத்தி அதனைப் பரிபாலித்தும் வந்தனர்.

இந்த நாட்டின் அரசியலிலும் அதன் தேசிய சுதந்திரத்தை வென்றெடுப்பதிலும் முஸ்லிம்கள் கணிசமான பங்களிப்புக்களைச் செய்துள்ளார்கள். பொலன்னறுவை காலப் பிரிவில் சிறப்பிற்குரிய மன்னனாக விளங்கிய மகா பராக்கிரமபாகு (1156 - 1186) வின் அரசவையில் 4 முஸ்லிம்கள் வணிக ஆலோசகர்களாக நியமிக்கப்பட்டிருந்தனர் என புவியியலாளர் இத்ரீஸி குறிப்பிடுவதைப் பேராசிரியர் எஸ். பரணவிதாரண உறுதிபடுத்துகின்றார்.

எகிப்துடனான வர்த்தக வாய்ப்பை அதிகரித்துக்கொள்ளும் நோக்குடன் ஏற்றிறக்குமதி வர்த்தகத்தில் பங்கு வகித்த முஸ்லிம் ஒருவரை இலங்கை அரசு எகிப்துக்குத் தூதுவராக அனுப்பியது. போர்த்துக்கேயரைத் துரத்தும் நோக்கில் கள்ளிக்கோட்டை மன்னன் சாமோரினின் உதவியைப் பெற்றுக்கொள்வதற்காக மன்னன் மாயாதுன்னை முஸ்லிம்களையே தூதுவர்களாக அனுப்பினான். முஸ்லிம்கள் கள்ளிக்கோட்டையிலிருந்து படையுதவி பெற்றுக் கொடுத்ததோடு நில்லாது தாமும் படையில் இணைந்து போராடினர். கண்டிய மன்னனின் தூதுவர்களாவும் முஸ்லிம்கள் செயலாற்றியுள்ளனர்.

ஆங்கிலேயர் காலத்தில் நாட்டின் நிர்வாகத் துறையிலும் செயலாற்றியுள்ளனர். 19ம் நூற்றாண்டின் பிற்கூறுகளில் இலங்கை நாட்டின் சுதந்திரத்துக்காக ஏனைய இனத்தினரோடு இணைந்து போராடிய முஸ்லிம்களின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாகும்.

பிரித்தாளும் கொள்கையுடைய ஆங்கிலேயர் இலங்கைச் சமூகங்களைப் பிரித்து வைப்பதன் மூலம் சுதந்திரத்தைப் பின்தள்ளி விட எத்தனித்தனர். அவ்வேளை பெரும்பான்மை சமூகத்துடன் இணைந்து ரீ. பீ. ஜாயா உள்ளிட்ட முஸ்லிம் தலைவர்கள் குரல் கொடுத்ததால் சுதந்திரம் பெறுவது இலகுவானது. 1815ல் முடிவுறுத்தப்பட்ட சுயாட்சி மீண்டும் 1948ல் பெற்றுக்கொள்ளப்படுவதற்கு முஸ்லிம் அரசியல்வாதிகளின் நியாயமான வாதங்களும் காரணிகளாய் அமைந்தன.

இவற்றுக்கு அப்பால் சமூக ஐக்கியம், கல்வி அபிவிருத்தி, நீதித்துறை, சுகாதாரத்துறை, சர்வதேச உறவுகள் போன்றவற்றில் இந்நாட்டின் வளர்ச்சிக்கும் மேம்பாட்டிற்கும் முஸ்லிம்கள் அன்று வழங்கிய பங்களிப்புக்களும் இன்று வழங்கிக்கொண்டிருக்கின்ற பங்களிப்புக்களும் மறக்க முடியாதவை.

### பயிற்சி

1. இலங்கையில் இஸ்லாத்தின் அறிமுகம் எவ்வினக் குழுவுடன் தொடர்பு படுகின்றது?
2. நான்கு அரேபியர் வர்த்தக ஆலோசகர்களாக நியமிக்கப்பட்டிருந்தமை எவ்வரச னின் காலப்பகுதியில் என்பதைக் குறிப்பிடுக.
3. முஸ்லிம்களது மூதாதையரான அரேபியர் கரையோரங்களில் குடியமர்வதற்குப் பின்னணியான காரணிகளை விளக்குக.
4. இலங்கையின் சுதந்திரத்திற்காகப் போராடிய குழுவில் முக்கிய பங்காற்றிய முஸ்லிம் தலைவர்களைக் குறிப்பிடுக.
5. இலங்கையின் பொருளாதார விருத்திக்கு முஸ்லிம்களின் பங்களிப்பு எவ்வாறானது என்பது பற்றி விளக்குக.

# 23

# இலங்கை முஸ்லிம் முன்னோடி - 1

கல்வி என்பது பாஷைகளை வாசித்தறிவது மாத்திரம் அல்ல மனவிரிவுக்கும் தெளிவுக்கும் துணை நிற்பதாகும். அல்குர்ஆனில் உள்ள போதனைகளை விளங்கி அவற்றைப் பின்பற்றி நடப்பதே அவசியமானது. இதனைப் புரிந்துகொள்ளாதவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டவர்களாவர் - *அறிஞர் சித்திலெப்பை*

## முஹம்மது காஸிம் சித்திலெப்பை



*இலங்கை வாழ் மக்களின் மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர்களுள் அநகாரிக தர்மபால (1864 - 1933), ஆறுமுக நாவலர் (1822 - 1879), சித்திலெப்பை ஆகியோர் (1838 - 1898) முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர்கள்.*

*இவர்களுள் இலங்கை முஸ்லிம்களின் மறுமலர்ச்சிக்கு வித்திட்ட அறிஞர் முஹம்மது காஸிம் சித்திலெப்பை, 1838 ஜூன் 11ம் நாள் கண்டியில் பிறந்தார். இவர் அரபுப் பரம்பரையில் தோன்றிய ஒருவராகக் கருதப்படுகிறார். அரேபியாவிலிருந்து வணிக நோக்கில் இலங்கை வந்த முல்க் ரஹ்மதுல்லாஹ் என்பவர், அழுத்கமையில் குடியேறி, இலங்கையைச் சேர்ந்த பெண் ஒருவரைத் திருமணம் செய்தார்.*

*முல்க் ரஹ்மதுல்லாஹ்வின் மகன் முஹம்மது லெப்பை சிரீ விக்கிரம ராஜசிங்கன் ஆட்சிக் காலத்தில் வணிக நோக்கில் கண்டி நகரில் குடியேறி வாழ்ந்தார். இவரது மகனே சித்திலெப்பை ஆவார். ஆங்கிலேய ஆட்சியாளர்கள் கண்டி நகரைக் கைப்பற்றியதைத் தொடர்ந்து, ஆங்கில மொழியைக் கற்பிப்பதற்கென ஒரு பாடசாலையை நிறுவினர்.*

இப்பாடசாலையில் முஹம்மது லெப்பை கல்வி பயின்றார். இவரது அறிவுத் தரம், குடும்பப் பின்னணி முதலானவற்றைக் கருத்தில் கொண்டு அப்போதைய பிரித்தானிய அரசு அவரை கி.பி. 1833ல் ஒரு வழக்குரைஞராக நியமித்தது. இவர், இலங்கையில் நியமிக்கப்பட்ட முதல் முஸ்லிம் வழக்குரைஞராவார். அக்காலை இலங்கையில் வெளிவந்த 'சிலோன் அல்மனக்' என்ற பத்திரிகை இவரை 'இலங்கைச் சோனகரின் தலைவர்' என்று பாராட்டியது. இவருக்கு மூன்றாவது மகனாக 1838 இல் கண்டியில் பிறந்தவரே முஹம்மது காஸிம் சித்தி லெப்பை ஆவார்.

சித்திலெப்பையின் குடும்பத்தில் மொத்தம் ஐந்து பேர். அவர்களுள் இருவர் பெண் பிள்ளகள்; மூவர் ஆண் பிள்ளைகள். ஐவரும் கல்வி அறிவு பெற்றோராயும் அரபு மொழி பயின்றவர்களாகவும் மார்க்க அறிவு பெற்றவர்களாகவும் அறியப்பட்டி ருந்தனர். இவரது மூத்த சகோதரர் ஓர் ஆலிமாகவும் வழக்கறிஞராகவும் திகழ்ந்தார். இவர் முஸ்லிம்களுக்குத் தலைவராக நியமிக்கப்பட்டிருந்தார். முஸ்லிம் சமூகத்தின் விவாக, விவாகரத்துப் பிரச்சினைகளில் தீர்ப்பு வழங்கும் வகையில் ஒரு காழி நீதிபதியாகவும் நியமிக்கப்பட்டிருந்தார். இவர் வாழ்ந்த பிரதேச மக்கள் இவரை மரைக்காயர் என அழைத்தனர். ஒரு புலவராகத் திகழ்ந்த இவர், சுமார் முன்னூற்றுக்கும் அதிகமான பதங்களைப் பாடியுள்ளார். சித்திலெப்பையின் சகோதரியின் பெயர் முத்து நாச்சியா என்பதாகும். ஓர் ஆலிமாவாகத் திகழ்ந்த இவர், கண்டி திருகோணமலை வீதியில் சித்திலெப்பை துவக்கிய முஸ்லிம் பெண்கள் கல்லூரியில் தலைமை ஆசிரியையாகப் பணியாற்றினார்.

சித்திலெப்பை தனது மூத்த சகோதரர் முஹம்மது லெப்பை ஆலிமிடமே அல்குர் ஆனை ஓதவும் தமிழ், அரபு, சிங்களம் போன்ற மொழிகளையும் கற்றுக்கொண்டார். பின்னர், கண்டியில் இருந்த ஆங்கிலப் பாடசாலை சென்று ஆங்கிலக் கல்வியைக் கற்றுத் தேறினார். இதே காலப் பிரிவில் கஸாவத்தை ஆலிம் அப்பாப் புலவர் என்று அழைக்கபட்ட அக்குரனையைச் சேர்ந்த செய்கு முஹம்மது ஆலிம் அவர்களிடம் சென்று அரபு மொழியை மேலும் கற்றுத் தேர்ந்து தன் மொழியாற்றலை வளர்த்துக்கொண்டார். இவ்வாறு இவருக்குத் தமிழ், ஆங்கிலம், அரபு ஆகிய மூன்று மொழிகளிலும் புலமை ஏற்பட்டது.

1862 ல் கண்டி மாவட்ட வழக்கறிஞராக நியமனம் பெற்ற சித்திலெப்பை 1864ல் உயர் நீதிமன்ற வழக்கறிஞராக பதவி உயர்வு பெற்றார். கண்டி மாநகர சபையின் நீதிமன்ற நீதிபதியாகக் கடமை புரியும் சந்தர்ப்பமும் இவருக்குக் கிடைத்தது.

கி.பி. 1871ல் காயல்பட்டணத்தைச் சேர்ந்தவரும் கண்டியில் வாழ்ந்தவருமான அப்துல் காதிர் மீயாப் பிள்ளை என்பவரது மகள் ஸெய்யிதா உம்மா என்பாரைத் திருமணம் செய்தார். அல்குர்ஆனனை நன்கு கற்றுத் தேர்ந்திருந்த இவர்; தமிழ், ஆங்கிலம் முதலாம் மொழிகளையும் கற்றிருந்ததோடு தையல் மற்றும் பின்னல் கலைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். பியானோ, சித்தாரா போன்ற இசைக் கருவிகளை இசைக்கவும் கற்றிருந்தார். இவ்வாறு சம காலத்தில் அல்குர்ஆனிய அறிவையும் நவீன

கல்வியையும் பெற்றிருந்ததால் தன் துணைவரின் சிந்தனைப் போக்கிற்கு ஏற்ப ஒன்றித்துச் செல்வதற்கும், அவரது முற்போக்கு மிக்க திட்டங்களுக்கு ஒத்துழைப்பு நல்கவும் அவரால் முடிந்தது. சித்திலெப்பைக்குப் பிள்ளைகள் எவரும் இல்லை என்பதால் அப்துல் ஹமீது என்ற பெயரில் ஒரு குழந்தையை வளர்த்து வந்தார்.

1874 முதல் 1878 வரை நகர சபை (முனிஸிபல்) நீதிமன்றத்தில் இடைக்கிடையே நிதிபதியாகவும் கடமையாற்றினார். எட்டு வருட காலம் இவர் கண்டி மா-நகர சபை உறுப்பினராகவும் கடமையாற்றினார். கி.பி. 1884 - 87 காலப் பிரிவில் அவர் கொழும்பில் குடியேறி வாழ்ந்த போதும் மீண்டும் அவர் கண்டியிலேயே குடியேறி வாழ்ந்தார்.

சமூக சேவை செய்வதிலும் அதனை மேம்பாடடையச் செய்வதிலும் அதீத அக்கறை காட்டிய சித்திலெப்பைக்கு வழக்கறிஞர் பதவி திருப்தி அளிக்கவில்லை. அப்போதைய இலங்கை வாழ் முஸ்லிம்கள் கல்வி மற்றும் மார்க்க விடயங்களில் மிகவும் பிற்போக்கான நிலையில் இருப்பதைக் கண்டு பெரிதும் வருந்தினார். எனவே கி.பி 1882 டிசம்பர் 12ம் திகதி 'முஸ்லிம் நேசன்' எனும் பத்திரிகையை ஆரம்பித்து முஸ்லிம்கள் சமய சூழலில் மேல் நாட்டுக்கல்வியைக் கற்பதன் அவசியத்தை வலியுறுத்தி எழுதியதோடு சமூக முன்னேற்றத்துக்குத் தான் ஆற்றப்போகும் தொண்டு பற்றியும் விளக்கினார். இப்பத்திரிகையை ஆரம்பித்து வைத்ததன் மூலம் 'இலங்கை முஸ்லிம்களின் முதல் பத்திரிகையாளர்' என்ற பெருமையை இவர் பெற்றுக்கொண்டார்.

புரட்சி வீரர் அரபி பாஷா எகிப்தில் இருந்து நாடு கடத்தப்பட்டு இலங்கை வந்த போது அவரை வரவேற்கக் கூடாதென அரசாங்கம் பத்திரிகை வாயிலாக வேண்டுகோள் விடுத்திருந்தது. இத்தடை உத்தரவையும் பாராது இவர் தனி முயற்சியாக முஸ்லிம்களைத் திரட்டிக் கொண்டு துறைமுகம் சென்று அவரை வரவேற்று உபசரித்தார். இவரின் இச்செயலைக் கண்டித்து செய்திகள் வந்த போதும் அவர் அதனைப் பொருட்படுத்தாமல் விட்டு விட்டார்.

சிறந்த சமய ஞானம் மிக்க மூத்த சகோதரனின் வழிகாட்டலும் கஸாவத்தை ஆலிம் அப்பாப் புலவர், யமன் தேசத்து சமயப் பெரியார் அப்துல்லாஹ் பாதீப் முதலானோரின் தொடர்பும் சித்திலெப்பையின் ஆன்மீகப் பக்கத்தை வலுவூட்டின. மறுபக்கமாக எகிப்திலிருந்து நாடு கடத்தப்பட்ட அரபி பாஷா, உலக முஸ்லிம் ஒற்றுமைக்காகக் குரல் எழுப்பிய ஜமாலுத்தீன் ஆப்கானீ, முஸ்லிம் கல்வி மற்றும் சமூக மேம்பாட்டுக்காக உழைத்த ஸேர் ஸெய்யத் அஹ்மத் கான் போன்றோரின் சிந்தனைத் தாக்கம் என்பன முற்போக்கு மிக்க சீர்திருத்த சிந்தனைகளை அவருள் கருக்கொள்ளச் செய்தன. இவ்விரு சிந்தனைப் போக்குகளதும் வெளிப்பாடாகவே சித்திலெப்பையின் சீர்திருத்தப் பணிகள் அமைந்தன.

வாப்பிச்சி மரிக்காருடன் சேர்ந்து சித்திலெப்பை ஆரம்பித்த கல்வி மேம்பாட்டுச் சங்கத்துக்கு அவரது சேவை தொடர்ந்தும் தேவைப்பட்டதால் கொழும்பில் தங்கியிருக்க வேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு ஏற்பட்டது. இலங்கை வாழ் முஸ்லிம்களுக்கு அறிவு புகட்டும் நோக்கில் வெளியிடப்பட்ட முஸ்லிம் நேசனோடு சேர்த்து ஞானதீபம் எனும்

மாசிகை ஒன்றையும் அவர் வெளியிட்டார். இவ்விரு பத்திரிகைகளூடாகவும் இஸ்லாம் தொடர்பான விளக்கங்களை மக்களுக்கு அளித்தார். இஸ்லாத்தை அறிந்து கொள்வதில் அரபு மொழியின் முக்கியத்துவத்தை எடுத்து விளக்கியதோடு நில்லாது அதனைக் கற்க வேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்தினார்.

கல்வித் துறையானது முஸ்லிம் சமூகத்தில் மிகவும் பின்னடைவுக்கு உட்பட்டிருந்த ஒரு காலப் பிரிவில் , அதனைப் பெறுவதனூடாக மட்டுமே முஸ்லிம் சமூகம் மேம்பாடடைய முடியுமெனத் தனது சொற்பொழிவுகள், பத்திரிகைகள், சஞ்சிகைகளூடாக அதிகம் வலியுறுத்தினார். இதன் வெளிப்பாடாகவே கொழும்பு ஸாஹிராக் கல்லூரி உருவாகியது. வாப்பிச்சி மரிக்கார் போன்ற தனவந்தர்களின் உதவிகள் இக்கல்லூரியின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரிந்தன. முஸ்லிம்கள் செறிவாக வாழ்ந்த கொழும்பு, கண்டி, கம்பளை, பொல்கஹவெலை, குரு நாகல, பதுளை, காலி, மாத்தறை முதலான பகுதிகளில் பாடசாலைகளை இவர் நிறுவியது மாத்திரமன்றி, இதற்கென அவ்வப் பிரதேசங்களில் வாழ்ந்த முஸ்லிம் பிரமுகர்களதும் கல்வி இலாகா உத்தியோகத்தர்களதும் ஒத்துழைப்புக்களையும் பெற்றுக் கொண்டார்.

இதே காலப் பகுதியில் முஸ்லிம் பெண்களின் கல்வி மேம்பாடு குறித்துச் சிந்தித்த சித்திலெப்பை கண்டி நகரில் திருகோணமலை வீதி, கடைத்தெரு வீதி, கட்டுக்கலை, குருநாகலை ஆகிய இடங்களில் முஸ்லிம் பெண்களுக்கெனத் தனியான மூன்று பாடசாலைகளை நிறுவினார். இப்பாடசாலைகளில் அல்குர்ஆன், அரபு மொழி என்பவற்றுக்கு மேலதிகமாக தமிழ், ஆங்கிலம், கணிதம், தையல் முதலான பாடங்கள் கற்பிக்கப்பட்டன. சித்திலெப்பையின் இப்பணி குறித்துத் திருப்தி கொண்ட அக்கால கவர்னர் ஹவலொக், 1892ல் அப்பாடசாலைகளை பார்வையிடவும் வருகை தந்தார்.

சித்திலெப்பை தனது சமூகப் பணியை பாடசாலைகளை அமைப்பதோடு மாத்திரம் சுருக்கிக் கொள்ளவில்லை. தான் நடாத்திவந்த முஸ்லிம் நேசனூடாக ஆசிரிய - மாணவர்களுக்கான வழிகாட்டல் ஒன்றையும் வழங்கி வந்தார். பாடசாலைகளுக்கான பாடத்திட்டத்தை வகுத்துக் கொடுத்ததுடன் தேவையான பாட நூல்களையும் எழுதி வெளியிட்டார். இஸ்லாமியப் பின்புலத்தில் நவீன கல்வியைப் பெறுவதைக் காலத்தின் தேவையெனக் கூறிவந்த போதும், நம் நாட்டு முஸ்லிம்கள் அரபு, தமிழ், ஆங்கிலம், சிங்களம் ஆகிய 4 மொழிகளிலும் தேர்ச்சி பெறவேண்டுமென வலியுறுத்தினார். அரபு மொழியானது ஒவ்வொரு முஸ்லிமினதும் வீட்டு மொழியாக இருக்க வேண்டுமென அவாக் கொண்டார். மேலும், தாய் மொழியாம் தமிழை அறியாதவனை குருடனுக்கு ஒப்பிட்டார்.

நாவல் இலக்கியத்தில் சித்திலெப்பைக்கு இருந்த ஆர்வம் அலாதியானதாகும். இவரால் எழுதி வெளியிடப்பட்ட 'அஸன்பே சரித்திரம்' இலங்கையில் வெளிவந்த முதல் தமிழ் நாவலாகக் கருதப்படுகிறது. 1885இல் இது ஒரு தனி நூலாக வெளி வந்தது. வியப்பூட்டும் கதைகளை கதைக்குள் கதையாகக் கொண்ட இந்நாவல், சமூகத்தின் குறைபாடுகளைச் சுட்டிக் காட்டுவதுடன் நில்லாது முஸ்லிம் சமூகத்தை மறுமலர்ச்சி அடையச் செய்வதையும் குறிக்கோளாகக் கொண்டிருந்தது.

பத்திரிகை தொடர்பான சித்திலெப்பையின் கண்ணோட்டம் பரந்து காணப்பட்டது. ஒரு சமூகத்தை மேம்பாடடையச் செய்வதில் பத்திரிகைகள் எத்தகைய பங்களிப்புக்களை மேற்கொள்ளலாம் என்பதை இவர் மிகச் சரியாக இனங்கண்டிருந்தார். இதன் வெளிப்பாடாகவே இவரது முஸ்லிம் நேசன் பத்திரிகை அமைந்தது. 1882 -1944 வரை தொடர்ச்சியாக வெளிவந்த இப்பத்திரிகை முஸ்லிம் சமூகத்தின் தேவைகளையும் உணர்வுகளையும் பிரதிபலிக்கும் பத்திரிகையாக மட்டுமன்றி, அவற்றை நிறைவு செய்யப் போராடும் ஓர் ஆயுதமாகவும் விளங்கியது.

சித்திலெப்பை காலத்து முஸ்லிம்கள் இஸ்லாம் பற்றிய தெளிவின்மை காரணமாக ஆன்மீகத் துறையில் மிகவும் பலவீன நிலையை அடைந்திருந்தனர். உலகியல், ஆன்மீகம் ஆகிய இரு துறைகளிலும் போசிக்கப்பட்டிருந்த இவர், இந்நிலையிலிருந்து இவர்களை மீட்டெடுப்பதை இலக்காகக் கொண்டு ‘ஞானதீபம்’ எனும் பத்திரிகையை 1892இல் வெளியிட்டார்.

முஸ்லிம்களின் சமூக, கல்வி மேம்பாட்டில் மாத்திரமன்றி அவர்களின் அரசியல் உரிமைகளை வென்றெடுப்பதிலும் சித்திலெப்பை கவனம் செலுத்தினார். அரசியல் உரிமையினை இழப்பதால் ஏற்படும் பாதிப்புக்களை நன்கு அறிந்திருந்த இவர், அதனை வென்றெடுப்பதற்கான ஊடகங்களாக தனது முஸ்லிம் நேசன் பத்திரிகையையும் சொற்பொழிவுகளையும் அமைத்துக் கொண்டார். இதனால் உணர்வு பெற்ற முஸ்லிம்கள் 1880இல் சட்ட சபையில் முஸ்லிம்களுக்கும் பிரதிநிதித்துவம் வழங்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையை கவர்னரிடம் முன்வைத்தனர். இதன் பயனாக 1889இல் எம்.ஸீ. அப்துர்ரஹ்மான் என்பவர் நியமன உறுப்பினராக நியமிக்கப்பட்டார்.

சித்திலெப்பையின் சீர்திருத்த முயற்சிகளுள், இலங்கை முஸ்லிம்களின் விவாகப் பதிவு தொடர்பான விடயமும் முக்கிய இடம் வகிக்கின்றது. விவாகப் பதிவுகள் ஒழுங்காக மேற்கொள்ளப்படாததால் ஏற்படும் பாரதூரமான விளைவுகளை முஸ்லிம் நேசன் மூலம் எடுத்துக்காட்டி, அவ்வாறு பதியப்பட வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினார். இவர் ஆரம்பித்து வைத்த இம்முயற்சி 1928ல் நியமிக்கப்பட்ட அக்பர் குழுவின் சிபாரிசுடன் 1935ம் ஆண்டு முதல் நடைமுறைக்கு வந்தது.

சமய, சமூக சீர்திருத்த முயற்சி என்ற வகையில், சமூகத்தில் காணப்பட்ட மூடப் பழக்கவழக்கங்களை ஒழிப்பதிலும் சித்திலெப்பையின் பங்காற்றுகை குறிப்பிடத்தக்க தாகும். சிங்கள மன்னர்கள் காலத்தில் காணப்பட்டு வந்த ஆரோக்கியமான சமய சூழ்நிலைக்கு, ஐரோப்பிய ஏகாதிபத்திய வாதிகள் திட்டமிட்டுச் சாவு மணி அடித்தனர். இதன் விளைவாக இலங்கை முஸ்லிம்கள் தென்னிந்திய கலாசாரத் தாக்கத்திற்கு உள்ளாயினர். இந்நிலை சில மூட நம்பிக்கைகளும் சடங்கு - சம்பிரதாயங்களும் இலங்கை முஸ்லிம்களிடையே புகுந்துகொள்ள வழிகோலியது. இவற்றைக் களைந்தெறிந்து சமூகத்தை மேம்படுத்த சித்திலெப்பை தான் வெளியிட்டு வந்த முஸ்லிம் நேசனை நன்கு பயன்படுத்திக் கொண்டார்.

இவ்வாறு இலங்கை முஸ்லிம் சமூகமும் ஏனைய சமூகத்தினரைப் போலவே முன்னேற வேண்டும் என்பதற்காக உழைத்த சித்திலெப்பையின் சிந்தனைகளும் செயற்பாடுகளும் அவருக்குத் தேசிய மட்டத்தில் பேராதரவைப் பெற்றுக் கொடுத்தது போலவே பல்வேறு துறைகளிலும் கடும் எதிர்ப்பையும் பெற்றுக் கொடுக்கத் தவறவில்லை. அவரது சமூக சீர்திருத்தப் பணிகள் ஒரு பக்கம் படித்த வர்க்கத்தினரைக் கவர்ந்தபோதும் மறு பக்கம் அக்காலத்திய பழமைபேண்வாதிகளதும் சமூக செல்வாக்குப் பெற்றிருந்த சிலரதும் எதிர்ப்புக்களுக்கும் உள்ளாகின. ஆனால் அத்தகைய எதிர்ப்புக்களைக் கண்டு அஞ்சாத அவர் தனது பணிகளைத் தொடர்ந்து மேற்கொண்டு வந்தார்.

இவ்வாறு இலங்கை முஸ்லிம் சமூகத்தின் பல்வேறு தளங்களிலும் நின்று சமூகப் புனருத்தாரணம் செய்த, மறுமலர்ச்சித் தந்தை முஹம்மது காஸிம் சித்திலெப்பை, 1898ல் தனது 60வது வயதில் ஆஸ்த்மா நோய்க்கு இலக்காகி மரணமானார். இவரது ஜனாஸாத் தொழுகையில் மூவாயிரத்துக்கும் அதிகமானோர் கலந்துகொண்டனர். கண்டியிலுள்ள மஹியாவை காட்டுப் பள்ளி மையவாடியில் அவரது ஜனாஸா நல்லடக்கம் செய்யப்பட்டது. அவரின் நினைவாக இலங்கை அரசு 1977-01-11ம் திகதி தபால் முத்திரை ஒன்றை வெளியிட்டு கௌரவித்தமை குறிப்பிடத் தக்கதாகும்.




### பயிற்சி

1. இலங்கை முஸ்லிம்களின் மறுமலர்ச்சி முன்னோடி என்ற வகையில் சித்திலெப்பை அவர்கள் முஸ்லிம் சமூகத்துக்கு ஆற்றிய தொண்டுகளைப் பட்டியலிடுக.
2. சித்திலெப்பை காலத்து முஸ்லிம்கள் எந்த வகையான தென்னிந்தியக் கலாசாரத் தாக்கங்களுக்கு உட்பட்டிருந்தனர்?

# 24

# இலங்கை முஸ்லிம் முன்னோடி - 2

## கலாநிதி துவான் புர்ஹானுத்தீன் ஜாயா



இலங்கையின் ஸேர் செய்யத் அஹ்மத் கான் என ''த கிரஸண்ட் - 1946'' எனும் பத்திரிகையில் புகழ்ந்துரைக்கப்பட்ட கலாநிதி ஜாயா, பொதுவாக இலங்கையினதும் குறிப்பாக இலங்கை முஸ்லிம்களதும் கல்வி மற்றும் அரசியல் வரலாற்றில் நீங்கா இடம் பிடித்துக்கொண்ட ஒருவராகத் திகழ்கின்றார். இவரது பொது வாழ்வு பல துறைகளில் வியாபித்திருந்தது.

துவான் புர்ஹானுத்தீன் ஜாயா எனும் பெயர் கொண்ட இவர் மலாய் இனத்தைச் சேர்ந்தவர். கண்டியிலுள்ள கலகெதர எனுமிடத்தில் 1890ல் பிறந்தார். கலகெதரையிலும் குருணாகலையிலும் இவரது குழந்தைப் பருவம் கழிந்தது. இப்பருவத்திலேயே ஆலிம்களிடம் தனது மார்க்கக் கல்வியைப் பெற்றுக்கொண்ட இவர், ஆரம்பக் கல்வியைத் தொடரும் நோக்கில் கண்டி புனித பவுல் கல்லூரியிற் சேர்ந்தார். பின்னர் புலமைப் பரிசில் பெற்று கொட்டாஞ்சேனை சென்-தோமஸ் கல்லூரியில் இணைந்தார். பாடசாலைக் காலங்களில் தலைசிறந்த மாணவன் எனும் அந்தஸ்த்தைப் பெற்றுக் கொண்டார். இதற்கு அவர் பல்வேறு துறைகளில் காட்டிய திறமையும், அதற்காக அவர் பெற்றுக்கொண்ட பரிசில்களுமே காரணங்களாக அமைந்தன. ஜே.ஏ.ஸீ. மெண்டிஸ் கணிதப் பரிசு, கலாநிதி ஈ.பெல் லத்தீன் பரிசு, கிரிஸ்டோபர் ஒபேஸேகர மேலைத்தேய இலக்கியத்துக்கான முதலாம் பரிசு, வகுப்பில் சிறந்த மாணவனுக்கான பரிசு முதலானவை அவர் பெற்றுக்கொண்ட பரிசுகளுள் சிலவாகும்.

பாடசாலை வாழ்வை முடித்துக்கொண்ட ஜாயா 1910ல் கண்டி தர்மராஜா கல்லூரியில் உதவி ஆசிரியராகத் தனது பணியை ஆரம்பித்தார். பின்னர் மொரட்டுவ

'Prince of Wales' கல்லூரியில் மேலைத்தேய இலக்கிய ஆசிரியராக நியமனம் பெற்று அக்கல்லூரியில் இணைந்தார். இக்காலப் பிரிவில் லண்டன் பல்கலைக்கழக வெளிவாரிப் பரீட்சைக்குத் தோற்றி 1916ல் கலைப் பட்டதாரியானார். 1917ல் ஆனந்தாக் கல்லூரியில் ஆசிரியராக நியமனம் பெற்ற அவர் அங்கு மேலைத்தேய இலக்கியம் மற்றும் வரலாறு போன்ற பாடங்களைக் கற்பித்தார். சட்டத்துறையில் ஜாயாவுக்கு இருந்த ஆர்வம் காரணமாக அவர் தன்னை சட்டத் துறை மாணவனாகப் பதிவு செய்து கொண்ட போதும் ஆசிரியப் பணியையே அவர் அதிகம் நேசித்தார். இதனாலேயே இலங்கையின் கல்வி வரலாற்றில் ''ஒரு கல்வியியலாளர்'' எனும் அழியா முத்திரையை அவரால் பதித்துச் செல்ல முடிந்தது.

ஆனந்தாக் கல்லூரியில் சேவையாற்றிய பின்னர் முஸ்லிம் சமூகத்தின் கல்வி மேம்பாட்டு விடயத்தில் தன்னைப் பிணைத்துக்கொண்டார். இதனைச் சிறப்பாக முன்னெடுத்துச் செல்வதற்கு ப்ரின்ஸ் ஒஃப் வேல்ஸ், தர்மராஜா, ஆனந்தா போன்ற கல்லூரிகளில் பெற்ற அனுபவங்கள் துணையாய் அமைந்தன. இத்துறையில் ஈடுபாடு காட்டுவதற்கு முன்பாகவே, நம் நாட்டு முஸ்லிம்களின் கல்வித் துறைப் பின்னடைவு தொடர்பில் அதிக ஆர்வம் காட்டி வந்தார். இக்காலப் பிரிவில் இலங்கை முஸ்லிம் சமூகம் கல்வித் துறையில் பின்னடைவுக்கு உட்பட்டிருந்தது போலவே கலாசார, அரசியல் துறைகளிலும் தனிமைப்படுத்தப்பட்டும் ஒதுக்கப்பட்டும் இருந்தது. இந்நிலையை மிகப் பெரும் துர்ப்பாக்கியமாகக் கருதிய ஜாயா, இதிலிருந்து முஸ்லிம் சமூகத்தை விடுவிக்கும் நோக்கில் பேசியும் எழுதியும் வந்தார்.

தனது சமூகத்தின் கல்வி மேம்பாட்டில் ஜாயாவுக்கிருந்த அக்கறையைப் பின்வரும் அவரது சொற்பொழிவொன்றின் சிறு பகுதி எடுத்துக்காட்டுகிறது.

''..நாம் என்னதான் சாதித்திருக்கிறோம். பிற சமுதாயத்தினர் சட்டத்தரணிகள், வைத்தியர்கள், அரச சபை உறுப்பினர்கள், துறைசார் விற்பன்னர்கள் எனப் பலரை உருவாக்கி உள்ளனர். இப்படி எத்தனைப் பேர் எம்மிடமுள்ளனர்?.......''

இலங்கை முஸ்லிம்களின் கல்வி மேம்பாடு தொடர்பில் அறிஞர் சித்திலெப்பையின் கனவை மெய்ப்பிக்க முனைந்த ஒருவராகவே ஜாயா திகழ்ந்தார். ஆங்கிலக் கல்வியின் செல்வாக்கின் மூலமாகவே கல்வி, சமூகத் திறன், அரசியல் முதலாம் துறைகளில் உயர்வு பெற முடியும் என சித்திலெப்பை போலவே இவரும் சிந்தித்தார்.

1921ல் ஜாயா ஸாஹிராக் கல்லூரியின் அதிபர் பதவியைப் பொறுப்பேற்றார். ஆறு ஆசிரியர்களையும் ஐம்பத்தொன்பது மாணவர்களையும் கொண்டிருந்த ஸாஹிராவில் ஒழுங்கான தளபாட வசதிகள்கூட இருக்கவில்லை. பாடசாலைக்கென இருந்த ஒரே கட்டடமானது இரவு வேளையில் மக்கள் தங்கும் இடமாக மாறியிருந்தது.

இவ்வாறு கவலைக்கிடமான நிலையில் மிகவும் பின்தங்கிக் காணப்பட்ட ஸாஹிராவைத் தொடர்ந்து வந்த இரு தசாப்தங்களுக்குள், அப்போதைய ஆனந்தா, ரோயல், சென் தோமஸ் போன்ற புகழ்பெற்ற கல்லூரிகளின் தரத்திற்கு ஜாயா துரித

வளர்ச்சியடையச் செய்தார். இதன் மூலம் ஸாஹிராவுக்குத் தேவையான வளங்களை அவரால் விஸ்தரிக்க முடிந்தது. 1924ல் கல்லூரிக்கென விளையாட்டு மைதானமொன்றை அமைத்துக் கொடுத்தார். என். டீ. எச். அப்துல் கபூர் என்பவரின் நன்கொடை மூலம் நிறுவப்பட்ட கல்லூரியின் பிரதான மண்டபம், அப்போதைய ஆளுநர் ஸேர் ஹேர்பட் என்பவரால் திறந்துவைக்கப்பட்டது. விளையாட்டுத் துறையிலும் நாட்டின் ஏனைய கல்லூரிகளின் தரத்திற்கு ஸாஹிராவை முன்னேற்றம் காணச் செய்தார். இதற்கென உதைப் பந்தாட்டம், றக்பி, குத்துச் சண்டை, கிரிக்கெட் போன்ற விளையாட்டுக்களை அறிமுகம் செய்தார்.

1930ல் ஏற்பட்ட பொருளாதார மந்தம், இரண்டாம் உலக மகா யுத்தம் என்பன இலங்கை முஸ்லிம் சமூகத்தின் கல்வி வளர்ச்சியில் பெரும் பின்னடைவுகளை ஏற்படுத்திய போதும் அவற்றைக் கண்டு ஓய்ந்து போகாமல் சமுதாய முன்னேற்றத்துக்காகத் தொடர்ந்தும் உழைத்தார். போரின் பின்னர் கொழும்பு வாழ் முஸ்லிம்கள் வெளியேற்றப்பட்டது மட்டுமன்றி ஸாஹிராக் கல்லூரி இராணுவத்தின் உறைவிடமாக மாறியது. இந்த இக்கட்டான நிலையை நாட்டின் வெளி மாவட்டங்களுக்குக் கல்வியை விஸ்தரிப்பதற்கான ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டார்.இதன் விளைவாக கம்பளை, அழுத்கமை, மாத்தளை, புத்தளம் ஆகிய இடங்களில் கிளைகள் தோற்றம் பெற்றன.

மனித ஆளுமை விருத்தியில் சமயம் வகிக்கும் பங்கை நன்கறிந்திருந்த ஜாயா,மாணவர்கள் சமய சூழலில் கற்கவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியதுடன் பிற சமயக் கொள்கைகளையும் மதித்து நடத்தல் வேண்டும் எனும் சக வாழ்வு பற்றிய கருத்தையும் தனது பேச்சுக்களில் கூறி வந்தார்.

சமய சூழலில் வழங்கப்படும் கல்வியானது, தேசப்பற்றையும் சமூக நலனில் ஆர்வத்தையும் வாய்ப்பற்றோரின் நலனில் அக்கறையையும் உண்டாக்க வேண்டும். கல்வி சரியான பாதையில் பயணிக்குமானால் நாடு எதிர் நோக்கும் பிரச்சினைகளை விரைவில் தீர்த்திட முடியும் எனவும் சிந்தித்த ஜாயா, அதுவரை புறக்கணிக்கப்பட்ட நிலையில் இருந்த முஸ்லிம் பெண்கள் கல்வி தொடர்பிலும் கவனம் செலுத்தினார். இத்தோடு நில்லாது ஆசிரியர் நலன் பேணும் விடயத்திலும் தனது பங்களிப்பை விஸ்தரித்தார். ஆசிரியர் பொருளாதார நிலை மேம்படவேண்டுமென அவாக் கொண்டிருந்த ஜாயாவுக்கு, அகில இலங்கை ஆசிரியர் சங்கத்தினதும் இலங்கைப் பாடசாலை அதிபர் சங்கத்தினதும் தலைவராகத் தெரிவு செய்யப்பட்டமை தனது அவாவை நிறைவேற்றிக்கொள்ள பெரு வாய்ப்பாக அமைந்தது.

ஜாயாவின் அரசியல் பிரவேசம் 1924ல் ஆரம்பமாகியது. இவ்வாண்டில் சட்ட நிரூபண சபைக்குத் தெரிவான இவர், சேர் பொன். இராம நாதன், ஜேம்ஸ் பீரிஸ் போன்ற தலைவர்களோடு நெருக்கமான உறவு வைத்திருந்தார். இலங்கை தேசிய காங்கிரஸில் சேர்ந்து தேசிய சுதந்திரத்தை வென்றெடுப்பதில் சிங்கள மற்றும் தமிழ்த் தலைவர்களோடு இணைந்து செயற்பட்டார். சட்ட நிரூபண, சட்ட சபைகளில் அங்கத்தவராக இருந்த காலத்தில், அவர் பல குழுக்களிலும் ஆணைக்குழுக்களிலும் அங்கம் வகித்தார். அதுவரை நடைமுறையில் இருந்துவந்த முஸ்லிம் விவாக, விவாக

ரத்துச் சட்டத்தை முறையாக அமுல் செய்ய வழி செய்தார். சிங்களத்தையும் தமிழையும் உத்தியோக மொழிகளாக்கும் விடயத்திலும் இவரின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது.

முஸ்லிம் சமூக நலன்களைப் பாதுகாப்பதில் எப்போதும் விழிப்போடிருந்த ஜாயா, ஜுமுஆ தொழுகைக்காக விடுமுறை பெற்றுத் தரும் விடயத்திலும் கரிசனை காட்டினார். சட்ட நிரூபண சபையில் இனரீதியான தொகுதிவாரி முறையை நீக்கி முஸ்லிம்களுக்கும் பிரதிநிதித்துவம் வழங்கப்படவேண்டுமென வலியுறுத்தினார். ஜாயாவுக்கிருந்த பரந்தளவிலான சமூக நோக்கிற்கு அவரது பின்வரும் கூற்று போதிய சான்றாகும்.

''என்னைப் பொறுத்தவரை அரசியல் சுதந்திரத்தைவிட வேறெந்த உரிமையையும் பெரிதான உரிமையென நான் கருதவில்லை.. ''

அகில இலங்கை முஸ்லிம் லீக்குடனும் ஜாயா நெருக்கமான உறவு வைத்திருந்தார். இலங்கை அரசியலில் முஸ்லிம் சமூகத்தின் பிரதிநிதி எனும் அந்தஸ்தையும் முஸ்லிம் லீக்கிற்குப் பெற்றுக்கொடுத்தார். 1936 - 1947 காலப் பகுதி வரையான இவரது அரசியல் வாழ்வு, நம் நாடு தேசிய சுதந்திரத்தைப் பெற்றுக்கொள்வதற்கு வழிவகுத்த காலப் பிரிவாகும். இலங்கையின் முதல் பிரதமர் டீ.எஸ். சேனநாயக்காவின் அமைச்சரவையில் தொழில் அமைச்சராகத் தெரிவு செய்யப்பட்டார். பின்னர் 1950ல் பாகிஸ்தானுக்கான இலங்கை உயர்ஸ்தானிகராக நியமனம் பெற்றுப் பாகிஸ்தான் சென்றார். இக்காலங்களில் அங்குள்ள தூதுவர் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அங்கு அவர் ஆற்றிய சேவைக்காகக் கராச்சிப் பல்கலைக்கழகம் அவரைக் கலாநிதிப் பட்டம் வழங்கி கௌரவித்தது.




சமயத்துறையிலும் ஜாயா மிகுந்த பற்றும் ஈடுபாடும் மிக்கவராக விளங்கினார். இலங்கையில் இருந்து ஹஜ்ஜுக்காக மக்கா செல்லும் யாத்திரிகர் நலன் கருதி மக்காவில் அவர்களுக்கான விடுதி ஒன்றை நிறுவுதல் தொடர்பான கலந்துரையாடல் ஒன்றில் கலந்துகொள்வதற்காக 1960ல் சவூதி அரேபியா சென்றார். அவரது இந்தக் குறுகிய கால விஜயத்தின்போது அங்கு அவருக்கு ஏற்பட்ட சுகவீனம் காரணமாக 1960.மே மாதம் 31ம் திகதி மரணமானர். அவரது ஜனாஸா, சவூதி அரேபிய அரசின் ராஜாங்க மரியாதையோடு ஜன்னதுல் பகீயில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

இவரின் நினைவாக இலங்கை அரசு 1981.05.31 அன்று ஒரு முத்திரையை வெளியிட்டு கௌரவித்தது.

**பயிற்சி**

1. சமய சூழலில் கற்றல் என்ற ஜாயாவின் சிந்தனையை விளக்குக.
2. கலா நிதி ஜாயா ஸாஹிராக் கால்லூரிக்கு ஆற்றிய பணிகள் யாவை?
3. கலாநிதி ரீ.பீ. ஜாயா அவர்கள் முஸ்லிம் சமூகத்துக்குச் செய்த சேவையினைப் பட்டியற்படுத்துக.

25

# பொருளீட்டல் தொடர்பான இஸ்லாத்தின் போதனைகள்

فَإِذَا قُضِيَتِ الصَّلَاةُ فَانْتَشِرُوا فِي الْأَرْضِ وَابْتَغُوا مِنْ فَضْلِ اللَّهِ وَاذْكُرُوا اللَّهَ كَثِيرًا لَعَلَّكُمْ تُفْلِحُونَ

**பின்னர் ஜும்ஆ தொழுகை நிறைவேற்றப்பட்டுவிட்டதும் (பள்ளியிலிருந்து வெளிப்பட்டு) பூமியில் பரவிச் சென்று அல்லாஹ்வுடைய அருளைத் தேடிக் கொள்ளுங்கள். அன்றியும் நீங்கள் வெற்றியடையும் பொருட்டு அல்லாஹ்வை அதிகமதிகம் தியானம் செய்யுங்கள். (62 அல் ஜுமுஆ 10)**

இஸ்லாம் ஒரு முழுமையான வாழ்க்கைத் திட்டமாகும். இது வாழ்வின் அனைத்துத் துறைகளுக்கும் வழிகாட்டி நிற்கிறது. அதனைக் கூறுபோடுவதும் அதன் ஒரு பகுதியைப் புறக்கணித்து மற்றொரு பகுதியைப் பின்பற்றுவதும் பிழையானது மாத்திரமன்றி எதிர்பார்த்த வெற்றியையும் அளிக்காது. இந்த வகையில் இஸ்லாத்தை முழுமையாக ஏற்று முழுமையாகச் செயற்படுத்துவது பிரதானமானதாகும். இஸ்லாத்தின் பொருளியற் கோட்பாட்டை (மாத்திரம் தனியாக) இஸ்லாமல்லாத, அல்லது பெயரளவில் இஸ்லாத்தைக் காணக் கூடிய ஒரு சமூகத்தில் செயற்படுத்துவது சவால்கள் நிறைந்ததாகும். அவ்வாறே நவீன பொருளாதார சிந்தனைகளுடன் அதனை இணைக்க முற்படுவதும் பிழையானதாகும்.

பொருளீட்டல் என்பது இஸ்லாத்தின் கூறுகளில் ஒன்றாகும். இஸ்லாத்தின் ஏனைய கூறுகளும் நடைமுறையில் உள்ள ஒரு சமூகத்தில் அதன் பொருளாதாரக் கொள்கையும் அமுல் நடத்தப்படும் போதே அதன் பூரண பயனை அடைய முடியும்.

ஆன்மா, உடல் என்ற இரு பகுதிகளைக் கொண்டவனே மனிதன் என்ற வகையில் இவ்விரண்டுக்கும் மத்தியில் சமநிலையைப் பேணுவதன் மூலமே உண்மையான சுபீட்சத்தைக் காண முடியும் என்பது இஸ்லாத்தின் மற்றோர் அடிப்படைக் கருத்தாகும். எனவே மனிதனது பொருளாதாரத் தேவைகள் பூர்த்தி செய்யப்படுவது போலவே அவனது ஆன்மீகத் தேவைகளும் பூர்த்தி செய்யப்படல்

வேண்டும் என அது வலியுறுத்துகின்றது. பொதுவாகப் பொருளீட்டல் என்பது, சடரீதியிலான நிறைவைப் பற்றி ஆய்வதாக இருப்பினும், அது வாழ்வின் இலட்சியத்தை அடைவதற்கான ஒரு வழியேயாகும். உடலுக்குரிய தேவைகளைப் பூர்த்தி செய்வது மட்டுமே வாழ்வின் இலக்காக அமைய முடியாது.

இஸ்லாம் ஏகத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட மார்க்கம் என்ற வகையில் அது ஷிர்க்கை அங்கீகரிப்பதில்லை. எனவே பொருளானது ஈமானைப் பாதிக்கும் நிலையைக் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டுமென இஸ்லாம் வலியுறுத்துகிறது. பணத்தையும், பண்டத்தையும் தெய்வங்களாகப் பூஜித்து வணங்க அது அனுமதிப்ப தில்லை.

## உழைப்பில் தவிர்க்க வேண்டியவை

அனுமதிக்கப்பட்ட எந்தவோர் உழைப்பு முயற்சியில் ஈடுபடுகின்றபோதும் கவனத்திற் கொள்ள வேண்டிய சில விடயங்களை இஸ்லாம் தெளிவாகக் கூறியுள்ளது. இவற்றைப் புறக்கணித்து உழைப்பில் ஈடுபடுவோர் மறுமையில் பாவிகளோடு எழுப்பப்படுவர் என ஹதீஸ்கள் எச்சரிக்கின்றன.

''வியாபாரிகளில் அல்லாஹ்வுக்குப் பயந்து, உண்மை பேசி, நன்மை செய்த வரைத் தவிர ஏனையோர் மறுமையில் பாவிகளாகவே எழுப்பப்படுவர்.'' (திர்மிதி, இப்னு ஹிப்பான்)

''வியாபாரிகளே! பொய்யையிட்டு உங்களை எச்சரிக்கிறேன். ..'' (அத்தபரானி)

**இனி உழைப்பில் தவிர்க்கப்படவேண்டிய விடயங்களைத் தொகுத்து நோக்குவோம்.**

### *ஏமாற்று*

உழைப்பின் போது அளவை நிறுவையில் முறையாக நடந்து கொள்ள வேண்டுமெனக் கூறும் இஸ்லாம், ஏமாற்று, மோசடி போன்ற தவறான வழிமுறைகளில் பொருளீட்டுவது தடுக்கப்பட்டுள்ளது எனவும் வலியுறுத்துகிறது. பின்வரும் அல்குர்ஆன் வசனங்கள் இதற்குச் சான்றுகளாக அமைகின்றன.

*''...நீங்கள் அளந்தால் பூரணமாக அளவுங்கள்; (நிறுத்தால்) சரியான எடையைக் கொண்டு நிறுங்கள்...'' (7 அல்அஃராப் 85)*

*''அளவை-நிறுவையில் மோசடி செய்பவர்களுக்குக் கேடுதான். அவர்கள் மனிதர்களிடம் அளந்து வாங்கினால் அதிகமாக அளந்துகொள்கின்றனர். ஏனை யோருக்கு அளந்து கொடுக்கும் போது குறைத்து விடுகின்றனர். அவர்கள் மகத்தான ஒரு நாளில் நிச்சயமாக எழுப்பப்படுவார்கள் என்பதை நம்பவில்லையா? அந்நாளில் அவர்கள் அகிலத்தின் அதிபதியின் முன் (விசாரணைக்காக) நிற்பர்.'' (83 அல் முதப்பிபீன்: 1-6)*

பொருளீட்டல் நடவடிக்கையில் ஈடுபடும்போது விட்டுக்கொடுத்து, நேர்மை யாக, நளினமாக நடந்து கொள்வது அவசியமாகும். இவ்வாறு நடந்துகொள்ள வேண்டியதன் அவசியத்தைப் பின்வரும் ஹதீஸ் விளக்கி நிற்கிறது.

''விற்கும்போதும் வாங்கும்போதும் தன் உரிமையைக் கோரும்போதும் தாராளத் தன்மையுடன் நடந்து கொள்ளும் மனிதனுக்கு அல்லாஹ் அருள்பாலிப்பானாக! என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிரார்த்தனை புரிந்துள்ளார்கள்'' (புஹாரி, திர்மிதீ)

### பொய்ச் சத்தியம்

உழைப்பின்போது தவிர்க்க வேண்டிய விடயங்களுள் பொய்ச் சத்தியமும் ஒன்றாகும். இவ்வாறு செய்வது அல்லாஹ்வின் மகத்துவத்தைக் குறைப்பதாக அமைந்து விடுவது மாத்திரமன்றி வாடிக்கையாளரையும் பொது மக்களையும் ஏமாற்றும் ஒரு வழிமுறையாகவும் அமைந்துவிடுகின்றது. எனவேதான் இவ்விடயத்தை இஸ்லாம் தடை செய்கிறது.

''(பொய்ச்) சத்தியம் செய்வது பொருளுக்குக் கேள்வியை உண்டாக்கினாலும், பரக்கத்தை அழித்துவிடும்'' (புஹாரி)

''(வியாபாரத்தில்) சத்தியம் செய்வது, சரக்கை விற்கச் செய்திடும். (ஆனால்) இலாபத்தை அழித்துவிடும்'' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம், நஸாயீ, அஹ்மத், அபூதாவூத்).

இவ்வாறு விற்பனை செய்யும் பொருளில் இல்லாததை இருப்பதாகப் பொய்ச் சத்தியம் செய்து விற்றால் மறுமை நாளில் எவ்வளவு பெரிய பாதிப்பு ஏற்படும் என்பதை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.

''மறுமை நாளில் மூன்று நபர்களை அல்லாஹ் பார்க்க மாட்டான், அவர்களைத் தூய்மைப் படுத்தவும் மாட்டான், அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு என்று கூறினார்கள். அந்த மூவரில் ஒருவன் தனது வியாபாரப் பொருளில் இல்லாததை இருப்பதாகக் கூறி சத்தியம் செய்தவனாவான்.'' (புஹாரி).

''ஒருவன் ஒரு சத்தியம் செய்து அதன் காரணமாக மற்றொரு முஸ்லிமுடைய சொத்தைப் பறித்துக் கொண்டு, அதில் அவன் பொய்யனாக இருப்பின், மறுமையில் அவன் மீது கோபமாக இருக்கும் நிலையில் அல்லாஹ்வைச் சந்திப்பான் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.'' (புஹாரி, முஸ்லிம்).

இது பற்றி அல்குர்ஆன் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

''உங்களுக்கிடையே (ஒருவருக்கொருவர்) உங்கள் பொருட்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள்!'' (2 அல்பகறா : 188)

''நிச்சயமாக வியாபாரிகளே பாவிகள்'' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு சமயம் கூறியபோது, ''அல்லாஹ்வுடைய தூதரே! அல்லாஹ் வியாபாரத்தை ஆகுமாக்கி இருக்கிறான் அல்லவா?'' என்று தோழர்கள் வினவினார்கள். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ''ஆம். ஆயினும் அவர்கள் சத்தியம் செய்து பாவம் செய்கின்றனர். பேச்சில் பொய் சொல்கின்றனர்'' எனக் கூறினார்கள். (அஹ்மத்)

### பதுக்கல்

பதுக்கல் தொழிற்பாடும் இஸ்லாத்தில் தடை செய்யப்பட்டுள்ளது. சந்தையில் விலையேற்றத்தை எதிர்பார்த்துப் பொருட்களைப் பதுக்குவது ஹராமானதாகும். ஒருவனிடம் குடிகொள்ளும் பேராசையும் பிறர் நலன் கருதாமையுமே இவ்வாறான தீய செயல்கள் தோன்றக் காரணமாகின்றன. இதனால் மக்கள் பல்வேறு அசௌகரியங்களுக்கு முகம் கொடுக்க வேண்டிய நிலைக்கு உள்ளாகின்றனர். எனவேதான் இஸ்லாம் பதுக்கலை வன்மையாகக் கண்டிக்கின்றது.

பதுக்கல் தொடர்பாக வந்துள்ள பின்வரும் ஹதீஸ்கள் அதன் பாரதூரத்தை எமக்கு எடுத்துக் காண்பிக்கின்றன.

''தேவையான பொருளைப் பதுக்கி வைக்காமல் உரிய நேரத்தில் அவற்றை அங்காடிக்குக் கொண்டு வருபவன் அல்லாஹ்வின் அருளுக்கு உரித்தானவனாவான். மேலும் அல்லாஹ் அவனுக்கு வாழ்வாதாரங்களையும் வழங்குவான். இன்னும் அவற்றைப் பதுக்கி வைப்பவன் அல்லாஹ்வின் சாபத்திற்குரியவனாவான்'' என்று கூறினார்கள். (இப்னுமாஜா).

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''தேவையான பண்டங்களைப் பதுக்கி வைப்பவன் எவ்வளவு கெட்டவனாக இருக்கிறான். அல்லாஹ் பொருளின் விலையை மலிவாக்கி விட்டால் இவன் வருத்தப்படுவான். விலை ஏறிவிட்டாலோ மகிழ்ச்சிகொள்கிறான்.'' (பைஹகீ).

'பதுக்குபவன் பாவியாவான்,'' (முஸ்லிம், அபூதாவூத்)

''உணவுப் பொருட்களை நாற்பது நாட்களுக்குப் பதுக்கியவன் அல்லாஹ்வை விட்டும் நீங்கிக்கொள்கிறான். அல்லாஹ்வும் அவனை விட்டும் நீங்கிக்கொள்கிறான்'' (அஹ்மத், அல்ஹாகிம்)

''மிகக் கெட்ட அடியான் பதுக்கல் செய்பவனே. விலை இறக்கத்தைக் கேட்டால் அவன் கவலைப்படுகிறான். விலையேற்றத்தைக் கேள்விப்பட்டாலோ மகிழ்ச்சி அடைகின்றான்.'' (ரஸீன்)

## வட்டி

இஸ்லாம் பெரும்பாவங்கள் எனப் பட்டியலிட்டிருக்கும் விடயங்களுள் வட்டியும் பிரதானமான ஒன்றாகும்.

பணத்தின் அசலுக்கு அதிகமாக வாங்கும் தொகையே வட்டி எனப்படும். இதனைக் கீழ்வரும் அல்குர்ஆன் வசனம் விளக்குகிறது.

*'ஆயினும் நீங்கள் (வட்டி வாங்கியதைப் பற்றி) மனம் திருந்தி மீண்டு விட்டால், உங்கள் பொருளின் அசல் தொகை உங்களுக்கு உண்டு' (2 அல்பகறா 279)*

வட்டி வாங்குவதையும் கொடுப்பதையும் இஸ்லாம் வன்மையாக கண்டிக்கிறது. எந்தக் குற்றத்திற்கும் இல்லாத அளவுக்கு வட்டியை, அல்லாஹ்வுடன் போர் செய்யும் ஒரு செயலாக அல்லாஹ் அல்குர்ஆனில் எச்சரிக்கிறான்.

*'ஈமான் கொண்டவர்களே! நீங்கள் முஃமின்களாக இருந்தால் அல்லாஹ்வுக்குப் பயந்து எஞ்சியுள்ள வட்டியை வாங்காது விட்டு விடுங்கள். அவ்வாறு நீங்கள் செய்யவில்லையானால் அல்லாஹ்விடமிருந்தும் அவனது தூதரிடமிருந்தும் போர் அறிவிக்கப்பட்டு விட்டது (என்பதை அறிந்து கொள்ளுங்கள்)' (2 அல்பகறா 279)*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'பேரழிவை ஏற்படுத்தும் ஏழு பெரும் பாவங்களைத் தவிர்த்து விடுங்கள்' என்று கூறினார்கள். மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! அவை யாவை?' என்று கேட்டார்கள். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பது, சூனியம் செய்வது, முறையின்றிக் கொல்லக் கூடாதென அல்லாஹ் புனிதப்படுத்திய உயிரைக் கொல்வது, வட்டியைப் புசிப்பது, அநாதைகளின் செல்வத்தை உண்பது, போரின்போது புறமுதுகு காட்டி ஓடுவது, இறை நம்பிக்கை கொண்ட அப்பாவிகளான பத்தினிப் பெண்களின் மீது அவதூறு கூறுவது ஆகியனவே (அத்தகைய பெரும் பாவங்கள்)' என்று கூறினார்கள். (புஹாரி)

மறுமையில் வெற்றி பெறுவதே ஒவ்வொரு முஸ்லிமின் நோக்கமாக இருக்க வேண்டும். வட்டி வாங்கியோர் மறுமையில் துன்புறுத்தும் வேதனைக்கு உட்படுத்தப் படுவார்கள் என அல்குர்ஆனும் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஹதீஸ்களும் எடுத்துக் காட்டுகின்றன.

*''வட்டி வாங்குவது அவர்களுக்குத் தடை செய்யப்பட்டிருந்தும், அவர்கள் அதனை வாங்கி வந்ததன் (காரணமாகவும்,) தவறான முறையில் அவர்கள் மக்களின் சொத்துகளை விழுங்கிக் கொண்டிருந்ததன் (காரணமாகவும், இவ்வாறு தண்டனை வழங்கினோம்), இத்தகைய நிராகரிப்போருக்கு (மறுமையில்) நோவினை செய்யும் வேதனையையும் நாம் சித்தப்படுத்தியுள்ளோம். (4 அன்னிஸா :161)*

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

*''இன்றிரவு (கனவில்) இரண்டு மனிதர்களைக் கண்டேன். அவர்கள் என்னிடம் வந்து தூய்மையான ஒரு நிலப்பகுதிக்கு என்னை அழைத்துச் சென்றனர். நாங்கள் நடந்து வந்தபோது இரத்த ஆறு ஒன்றை அடைந்தோம். ஆற்றினுள் ஒருவர் இருந்தார். ஆற்றின் கரையில் இன்னொருவர் தனக்கு முன்னே கற்களை வைத்து நின்றிருந்தார். ஆற்றிலே உள்ளவர் வெளியேற முனையும்போது. அவரது வாயில் ஆற்றின் கரையில் நின்றிருந்தவர் கல்லை எறிந்து அவர் முன்பு இருந்த இடத்திலேயே அவரைக் கொண்டுபோய் நிறுத்தினார். அவர் வெளியேற வரும் போதெல்லாம் இவர் அவரின் வாயில் கல்லை எறிய, அதனால் அவர் முன்பிருந்த இடத்திற்கே திரும்பிச் சென்று கொண்டிருந்தார்! ''அவர் யார்?' என்று (என்னை அழைத்துச் சென்றவர்களிடம்) கேட்டேன். அதற்கவர்கள் 'ஆற்றில் நீர் பார்த்தவர் வட்டி உண்பவராவார்!'' எனக் கூறினார்கள்.'' (புஹாரி)*

### ஹராமான பொருட்களை வாங்குதல், விற்றல்

ஒருவர் பிறிதொருவரிடம் இருந்து நியாயமற்ற முறையில் பெறப்பட்ட ஒரு பொருளை வாங்குவதும் விற்பதும் ஹராமானதாகும்.

இது பற்றி அல்லாஹ் தன் திருமறை வசனத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறான்:

''...நம்பிக்கை கொண்டு நல்லறங்கள் செய்வோரைத் தவிர, உங்களில் கூட்டுச் சேர்வோரில் அதிகமானோர் ஒருவர் மற்றவர் மீது அநீதி இழைக்கின்றனர்...'' *(38 ஸாத் 24)*

*''எவர் திருடப்பட்ட ஒரு பொருளை அது திருடப்பட்டது என்பதை அறிந்திருந்தும் அதனை வாங்குவாராயின் அவரும் அதன் பாவத்திலும் குற்றத்திலும் பங்கேற்றவராவார்'' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் கூறியுள்ளார்கள். (பைஹகீ)*

''வியாபாரம் போன்ற வணிகத்தில், இரண்டு பங்காளிகளில் ஒருவர் தன்னுடைய தோழருக்கு மோசடி செய்யாத வரை அவர்களுடன் மூன்றாவது பங்காளியாக அல்லாஹ் இருப்பான் '' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். *(அபூதாவூத்)*

### வியாபாரத்தில் ஹலால், ஹராம் பேணுதல்

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''அல்லாஹ் யூதர்களைச் சபிப்பானாக! என்று மூன்று முறை கூறிவிட்டு, நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் மீது கொழுப்பை ஹராமாக்கினான். அவர்களோ அதை விற்பனை செய்து அதன் பணத்தில் சாப்பிட்டார்கள். அல்லாஹ் ஒரு சமுதாயத்தின் மீது எதை உண்ண ஹராமாக்கினானோ அதனுடைய பணத்தையும் ஹராமாக்கிவிட்டான்'' என்று கூறினார்கள். (அபூதாவூத்).*

*''ஹராத்தின் மூலம் வளர்ந்த சதைக்கு நரக நெருப்பே தகுதியானது'' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறிதொரு சமயம் கூறினார்கள். (தபரானீ).*

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மேலும் கூறினார்கள்: ''ஒரு காலம் வரும். அப்போது மக்கள் தாம் சம்பாதிப்பவை ஹலாலா, ஹராமா என்பதைப் பொருட்படுத்த மாட்டார்கள்'' (புஹாரி).*

அவ்வாறே மதுபானம் தயாரிப்பதற்காகத் திராட்சையை வாங்குவோருக்கு அதனை விற்பது ஹராமாகும். மேலும் குழப்பவாதிகளுக்கும், விஷமிகளுக்கும் ஆயுதங்களை விற்பனை செய்வதும் கூடாது. இவ்வாறு ஒரு ஹலாலான பொருளாயினும் அதனை ஒரு ஹராத்தைச் செய்வதற்குப் பயன்படுத்துவோருக்கு விற்பது விலக்கப்பட்டதாகும்.

**பயிற்சி**

1. பொருளீட்டல் தொடர்பான இஸ்லாத்தின் போதனைகளைச் சுருக்கமாக விளக்குக.
2. இஸ்லாம் தடை செய்துள்ள உழைப்பு முறைகளைப் பட்டியற்படுத்துக.
3. தவறான உழைப்பு முறைகளுள் வட்டி, பதுக்கல் முதலானவை பற்றிச் சிறு குறிப்பெழுதுக.

# 26

# இஸ்லாமிய நிதியியல்

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تَأْكُلُوا أَمْوَالَكُمْ بَيْنَكُمْ بِالْبَاطِلِ

**நம்பிக்கை கொண்டவர்களே! உங்களில் ஒருவர் மற்றவரின் பொருட்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள் (4 அன்னிஸா 29)**

மனிதனின் அன்றாடத் தேவைகள் சுமுகமான முறையில் நிறைவேற்றுவதற்குப் பொருளாதாரம் மிக முக்கியமானதாகும். பொருளாதாரத்தினை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு போட்டிகளும் முரண்பாடுகளும் மனிதர்கள் மத்தியில் ஏற்பட்டுள்ளதை வரலாற்றில் எல்லாக் காலங்களிலும் அவதானிக்கிறோம். இவற்றின் தொடர்ச்சியையே சமகால உலகிலும் பார்க்கிறோம்.

மனிதனின் பொருளீட்டல் முயற்சிகளுள் நிதியியல் நடவடிக்கைகள் மிகப் பிரதானமானவை. ஆகையால், அவற்றுடன் தொடர்பான பல ஒழுங்குகளையும் செயற்பாடுகளையும் மனிதன் திட்டமிட்டு உருவாக்கி நடைமுறைப்படுத்துகின்றான். இவ்வகை நடைமுறைகளுள் இஸ்லாத்தின் வழிகாட்டலுடன் உடன்படுகின்ற விடயங்கள் காணப்படும் அதேவேளை முரண்படுகின்ற நடவடிக்கைகள் பலவும் காணப்படுகின்றன. அவை பற்றி முஸ்லிம்கள் அறிந்து செயற்படவேண்டியது அவசியமாகும்.

இஸ்லாத்தின் வழிகாட்டலில் செல்வத்தைச் சரியான வழியில் சம்பாதித்தலும் அவற்றை நல்ல வழியில் செலவழித்தலும் உயர்ந்த வணக்கங்களுள் ஒன்றாகும்.

இதுபற்றி அல்குர்ஆன்: *''உங்களில் ஒருவர் மற்றவரின் பொருட்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள்'' ( 4 அந்நிஸா 29)* **என்று அறிவுறுத்துகின்றது.**

''தான் மற்றவர்களிடம் யாசகம் கேட்காமல் இருப்பதற்காகவும் தன்னுடைய குடும்பத்தினருக்கு சம்பாதிப்பதற்காகவும் அண்டை வீட்டார் மீது கரிசனை காட்டு வதற்காகவும் யார் ஆகுமாக்கப்பட்ட (ஹலாலான) உலகப் பொருட்களைத் தேடிச் சம்பாதிக்கிறாரோ அவர் பௌர்ணமி நிலவு போன்ற முகத்துடன் கியாம நாளில் அல்லாஹ்வைச் சந்திப்பார்'' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (தபரானீ)

எனவே, ஒவ்வொரு முஸ்லிமும் எந்தக் கொடுக்கல் வாங்கலில் ஈடுபடலாம், எதில் ஈடுபடக் கூடாது என்பதைத் தெளிவாக அறிந்திருக்க வேண்டும். அதனை, இஸ்லாம் கூறும் நிதியியல் நடவடிக்கைகளைக் கற்பதன் மூலமே தெரிந்து கொள்ள முடியும். ஏனெனில், பொருளீட்டலில் ஹலால், ஹறாம் தொடர்பான ஞானமுடனேயே ஈடுபட வேண்டுமென்பதை ஒவ்வொரு மூஃமினிடமும் இஸ்லாம் எதிர்பார்க்கிறது. இதனை, ''மார்க்கச் சட்டங்கள் தெரிந்தவர் மட்டுமே நம்முடைய கடைவீதிகளில் விற்றல் வாங்கலில் ஈடுபடவேண்டும், சட்டமறியாதவர் சந்தைக்கு வரவேண்டாம்'', என்ற கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கூற்று உறுதிபடுத்துகின்றது.

**பொருளீட்டல் பற்றிய இஸ்லாத்தின் அடிப்படைகளைப் பின்வருமாறு சுருக்கமாக நோக்கலாம்.**

- ஒரு முஸ்லிம் எப்பொழுதும் ஹலாலான முறையிலேயே பொருளீட்ட வேண்டும்.
- நேர்மையான வர்த்தகன் அல்லாஹ்வின் அருளுக்குரியவன்.
- தேவையுள்ளவனுக்குக் கடன் கொடுப்பதும், கடனை மீளச் செலுத்த உதவுவதும் முஃமினின் பண்புகளாகும்.
- நிதியியல் நடவடிக்கைகளின் போது அடகு, குத்தகை போன்ற நடைமுறைகள் பின்பற்றப்படுகின்றன.
- பொருளீட்டலில் கூட்டு முயற்சிகளை இஸ்லாம் அனுமதித்து தேவையான வழிகாட்டல்களையும் வழங்கியுள்ளது.
- வட்டி, கலப்படம், சூதாட்டம், ஏமாற்றுதல் போன்ற விடயங்கள் பிறர் பொருளை முறையற்று அனுபவிக்கும் அத்துமீறிய நடவடிக்கைகளாகும்.

தவறான வழிகளில் பொருளீட்டுவதைத் தடை செய்துள்ள இஸ்லாம் நேர்மை யாகவும் நிறைவாகவும் சம்பாதிக்கக்கூடிய பல வழிமுறைகளை அனுமதித்துள்ளது. ஏனெனில், மனிதன் ஹலாலான முறையில் உழைத்து வாழ்வதையே அவனுக்கு கண்ணியமும் கடமையும் என அது கருதுகின்றது.

இஸ்லாம் ஏற்றுக் கொள்ளும் வர்த்தக முயற்சிகள் சிலவற்றைப் பின்வருமாறு நோக்கலாம்:

### 1. அல் முறாபஹா

இவ்வகை வர்த்தக நடவடிக்கையின் போது ஒரு பொருளானது அதன் கொள்விலையுடன் சந்தை நிலைக்கேற்ப இலாபமும் சேர்த்து விற்பனை செய்யப்படும். இதில் வாடிக்கையாளருக்கும் வியாபாரிக்கும் பேரம் பேசும் வாய்ப்பு வழங்கப்படவோ அல்லது விலை மாற்றமின்றி நிலையான பெறுமதியில் பொருளை விற்பதற்கோ முடியும். அத்துடன் பொருளின் பெறுமானத்தை முழுமையாக ஒரே தடவையிலோ அல்லது தவணை முறையிலோ பெற்றுக் கொள்ளவும் முடியும். தவணைமுறைச் செலுத்தலின் போது இலாபத்தில் அதிகரிப்புச் செய்வதற்கான உரிமையும் வர்த்தகருக்கு உண்டு.

### 2. அல் முழாறபா

இவ்வகை வர்த்தக நடவடிக்கை மூலம் முதலீட்டில் அனுபவமற்ற மூலதனம் கொண்டோரும் சிறந்த அனுபவம் பெற்றிருந்தும் மூலதன வசதியற்றிருப்போரும் பயன் பெறுவதற்கான வாய்ப்புக்கள் உள்ளன. மூலதனம் கொண்டவர் முதலீடு செய்ய, முயற்சியாளர் தனது அறிவு அனுபவங்களைப் பயன்படுத்தி உச்ச பயன்பெற முயற்சிப் பார். முதலீடு சம்பந்தமான பரஸ்பர புரிந்துணர்வு இருவரிடமும் காணப்படவேண்டும். அத்துடன் இலாப நஷ்டம் சம்பந்தமான முற்கூட்டிய ஒப்பந்தம் இருவருக்குமிடையில் மேற்கொள்ளப்பட வேண்டும். இலாபம் இரு தரப்பினருக்கும் இடையில் பகிரப்படும். நஷ்டம் முயற்சியாளரின் கவனக் குறைவினால் ஏற்படாதவிடத்து முதலீட்டாளரால் மட்டுமே பொறுப்பேற்கப்படும்.

### 3. அல் முஷாரகா - கூட்டு வியாபாரம்

இது ஒன்றுக்கு மேற்பட்ட பங்குதாரர்கள் இணைந்து மேற்கொள்ளும் பொரு ளியல் நடவடிக்கையாகும். இதில் பங்கேற்கும் தொழில் முயற்சியாளர்கள் மூலதனம் மனிதவளம் அனைத்திலும் தத்தமது வசதிக்கேற்ற விதத்தில் பங்கேற்கலாம். இலாபம் புரிந்துணர்வு அடிப்படையில் பகிரப்படும் அதேவேளை நட்டம் அவரவர் பங்குக்கேற்ற விகிதத்தில் பொறுப்பேற்கப்படும்.

பலரிடமும் பிரிந்து காணப்படும் வளங்களும், ஆற்றல்களும் ஒன்று சேரும் போது இலாபம் தரும் கூட்டு முயற்சியாக அது அமையப் பெறுகிறது. கூட்டு வியாபாரத்தில் பலரது செல்வமும் மற்றும் பலரது ஆற்றலும் ஒன்றிணைக்கப்பட்டு தொழில் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. சமூகத்தின் பல தேவைகள் நிறைவேறுகின்றன. கூட்டுமுயற்சியாண்மை மூலம் பொருளீட்டுவது அபிவிருத்தி நிறைந்ததாகும். நேர்மையான கூட்டு முயற்சியை ஊக்குவிக்கு முகமாக ஹதீஸ் குத்ஸீயில் அல்லாஹ் ''ஒருவர் மற்றவருக்கு துரோகமிழைக்காத வகையில் கூட்டு முயற்சியில் ஈடுபடும் காலமெல்லாம் நான் மூன்றாமவனாக இருப்பேன்'' (அபூதாவூத்) எனக் குறிப்பிடுகின்றான்.

இவை தவிர, இஜாறா (குத்தகை / வாடகைக் கொள்வனவு), ஸலம் (முற்பணக்கொடுப்பனவு வியாபாரம்), ரஹ்ன் (அடகு), கர்ளுள் ஹஸன் (பரோபகாரக் கடன்) போன்ற இஸ்லாமிய கொடுக்கல் வாங்கல்களும் காணப்படுகின்றன. அவற்றை ஒழுகி பொருளீட்டலில் ஈடுபடுவது இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்டுள்ளது.

அதேபோன்று ஹராமான வழிமுறைகளான வட்டி, சூதாட்டம், ஏமாற்று, கலப்படம், அளவை நிறுவைகளில் மோசடி செய்தல், தீங்கு விளைவிக்கக்கூடியவற்றை உற்பத்தி செய்தல் வாங்குதல் விற்றல் அல்லது அதற்கு துணைநிற்றல் போன்ற பல விடயங்கள் இஸ்லாமிய நிதியியல் கோட்பாடுகளால் முற்றாகத் தடைசெய்யப் பட்டுள்ளன.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ المُرابَحَةُ ❁ المُضَارَبَةُ ❁ المُشَارَكَةُ ❁ الإِجَارَةُ ❁ السَّلَمُ ❁ الاسْتِصْنَاعُ

## பயிற்சி

1. இஸ்லாம் கூட்டு முயற்சியாண்மையை ஊக்குவிக்கின்றது என்பதனை ஆதாரங்களுடன் எடுத்துரைக்க.
2. இஸ்லாமிய நிதி நடவடிக்கைகளில் முழாறபாவின் சிறப்பம்சம் பற்றிக் கருத்துரைக்க.
3. ஏனைய நிதி நடவடிக்கைகளிலிருந்து இஸ்லாமிய நிதி நடவடிக்கைகள் வேறுபடும் பாங்கினை நீர் கற்ற பின்னணியில் விளக்குக.
4. நீர் கற்ற பல்வகை வியாபார முறைகளையும் வரைவிலக்கணப்படுத்துக.

# 27

# திருமணம்

" وَأَنْكِحُوا الْأَيَامَى مِنْكُمْ وَالصَّالِحِينَ مِنْ عِبَادِكُمْ وَإِمَائِكُمْ "

**உங்களில் வாழ்க்கைத் துணை இல்லாதோருக்கு திருமணம் செய்து வையுங்கள். (24 அந்நூர் 32)**

இஸ்லாமிய வாழ்வின் அடித்தளம் குடும்பமாகும். இதனால்தான் சில அறிஞர்கள் இஸ்லாத்தைக் குடும்பம் சார்ந்த மார்க்கம் என வர்ணித்துள்ளனர். குடும்பம் என்பது ஒரு சிறிய சமூகம்; அது ஒரு பெரிய சமூகத்தின் ஆரம்ப வித்தாகும். வித்து ஆரோக்கியமாக இருந்தாலே விருட்சம் ஆரோக்கியமாக இருக்கும். சரியான குடும்பங்கள் உருவாகின்ற போதே சிறப்பானதொரு சமூகம் தோன்ற முடியும். குடும்ப நிறுவனங்களின் பலம் சமூகத்தைப் பலப்படுத்தும் அதன் பலவீனம் சமூகத்தைப் பலவீனப்படுத்தும்.

அல்குர்ஆன் குடும்பத்துக்கு அதி முக்கியத்துவம் கொடுத்துள்ளது. அது தொடர்பான சட்ட திட்டங்களை ஈமானோடு இணைத்து விரிவாக எடுத்துரைத்துள்ளது. பல இடங்களில் நபிமார்களின் குடும்பங்கள் பற்றியும் பேசுகின்றது.

சமூகத்தின் அடித்தளமாக அமையும் குடும்ப உருவாக்கம் திருமணத்தின் மூலம் பலம் பெறுகின்றது. இஸ்லாம் அதனை நபிமார்களின் வழிமுறை எனப் போதிக்கின்றது. அதில் ஈடுபடும்படி கட்டளையிடுகின்றது; அதன்பால் ஆர்வமூட்டுகின்றது.

*''உங்களில் வாழ்க்கைத் துணை இல்லாதோருக்குத் திருமணம் செய்து வையுங்கள்.'' (24 அந்நூர் 32)*

''வாலிபர்களே உங்களில் சக்திவாய்ந்தவர்கள் திருமணம் செய்து கொள்ளவும். ஏனெனில் அது பார்வையைக் கட்டுப்படுத்தும். மர்மஸ்தானங்களைப் பாதுகாப்பதற்கும் சிறந்ததாகும். சக்தியற்றவர்கள் நோன்பு நோற்றுக் கொள்ளட்டும். அது அவருக்குப் பாதுகாப்பாகும்.'' (புஹாரி)



இஸ்லாமிய சட்ட அறிஞர்கள் திருமணம் பற்றிய சில சட்டத் தீர்ப்புகளை முன் வைத்துள்ளனர். இதன் பிரகாரம் உடற் பலமும் பொருளாதார வளமும் உள்ள ஓர் ஆண் திருமணம் செய்வது ஸுன்னத்தாகும். இத்தகைய ஒருவர் பாவத்தில் விழுந்துவிடுவார் என அஞ்சினால் விவாகம் செய்வது வாஜிபாகும். பெண்ணுக்கும் இதே விதிதான். எனினும் பொருளாதார வளமிருத்தல் என்ற நிபந்தனை அவளுக்கு இல்லை.

இஸ்லாமிய ஷரீஆவின் பார்வையில் திருமணத்தின் நோக்கங்களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

### *1. ஸாலிஹான சந்ததியை உருவாக்கல்.*

ஸாலிஹான சந்ததிகள் என்பது மனித இனத்தின் நீண்ட கால இருப்பைக் குறிக்கின்றது. திருமணத்தின் பயன்களில் ஒன்று சிறந்த ஸுர்ரிய்யத்தை (சந்ததிகளைத்) தோற்றுவிப்பது என்ற கருத்தை அல் குர்ஆனும் ஸுன்னாவும் போதிக்கின்றன. எனவே பிள்ளைகளைப் பெற்றெடுப்பது என்ற எல்லையைத் தாண்டி நீண்டகாலப் பரம்பரையொன்றை உருவாக்குவதையே குறிக்கின்றது. எனவே மனித இனம் நிலைத்திருப்பதற்கான ஒரு பொறிமுறையே திருமணமாகும்.

### *2. உடல், உள அமைதியை ஏற்படுத்தல்.*

திருமணம் என்பது உலகில் ஆணும் பெண்ணும் அடைந்து கொள்கின்ற மிகப் பெரிய இன்பமும் சந்தோசமும் திருப்தியுமாகும். அது உடலையும் உள்ளத்தையும் சந்தோசப்படுத்துகின்றது.

*''நீங்கள் அமைதியடைந்து கொள்வதற்காக உங்களிலிருந்தே உங்களது சோடியைப் படைத்தமையும் உங்கள் மத்தியில் அன்பையும் அருளையும் ஏற்படுத்தியமையும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் ஒன்றாகும். (30 ரூம் 21)*

திருமணம் ஒரு மனிதனிடத்தில் அமைதியையும் நிதானத்தையும் (ஒரு விடயத்தைச் சரியாகக் கையாளும் ஆற்றலையும்) அபாரப் பொறுப்புணர்ச்சியையும் கொண்டுவந்து சேர்க்கின்றது. மன அமைதி ஒருவரது செயலாற்றலை அதிகரிக்கிறது. உற்பத்தித் திறனை பன்மடங்காக்குகிறது. இதனையே அல் குர்ஆன் கணவன் மனைவியரது இணைப்பை 'ஸகன்' (அமைதி) என்ற சொல்லினூடாக விளக்குகின்றது.

உடல் அமைதி என்பது பாவங்களிலிருந்து, குற்றச் செயல்களிலிருந்து, ஆட்கொள்ளி மற்றும் சமூக நோய்களிலிருந்து பாதுகாப்பைப் பெற்றுத்தருவதைக் குறிக்கும். அல் குர்ஆன் திருமணமானவரைக் குறிப்பதற்கு 'முஹ்ஸன்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறது. இந்தச் சொல் 'ஹிஸ்ன்' (பாதுகாப்பு அரண்) என்ற சொல்லிருந்து பிறந்ததாகும்.

எனவே இங்கு திருமணம் என்பது ஒரு பாதுகாப்பு அரண். திருமணம் முடித்தவர் அந்த அரணுக்குள் பாதுகாப்பாக இருப்பவர் என்ற கருத்துப் பெறப்படுகிறது. மேலும் அவரைக் குற்றச் செயல்களிருந்து பாதுகாத்து விடுகிறது. இபாதத்துக்களில் உள அமைதியோடு ஈடுபட வழி செய்கிறது 'யார் திருமணம் முடிக்கின்றாரோ அவர் தனது மார்க்கத்தின் பாதியை நிலை நாட்டியவர் ஆவார்'

### 3. சிறந்த சமூகக் கட்டமைப்பைத் தோற்றுவித்தல்.

கணவன் மனைவி மூலம் உருவாகும் குடும்பமே சமூகக் கட்டமைப்பின் அடிப்படையாகும். அதன் சீர்மையை உறுதி செய்வது குடும்ப அலகின் சீர்மையாகும். குடும்ப வாழ்வு அமைதியும் சீர்மையும் கொண்டதாக இருந்தாலே சமூகம் சரியான பாதையில் வழிநடத்தப்படும்.

''இறைவா! எமது மனைவிமார்கள், சந்ததிகள், பிள்ளைகள் மூலம் எமக்குக் கண்குளிர்ச்சியை ஏற்படுத்துவாயாக. எங்களை முத்தகீன்களது தலைவர்களாக ஆக்கி விடுவாயாக....'' *(25 புர்கான் 74)*

திருமணம் பொறுப்புணர்வை தோற்றுவிப்பதன் மூலம் சிறந்த சமூகக் கட்டமைப்பை உறுதி செய்கிறது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குடும்பப் பொறுப்பையும், சமூகப் பொறுப்பையும் இணைத்தே பேசியுள்ளார்கள்.

' தலைவர் ஒரு பொறுப்பாளர் அவர் மக்கள் குறித்து விசாரிக்கப்படுவார். ஆண் தனது குடும்பத்துக்குப் பொறுப்பாளன். குடும்பம் குறித்து விசாரிக்கப்படுவான். பெண் தனது வீட்டுக்கும் பிள்ளைகளுக்கும் பொறுப்பானவள். இது பற்றி விசாரிக்கப்படுவாள்'' (புஹாரி)

இத்தகைய நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ள உதவும் திருமணத்தில் ஈடுபடுவது இபாதத் ஆகும். திருமணத்தைக் குறிப்பதற்குப் பயன்படும் 'நிகாஹ்' என்ற

அரபுப் பதம் 'நகஹ' என்ற அரபுச் சொல்லிவிருந்து தோன்றியது. இஸ்லாமிய வழக்கில் ஆணும் பெண்ணும் கணவன் மனைவி என்ற அந்தஸ்த்தை மார்க்க ரீதியாகவும் சட்ட ரீதியாகவும் சமூக ரீதியாகவும் அடைந்து கொள்வதற்காக இறையச்ச உணர்வோடு செய்து கொள்கின்ற ஓர் உடன்படிக்கையே நிகாஹ் ஆகும். அல்லாஹ்வின் பெயரை முன்னிறுத்தி முஸ்லிம் சமூகத்தின் சாட்சிகள் முன்னிலையில் இது இடம்பெறுவதால் இது ஓர் இபாதாவாகவும் சமூக ஒப்பந்தமாகவும் அமைகின்றது.

திருமண ஒப்பந்தம் நிறைவேறப் பல சட்டதிட்டங்கள் காணப்படுகின்றன. அஜ்னபியான ஆண் பெண்களே ஒருவரை மற்றவர் நிகாஹ் செய்து கொள்ள அனுமதியுண்டு. எனவே மஹ்ரமாக இருப்போர் தமக்குள் விவாகம் செய்வது ஹராமாகும். இப்போது மஹ்ரம்களைப் பற்றி அவதானியுங்கள்.

### மஹ்ரம்

திருமணம் செய்ய அனுமதிக்கப்படாத கிட்டிய உறவு மஹ்ரம் எனப்படும். இது இரண்டு வகையாகப் பிரியும். அவையாவன

1. தற்காலிக மஹ்ரம்
2. நிரந்தர மஹ்ரம்

ஒரு குறிப்பிட்ட நபருக்குச் சில உறவு முறைப் பெண்களைத் திருமணம் முடிப்பதை இஸ்லாம் ஹராமாக்குகிறது. இந்த ஹராமான நிலை எக்காரணம் கொண்டும் நீங்காது நிரந்தரமாகவே இருக்கும். அதனையே முதலாவது வகை குறிக்கின்றது. நிரந்தர மஹ்ரம் மூன்று காரணங்களால் உருவாகின்றது.

1. இரத்த உறவு
2. திருமண உறவு
3. பால்குடி உறவு

**இரத்த உறவால் திருமணம் முடிக்க அனுமதிக்கப்படாதோர் வருமாறு.**

1. தாய், தாயின் தாய் இவ்வகையில் மேலுயர்ந்து செல்லும் உறவு முறையினர்.
2. பெற்றெடுத்த பிள்ளைகள், பிள்ளைகளின் பிள்ளைகள் இவ்வாறு கீழிறங்கிச் செல்லும் உறவு முறையினர்.
3. தனது சொந்தத் தாய் தந்தையினர் அல்லது அவர்களில் ஒருவரது பிள்ளைகள், அவர்களது பிள்ளைகளின் பிள்ளைகள் இவ்வாறு கீழிறங்கிச் செல்லும் உறவு முறையினர். அதாவது தனது சொந்தச் சகோதரிகளையும், அச் சகோதரிகளது பிள்ளைகளையும் இது குறிக்கிறது.

4. சொந்தப் பாட்டன், பாட்டியின் பிள்ளைகள். இது முதலாவது கட்டத்தோடு நின்றுவிடுகின்றது. அதாவது தாயின் அல்லது தந்தையின் சகோதரிகளைத் திருமணம் முடிப்பது கூடாது. ஆனால் அவர்களது பிள்ளைகளை திருமணம் முடிப்பது அனுமதிக்கப்படுகிறது.

### திருமண உறவால் மணம் முடிக்க அனுமதிக்கப்படாதோர்.

1. மனைவியைப் பெற்றெடுத்தோர், மனைவியின் தாய், தாயின் தாய் இவ்வாறு மேலுயர்ந்து செல்லும் உறவு முறையினர்.
2. உடலுறவு கொண்ட மனைவியின் பிள்ளைகள், மனைவியின் பிள்ளைகளின் பிள்ளைகள், இவ்வாறு கீழிறங்கிச் செல்லும் உறவு முறையினர்.
3. மகனின் மனைவி, தனது மகனது மகனின் மனைவி, மகளின் மகனது மனைவி, இந்த வகையில் தொடர்ந்து கீழிறங்கிச் செல்லும் உறவு முறையினர்.
4. தந்தையின் மனைவி

### பால்குடி காரணமாக திருமணம் முடிக்க அனுமதிக்கப்படாதோர்

சொந்த தாயல்லாத ஒரு பெண்ணிடம் பால் குடிப்பதனாலும் திருமண உறவு கொள்ள முடியாத நிலை உருவாகிறது. பால்குடி காரணமாக பின்வருவோர் திருமண உறவு கொள்ள அனுமதிக்கப்படாதோராவர்.

1. பால் கொடுத்த பெண்
2. பால் கொடுத்த பெண்ணின் தாய்
3. பால் கொடுத்த பெண்ணின் கணவனின் தாய்
4. பால் கொடுத்த பெண்ணின் சகோதரி
5. பால் கொடுத்த பெண்ணின் கணவனின் சகோதரி
6. பால் கொடுத்த பெண்ணின் கணவனின் பிள்ளைகளும், பிள்ளைகளின் பிள்ளைகளும்
7. ஒரு பெண்ணிடத்தில் பால் குடித்த வகையில் உறவாகும் சகோதரி

**பால்குடி முறையில் மஹ்ரமாவதற்குப் பின்வரும் நிபந்தனைகள் பூர்த்தியாக வேண்டும்.**

- இரண்டு வயதுக்குட்பட்ட குழந்தையாக இருந்த போது பால் குடித்தவராக இருத்தல்.
- மார்பகத்தில் வாயை வைத்துக் குடித்திருத்தல்.
- குறைந்தது ஐந்து மிடர் குடித்திருத்தல்.

## திருமணம் முடிப்பதற்குத் தற்காலிகமாகத் தடை செய்யப்பட்டோர்

1. ஏக காலத்தில் உடன் பிறந்த இரு சகோதரிகளை மனைவிகளாகக் கொள்ள முடியாது.
2. ஒரு பெண்ணையும் அவளது தந்தையின் சகோதரியையும் ஏக காலத்தில் மனைவியர்களாகக் கொள்ள முடியாது.
3. ஒரு பெண்ணையும் அவளது தாயின் சகோதரியையும் ஏக காலத்தில் மனைவியராகக் கொள்ள முடியாது.
4. திருமணம் முடித்த ஒரு பெண், ஒருவரின் மனைவியாக இருக்கும்வரை வேறொருவரைத் திருமணம் முடிக்க முடியாது.
5. மூன்று முறை தலாக் சொல்லப்பட்ட பெண், முதற் கணவனுக்குத் தற்காலிகமாகத் திருமணம் முடிக்க அனுமதிக்கப்படாதவளாவாள்.
6. முஷ்ரிக்கான பெண்ணைத் திருமணம் முடிக்க முடியாது.
7. விபச்சாரிகள் பாவ மன்னிப்புக் கேட்டு, அப்பாவச் செயலிலிருந்து முற்றிலும் நீங்கி தூய்மையடையும் வரை அவர்களை மணமுடிப்பது தற்காலிகமாகத் தடுக்கப்பட்டுள்ளது.

மணம் முடிக்க அனுமதிக்கப்பட்டோர் ''அஜ்னபிகள்'' எனவும் மணமுடிப்பதற்கு அனுமதிக்கப்படாதோர் '' மஹ்ரம்கள் '' என்றும் அழைக்கப்படுவர்.

### நிகாஹ் செல்லுபடியாவதற்குப் பின்வரும் அம்சங்கள் அவசியப்படுகின்றன. (பர்ளுகள்)

1. மணமகன் - மணமகள்
2. ஈஜாப் - கபூல்
3. வலி
4. சாட்சிகள்

திருமண ஒப்பந்தத்துக்குரிய வாசகங்கள் மற்றும் இந்நான்கு அம்சங்கள் தொடர்பாக சிறப்பு விதிகள் காணப்படுகின்றன.

**மணமகன்**

- முஸ்லிமாக இருத்தல்
- சமகாலத்தில் நான்கு பெண்களை மனைவியாக வைத்திராதவராக இருத்தல்
- மணப்பெண்ணுக்கு அஜ்னபியாக இருத்தல்
- ஹஜ்ஜுக்காக இஹ்ராம் தரிக்காதவராயிருத்தல்

**மணமகள்**

- முஸ்லிமாக அல்லது அஹ்லுல்கிதாபாக இருத்தல்
- மற்றொருவரது மனைவியாக இல்லாதிருத்தல்
- இத்தா அனுஷ்டிக்கும் நிலையில் இல்லாதவராயிருத்தல்
- ஹஜ்ஜுக்கு இஹ்ராம் தரிக்காதவராயிருத்தல்

**ஈஜாப் - ஒப்படைத்தல்**

மணப்பெண்ணை மணமகனிடம் கையளிப்பதைத் தெரிவிக்குமுகமாக மண மகளின் பொறுப்பாளரான ''வலி'' இனால் கூறப்படும் வாசகம் ஈஜாப் எனப்படும். ''அன்கஹ்துக'' ''ஸவ்வஜ்துக'' என்ற வாசகங்களைப் பயன்படுத்துவதே சிறப்பானது. எனினும் தாம் தெரிந்த மொழியிலும் ஈஜாப் கபூலை நிறைவேற்றலாம்;.

**கபூல் - ஏற்றுக்கொள்ளல்:**

வலி மூலம் ஒப்படைக்கப்பட்ட மணப்பெண்ணை தான் ஏற்றுக்கொண்டதாக மணமகனால் கூறப்படும் வாசகம் கபூல் ஆகும். ஈஜாப்-கபூல் ஆகிய இரண்டுக்கும் இடையே கால தாமதம் நிகழக்கூடாது.

**வலி:**

ஒருபெண் சுயமாகத் திருமணம் செய்து கொள்ள முடியாது.ஒருபெண்ணுக்கு மற்றொரு பெண் வலியாக இருந்து திருமணம் செய்து வைக்கவும் முடியாது. (இப்னு மாஜாஹ்)

வலிகாரனின் அனுமதியின்றி சுயமாகத் திருமணம் செய்துகொண்டவளின் திருமணம் செல்லுபடியற்றதாகிவிடும். ஆகவே ஒரு பெண்ணுக்குத் திருமணம் செய்து வைக்கும் உரிமை அவளது பொறுப்பாளரான வலிக்கே உரித்தானதாகும். வலியாக இருக்கப் பின்வருவோரே தகுதி பெறுவர்.

1. தந்தை
2. தந்தையின் தந்தை
3. உடன் பிறந்த சகோதரன்
4. தந்தை வழிச் சகோதரன்
5. உடன் பிறந்த சகோதரனின் மகன்
6. தந்தை வழிச் சகோதரனின் மகன்
7. தந்தையின் உடன் பிறந்த சகோதரன்(பெரியப்பா, சித்தப்பா)
8. தந்தையின் உடன் பிறந்த சகோதரனின் மகன் (பெரியப்பா, சித்தப்பா மக்கள்)
9. தந்தையின் தந்தை வழிச் சகோதரன்

10. தந்தையின் தந்தை வழிச் சகோதரனின் மகன்

11. பட்டனாரின் உடன் பிறந்த சகோதரன்

12. பாட்டனாரின் தந்தை வழிச் சகோதரன்

13. பாட்டனாரின் தந்தை வழிச் சகோதரர்களது ஆண்மக்கள்

14. நீதிபதி ( ஹாக்கிம்)

இவர்களுள் முன்னையவர் இல்லாதவிடத்து அல்லது தகுதி இழக்குமிடத்து அவ்வுரிமையை அடுத்தவர் பெறுவார். வலிகாரர்களுக்குரிய தகுதிகளாவன.

1. முஸ்லிமாயிருத்தல்
2. ஆணாயிருத்தல்
3. பருவமடைந்திருத்தல்
4. புத்தி சுவாதீனமாயிருத்தல்
5. சுதந்திரமுள்ளவனாயிருத்தல்
6. ஹஜ்ஜுக்கு இஹ்ராம் தரிக்காதவராயிருத்தல்

**சாட்சிகள் (ஷாஹித்)**

வலி காரரும் இரண்டு சாட்சிகளும் இல்லாத நிகாஹ் பாத்திலான (செல்லு படியற்ற) நிகாஹ் ஆகும்.

**ஷாஹிதாக வருபவருக்கான நிபந்தனைகளாவன :-**

மேலே குறிப்பிட்ட வலியின் நிபந்தனைகளுடன்

8) ஒப்பந்தம் நடைபெறும் மொழியை அறிந்திருத்தல்

9) பேச்சு, கேள்வி, பார்வை ஆகிய புலன்களைப் பெற்றிருத்தல்

மேலே குறிப்பிட்ட அம்சங்களுடன் வேறு பல சிறப்பமசங்களும் திருமணத்துடன் தொடர்புபடுகின்றன.

**மஹர்:**

திருமணத்தின்போது மணமகன் மணமகளுக்கு வழங்குகின்ற கட்டாய நன் கொடையே மஹர் ஆகும். இதனைக் கொடுப்பது வாஜிபாகும்.

''நீங்கள் (திருமணம் செய்து கொண்ட பெண்களுக்கு அவர்களுடைய மஹர்களை கண்ணியமான முறையில் கொடுத்துவிடுங்கள் (4 அன்னிஸா 5)

மஹரைப் பணமாகவோ பொருளாகவோ சொத்துக்களாகவோ சேவையாகவோ வழங்க முடியும். மஹர் குறிப்பிடாமல் திருமண ஒப்பந்தம் செய்வது மக்ரூஹ் ஆகும் என சில அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

**வலீமா:**

சந்தோஷமான ஒன்று நடந்துமுடிந்ததற்காக வழங்கப்படும் பொதுவான விருந்துக்கு வலீமா என்று சொல்லப்பட்டாலும் திருமணம் முடிந்து மணமக்கள் வீடுகூடிய பின்பு மணமகன் சார்பாக வழங்கப்படும் விருந்துக்கு வலீமா என்று கூறுவதே வழக்குச் சொல்லாக மாறிவிட்டது. வலீமா வழங்குவது ஸுன்னா முஅக்கதாவான ஒரு செயலாகும்.

மணமக்கள் மருவிய - வீடுகூடிய பின்பு வலீமா வழங்குவது சிறப்பாயினும் திருமண ஒப்பந்தம் நடந்த பின்பு வழங்குவதும் ஆகுமாகும். கணவனின் வசதிக்கேற்ப இதனை வழங்க முடியுமாயினும் ஆடம்பரம் வீண்விரயம் தவிர்த்து எளிமை பேணுவதே சிறப்பாகும். உறவினர், நண்பர், அயலவர், ஏழை, செல்வந்தர் என்ற பாகுபாடின்றி சகல தரப்பினரும் அழைக்கப்படுவதே சிறப்பாகும்.

திருமணம் தொடர்பான சட்டதிட்டங்களை அல் குர்ஆனும் ஸுன்னாவும் தெளிவாக விளக்கியுள்ளன. அவை கற்றுத் தருகின்ற போதனைகளின்படி அதனை நிறைவேற்றுகின்றபோது அல்லாஹ்வின் அருளும் நற்கூலியும் கிடைக்கின்றது.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

النِّكَاحُ ❖ السَّكَنُ ❖ الذُّرِّيَّةُ ❖ الْمُحْصَنُ ❖ الْمَحْرَمُ ❖ الإِيْجَابُ
القَبُوْلُ ❖ الْوَلِيُّ ❖ الشَّاهِدُ ❖ الأَجْنَبِيُّ ❖ أَهْلُ الْكِتَابِ ❖ أَنْكَحْتُكَ
زَوَّجْتُكَ ❖ الْمَهْرُ ❖ الْوَلِيْمَةُ

## பயிற்சி

1. திருமணத்தின் சிறப்புக்களை ஆதாரங்களுடன் விளக்குக.
2. திருமணத்தின் பயன்களைப் பட்டியற்படுத்துக.
3. திருமணம் செல்லுபடியாவதற்கான நிபந்தனைகளைச் சுருக்கமாக விளக்குக.
4. வலீமா - மஹர் ஆகிய பதங்களுக்கிடையிலான ஒற்றுமை வேற்றுமை களைக் குறிப்பிடுக.
5. நீர் அவதானித்த இன்றைய திருமணங்களில் இடம்பெறுகின்ற ஷரீஆவிற்கு முரணான அம்சங்களைப் பட்டியற்படுத்துக.

# 28

# முன்மாதிரி இஸ்லாமியக் குடும்பம்

وَمِنْ اٰيٰتِه أَنْ خَلَقَ لَكُمْ مِّنْ أَنْفُسِكُمْ أَزْوَاجًا لِّتَسْكُنُوْٓا إِلَيْهَا وَجَعَلَ بَيْنَكُمْ مَّوَدَّةً وَّرَحْمَةً إِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ

''நீங்கள் சேர்ந்து வாழக்கூடிய உங்கள் மனைவிகளை உங்களிலிருந்தே அவன் உற்பத்தி செய்து உங்களுக்கிடையில் அன்பையும் நேசத்தையும் உண்டு பண்ணியிருப்பது அவனுடைய அத்தாட்சிகளில் ஒன்றாகும். சிந்தித்து உணரக் கூடிய சமூகத்திற்கு நிச்சயமாக, இதில் (பல) அத்தாட்சிகள் இருக்கின்றன'' (30 அர்ரூம் 21)

மனித வாழ்வில் திருமணம் என்பது மிக முக்கிய அம்சமாகும். அது குடும்ப வாழ்விற்கான வித்தும் கூட. சிறந்த வித்துக்களே ஆழமாக வேர்விட்டு விருட்சமாய் மாறி நற்கனிகளைத் தருவது போல ஸாலிஹான ஆணினதும் பெண்ணினதும் இணைப்பின் மூலமே சிறந்த குடும்பமொன்று உருவாகி சிறந்த சமுதாய மொன்று தோன்றமுடியும். இதனாலேயே ஸாலிஹான ஒரு தம்பதியினரின் சட்டபூர்வமான இணைப்பை இஸ்லாம் இபாதத் ஆக ஆக்கியுள்ளது. அவ்விணைப்பு அல்லாஹ்வின் பெயரை முன்னிறுத்திச் செய்யப்பட்ட பலமானதாகவும் உறுதியானதாகவும் இருக்க வேண்டியதுபோல அன்பும் பாசமும் கருணையும் கலந்ததாகவும் இருக்க வேண்டுமென்று இஸ்லாம் எதிர்பார்க்கின்றது. இதனை பின்வரும் அல் குர்ஆன் வசனம் உறுதிபடுத்துகின்றது.

*''நீங்கள் சேர்ந்து வாழக்கூடிய உங்கள் மனைவிகளை உங்களிலிருந்தே அவன் உற்பத்தி செய்து உங்களுக்கிடையில் அன்பையும் நேசத்தையும் உண்டு பண்ணியிருப்பது அவனுடைய அத்தாட்சிகளில் ஒன்றாகும்.'' (30 அர்ரூம் :21)*

எனவே முன்மாதிரிமிக்க ஓர் இஸ்லாமியக் குடும்பம் மனதுக்கு நிம்மதி, சந்தோசம், அமைதி, கண்குளிர்ச்சி போன்றனவற்றைத் தரக்கூடியதாய் அமைய வேண்டும்.

*''எங்கள் இறைவனே! எங்கள் மனைவியர் மூலமும் எங்கள் சந்ததிகள் மூலமும் கண்குளிர்ச்சியை எமக்கு வழங்குவாயாக'' (25 அல்புர்கான் 74)* என்று பிரார்த்திக்குமாறு அல் குர்ஆன் எமக்குக் கற்றுத்தருகின்றது.

ஓர் இலட்சியவாத இஸ்லாமியக் குடும்பம் எப்போதும் சுவனத்தை இலக்காகக் கொண்டிருக்கும். நரகை விட்டும் தம்மைக் காத்துக் கொள்வதையே அடிப்படை அவதானமாகக் கொண்டிருக்கும்.

*''மூஃமின்களே உங்களையும் உங்கள் குடும்பத்தையும் நரகிலிருந்து காத்துக் கொள்ளுங்கள்''(66 அத்தஹ்ரீம் 6)* என்ற அல்குர்ஆனின் போதனையை ஏற்று அதற்காக உழைத்துக் கொண்டிருக்கும்.

''எவர்கள் மறுமை நாளில் தமக்கும் தமது குடும்பத்தாருக்கும் நஷ்டத்தை ஏற்படுத்திக் கொண்டனரோ அவர்கள் நஷ்டவாளர்களாவர். அறிந்து கொள்ளுங்கள் இதுவே தெளிவான நஷ்டமாகும் என நபியே நீர் கூறுவீராக'' *(39 அஸ்ஸுமர் 15)* என்ற எச்சரிக்கை வசனம் குறித்து விளிப்புடனிருக்கும் அதேவேளை தம்மையும் தம் குடும்பத்தையும் ஒழுங்குபடுத்திக் கொண்டு மறுமையில் தாம் அடைந்த வெற்றியின் பூரிப்பைப் பற்றி அல் குர்ஆன் பிரஸ்தாபிக்கும் வார்த்தைக்குச் சொந்தக்காரர்களாக இருப்பார்கள். அல் குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது:

*''நிச்சயமாக நாம் இதற்கு முன்னர் உலகில் எமது குடும்பத்தாருடன் இருக்கும் போது மறுமை குறித்து அஞ்சியவர்களாக இருந்தோம் என்று கூறுவார்கள் அல்லாஹ் எங்களுக்கு அருள்புரிந்து கொடிய வேதனையிலிருந்து நம்மையும் நம் குடும்பத்தையும் காப்பாற்றினான்.''(52 அத்தூர் 26-27)*

முன்மாதிரிமிக்க இஸ்லாமியக் குடும்பத்தின் தலைவர் தனது மனைவிக்கு சிறந்த கணவனாகவும், தனது பிள்ளைகளுக்கு முன்மாதிரிமிக்க தந்தையாகவும் திகழ்வார். அவர் வீட்டினுள் நுழையும் போதெல்லாம் தனது மனைவி பிள்ளைகளை முகமலர்ச்சியுடன் அணுகுவார். தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்துவார். இறை கட்டளைப்படி முகமன் கூறி எல்லோரையும் வாழ்த்துவார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைப் பார்த்துக் கூறினார்கள்:

''எனதருமை மகனே! நீ உனது குடும்பத்தாரிடம் சென்றால் ஸலாம் கூறிக் கொள். அது உனக்கும் உனது குடும்பத்திற்கும் அருளாகும்'' ஒரு மனிதன் தனது

குடும்பத்தை ஸலாம் கூறிச் சந்திப்பது பரக்கத் பொருந்திய காரியமாகும். அதுவே அவர்களது வாழ்வை மகிழ்ச்சியும் குதூகலமும் மிக்கதாக ஆக்கப் போதுமானதாகும்.

ஒரு நல்ல கணவன் தனது மனைவிக்கு எப்போதும் உதவிக் கரம் நீட்டுவார். வேலைப் பளு காரணமாக அவள் களைப்பும் சோர்வும் சஞ்சலமும் அடைந்திருந்தால் அவளுடன் இதமாகப் பேசி ஆறுதலும் ஆனந்தமும் அளிப்பார். தான் ஒரு சங்கைமிகு உயர்ந்த குணமுடைய கணவனின் நிழலில் இருக்கின்றேன் என்ற உணர்வை மனைவியின் உள்ளத்தில் எப்போதும் தோற்றுவிப்பவராக இருப்பார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது குடும்ப வாழ்வில் மனைவியருடன் கொண்டிருந்த நல்லுறவு, நகைச்சுவை போன்ற பண்புகளைப் பார்க்கின்றபோது எந்தளவு தூரம் அவர்கள் அன்பும் மிருதுவான குணமும் கொண்டவராக இருந்து முன்மாதிரியாக வாழ்ந்து காட்டினார்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. தன் மனைவி ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்களுடன் ஓட்டப் பந்தயத்தில் ஈடுபட்டார்கள். அன்னார் எப்போதும் தன் முன்னால் வைக்கப்பட்ட உணவையே சாப்பிட்டார்கள். வாழ்நாளில் ஒருபோதும் எந்த உணவையும் குறை கூறியதுமில்லை. மனைவியின் வீட்டு வேலைகளில் பங்கேற்று முன்மாதிரியாக வாழ்ந்து காட்டினார்கள்.

வெற்றிகரமான முன்மாதிரிமிக்க முஸ்லிம் குடும்பத்தின் தலைவனான கணவன் மார்க்கப் பற்றுள்ளவராக இருந்து இஸ்லாத்தின்பால் நேரிய வழி காட்டலை மனைவி பிள்ளைகளுக்கு வழங்கி , மிருதுவான குணத்துடன் நடந்து ஆன்மீக எழுச்சிக்கு வழிகாட்டுவார்.

''நபியே! உமது குடும்பத்தாருக்குத் தொழுகையைக் கொண்டு ஏவுவீராக. நீர் அதில் பொறுமையாகவும் இருப்பீராக''(20 தாஹா 132) என்ற அல்குர்ஆனின் கட்டளையை சிறப்பாக பின்பற்றுவார்கள்.

மேலும் மனைவியுடன் விவேகத்துடனும் அறிவுபூர்வமாகவும் அவளது உணர்வுகளுக்கு மதிப்பளித்தும் நடந்து கொள்வார். மனைவிக்கோ குடும்பத்திற்கோ எந்தவொரு தீங்கோ, அவப்பெயரோ வருவதிலிருந்தும் காத்துக் கொள்வார். மனைவி பிள்ளைகளை கண்ணியமாக நடத்தும் அவர் எப்போதும் மனைவி பிள்ளைகளின் குறைகளைக் கண்டால் அவற்றை செம்மைப்படுத்துவதில் கண்ணியத்துடனும் கனிவுடனும் நடந்து கொள்வார். மேலும் தனது பெற்றோர் மனைவி பிள்ளைகளிடையே சமநிலை பேணி நடந்து கொள்வார். எவருக்கும் அநீதி இழைக்கமாட்டார். பெற்றோரைச் சிறந்த முறையில் நடத்துவார். அவர்களுக்கு உபகாரம் செய்வார். அவர்களது கடமைகளை சிறப்பாக நிறைவேற்றுவார்.

இவ்வாறு சகல விடயங்களிலும் செம்மையாக நடந்து கொள்ளும் கணவன்; வீட்டின் தலைமைப் பொறுப்பைச் சிறப்பாக நிறைவேற்றுவதன் மூலம் மனைவி பிள்ளைகளின் இதயங்களில் ஆட்சி செலுத்துவார். அவர்களும் அவருக்குப் பணிந்து அவரது கட்டளைகளை ஆர்வத்தாடு நிறைவேற்றுவார்கள்.

*''(ஆண் பெண் இருபாலாரிலும்) ஆண் பாலாரை(ப் பெண்பாலார் மீது) அல்லாஹ் மேன்மையாக்கி வைத்திருப்பதுடன் (ஆண்பாலார்) தங்கள் பொருள் களை(ப் பெண் பாலாருக்கு)ச் செலவு செய்வதனாலும் ஆண்கள் தான் பெண்களை நிர்வகிக்கக் கூடியவர்களாக இருப்பார்கள்.''(4 அன்னிஸா 34)*

மேலும் இத்தகு இலட்சியக் குடும்பத்தில் அவரவர் கடமைகளை ஒவ்வொருவரும் பொறுப்புடன் நிறைவேற்றி வருவார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பின்வரும் கட்டளையே அவர்களது கடமையுணர்வுக்கு வழி காட்டும்.

''உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. நீங்கள் ஒவ்வொருவரும் அவரவர் பொறுப்புக் குறித்து மறுமையில் விசாரிக்கப்படுவீர்கள். ஆட்சித் தலைவரும் பொறுப்பாளரே அவர் தம் குடிமக்கள் குறித்து விசாரிக்கப்படுவார். குடும்பத் தலைவன் தன் மனைவி மக்களின் பொறுப்பாளன் ஆவான். அவன் தன் பொறுப்புக்குட்பட்டவர்கள் பற்றி விசாரிக்கப்படுவான். மனைவி தன் கணவனின் வீட்டுக்குப் பொறுப்பாளியாவாள். அவள் அந்தப் பொறுப்புக் குறித்து விசாரிக்கப்படுவாள். அறிந்து கொள்ளுங்கள் நீ ங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளர்களே, மேலும் நீங்கள் ஒவ்வொருவரும் விசாரிக்கப்படுவீர்கள்'' (புஹாரி)

மனைவியானவள் இறை திருப்தியை இலக்காகக் கொண்டு எப்போதும் கணவனுக்குக் கீழ்படிந்து அவரைத் திருப்திப்படுத்துவதை நோக்காகக் கொண்டி ருப்பாள்.

''கணவன் தன் மீது திருப்தி கொண்ட நிலையில் மரணமடையும் பெண் சுவனம் நுழைவாள்'' (இப்னு மாஜா) என்ற நபி மொழியை உள்ளத்திலிருத்தியவளாகத் தொழிற்படுவாள்.

மேலும் முன்மாதிரி முஸ்லிம் குடும்பத்தினர் அண்டை அயலவர் உறவுகளைச் சீராகப் பேணுவோராக இருப்பர். தமக்கு விரும்புவதையே தம் அயலாருக்கும் விரும்புவர். அவர்களுடன் மகிழ்ச்சியைப் பரிமாறிக் கொள்வர். துன்பங்களின் போது பரஸ்பரம் தேற்றிக் கொள்வர். குறைகளை மறைப்பர். அவர்களுக்கு எவ்விதத்திலும் இடையூறின்றி வாழ்வர். அவர்களுக்கு உபகாரம் செய்வதில் தாராளத் தன்மையோடு நடந்து கொள்வர்.

இக்குடும்பம் உலகில் மகிழ்ச்சியோடும் கண்ணியத்தோடும் வாழ்ந்து மறுமையில் குடும்பமாக சுவனம் நுழையும் என்பதில் சந்தேகமில்லை.

இங்கு பெற்றோர், பிள்ளைகளுடன் அன்புடன் நடந்து கொள்வார்கள். பெற்றோரின் அன்பையும் பாசத்தையும் உணரும் பிள்ளைகளே ஆரோக்கியத்துடனும் உறுதியுடனும் வளர்வார்கள் என்பதை புரிந்த பெற்றோர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவ்வாறு குழந்தைகள் மீது அன்பு காட்டினார்கள் என்பதை விளங்கி அதனைத் தாமும் முன்மாதிரியாகக் கொள்வார்கள். ''நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் மகள் பாத்திமா ரழியல்லாஹு அன்ஹா வந்தால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எழுந்து நின்று வரவேற்று முத்தமிடுவார்கள். அவரைத் தங்களது இருக்கையில் அமரச் செய்வார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பாத்திமா ரழியல்லாஹு அன்ஹா அவர்களிடம் சென்றால் அவர்கள் எழுந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மகிழ்வுடன் வரவேற்றுக் கரத்தைப் பிடித்து முத்தமிடுவார்கள். இன்னும் தங்கள் இருக்கையில் அமரச் செய்வார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மரணமடைவதற்கு முன் நோய் வாய்ப்பட்டிருந்த போது பாத்திமா ரழியல்லாஹு அன்ஹா வந்தார்கள். அப்போது நபி ஸல்லல்ராஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை வரவேற்று முத்தமிட்டார்கள்.'' (புஹாரி)

அன்பு செலுத்துவது போலவே குடும்பத்திற்குத் தாராளமாகச் செலவு செய்பவராக நல்ல தந்தை காணப்படுவார். அவர் ஒரு போதும் மனைவி பிள்ளைகளுக்குச் செலவு செய்வதில் கஞ்சத்தனம் காட்டமாட்டார். ''மனிதன் செலவிடும் தீனார்களில் மிகச் சிறந்தது தனது குடும்பத்தினருக்குச் செலவு செய்யும் தீனார் ஆகும்''(புஹாரி)

முன்மாதிரிமிக்க முஸ்லிம் குடும்பத்தில் பெற்றோர் தம் பிள்ளைகளுக்கு நற்கல்வியைப் பெற்றுக் கொள்ள வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுப்பதோடு தாமும் தொடர்ந்து கற்போராகவும் தம் மார்க்க அறிவையும் ஏனைய ஆற்றல்களையும் விருத்தி செய்து கொள்வோராகவும் இருப்பர். தம் பிள்ளைகளுக்குச் சீரான அறிவைப் பெற்றுக் கொடுக்க வழி செய்வதோடு அவர்கள் எவற்றைத் தேடிப்படிக்கின்றனர்; எவற்றை எழுதுகின்றனர் என்ற விடயத்தில் விழிப்பாக இருப்பதோடு நல்லவற்றையும் பயனுள்ளவற்றையும் கற்பதற்கும் தேடி ஆய்வதற்கும் தொடர்பூடகங்களை முறையாகப் பயன்படுத்துவதற்கும் வழிகாட்டுவார்.

இக்குடும்பத்தார் தமது உறவுகளைப் பெற்றோர் பிள்ளைகளுடன் சுருக்கிக்கொள்ளாமல் இரத்த பந்தங்களைப் பேணி உறவுகளைப் பலப் படுத்திப் பரஸ்பரம் உபகாரம் செய்து கொள்வதிலும் உதவிக் கொள்வதிலும் முன்மாதிரி மிக்கோராகத் திகழ்வர். சுவன வாழ்வையே இலக்காகக் கொண்டு வாழும்

இக்குடும்பத்தின் செயற்பாடுகளுக்கு பின்வரும் நபி மொழி முத்தாய்ப்பாய் அமைகின்றது.

''ஒரு மனிதர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே! என்னைச் சுவனத்தினுள் நுழையச் செய்யும் ஓர் அமலை எனக்கு அறிவியுங்கள் என்று கூறினார். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''நீர் அல்லாஹ்வை வணங்கி அவனுக்கு எந்த ஒன்றையும் இணை வைக்காதிருப்பது, தொழுகையை நிலைநாட்டுவது ஸக்காத்தைக் கொடுத்து வருவது மற்றும் இரத்த பந்தங்களோடு இணைந்திருப்பது என்று கூறினார்கள்.''; (புஹாரி) அடிப்படையான வணக்க வழிபாடுகளுடன் இணைத்துக் கூறப்பட்ட இரத்த உறவுகளைச் சேர்ந்து நடப்பதானது உணவிலும் ஆயுளிலும் அபிவிருத்தியை ஏற்படுத்தும் என்பதை மனதில் இருத்தியவர்களாக செயற்படுவர்.

### பயிற்சி

1. முன்மாதிரி முஸ்லிம் குடும்பத்தின் பெற்றோரது கடமைகள் ஐந்தைக் குறிப்பிடுக.
2. குடும்ப உறவு தொடர்பான அல் குர்ஆன் வசனம் ஒன்றையும் ஹதீஸ் ஒன்றையும் தருக.
3. 'முன்மாதிரி முஸ்லிம் குடும்பம்' என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று எழுதுக.

**29**

# தலாக்கும் இத்தாவும்

يَا أَيُّهَا النَّبِيُّ إِذَا طَلَّقْتُمُ النِّسَاءَ فَطَلِّقُوهُنَّ لِعِدَّتِهِنَّ وَأَحْصُوا الْعِدَّةَ وَاتَّقُوا اللَّهَ رَبَّكُمْ

''நபியே! நீங்கள் பெண்களைத் ''தலாக்'' சொல்வீர்களானால் அவர்களின் ''இத்தா''வைக் கணக்கிட ஏற்ற வகையில் (மாதவிடாய் அல்லாத காலங்களில்) தலாக் கூறுங்கள். உங்கள் இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்''

திருமணம் புனிதமான ஓர் ஒப்பந்தமாகும். அது நிலையாய்த் தொடர வேண்டும் என்பதற்காகவே தம்பதியர் பரஸ்பரம் நிறைவேற்ற வேண்டிய கடமைகளை, உரிமைகளை இஸ்லாம் மிகத் தெளிவாகப் போதித்துள்ளது. ஆயினும் தவிர்க்க முடியாத சூழ்நிலைகளில் விவாகரத்தை (விதிவிலக்காகப்) பயன்படுத்துவதற்கான அனுமதியை அது வழங்கியுள்ளது. திருமணத்தின் உன்னத இலக்குகளை எய்த முடியாத அளவிற்கு தம்பதியினரிடையே பிணக்குகள் தோன்றி அவற்றை சீர்செய்வதற்கான சகல முயற்சிகளும் தோல்வி கண்டதன் பின் இனிமேலும் அவர்கள் சேர்ந்து வாழ முடியாது. பிரிவதைத் தவிர வேறு வழி இல்லை என்றிருந்தால் அவர்கள் பிரிந்துவிடுவதற்கான அனுமதியை இஸ்லாம் வழங்குகிறது.

திருமண உறவு நிலைத்திருக்க வேண்டுமென்பதற்காகவே இஸ்லாம் திருமணத்திற்கு முன் பொருத்தம் பார்ப்பதையும் இருவரும் தங்களது விருப்பத்தை வெளிப்படுத்துவதையும் கட்டாயப்படுத்தியுள்ளது. மேலும் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டு நட்பும் தோழமையும் கொள்ள வேண்டுமென எதிர்பார்க்கின்றது. தத்தமது எதிர்பார்ப்புகள் கருத்துவேறுபாடுகள் விரும்பாத அம்சங்கள் போன்றவற்றை இருவரும் மனம் திறந்து பேசி, தெரியப்படுத்தி வாழ்வை நெறிப்படுத்திக் கொள்ள இஸ்லாம் வழிகாட்டுகிறது. தவிர மணமுறிவைத் தவிர்ந்து கொள்ளும்படியும் இஸ்லாம் அறிவுறுத்துகின்றது.

''அல்லாஹ் அனுமதித்தவற்றுள் அவனுக்கு மிகவும் வெறுப்பானது தலாக் ஆகும்'' (அபூ தாவூத்)

''ஷைத்தான் உலகில் செய்த அட்டூழியங்கள் பற்றி ஒவ்வொரு நாளும் இப்லீஸிடம் சென்று பிரஸ்தாபிப்பான். அதில் ஒருவன் இன்று நான் இந்தக் குடும்பத்தைப் பிரித்துவிட்டேன் என்று சொன்னதும் அதனையிட்டு இப்லீஸ் மிகவும் மகிழ்ச்சியுறுவான்'' (முஸ்லிம்)

விவாகரத்து என்பது ஒரு பாவச்செயல் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். அதனை விளையாட்டாக வேடிக்கையாகக் கூடச் செய்வதை இஸ்லாம் கண்டிக்கிறது.

''மூன்று விடயங்களை வேடிக்கையாகச் செய்தாலும் உண்மையாகவே செய்தாலும் அது உண்மையானது என்றே கொள்ளப்படும். அதில் ஒன்று தலாக் ஆகும்'' (திர்மிதி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இவ்வாறான எல்லா எச்சரிக்கைகளுக்கும் முன்னேற்பாடுகளுக்குப் பின்னரும் மணவாழ்வில் பிரச்சினைகள் தோன்றினால் அங்கு மணமுறிவு அனுமதிக்கப்படுகின்றது. அதனை எவ்வாறு செய்வது என்பதற்கும் வழிகாட்டுகிறது.

- கணவனும் மனைவியும் பிரச்சினைகளைத் தாங்களாகவே தீர்த்திட முயற்சிக்க வேண்டும்.
- அவ்வாறு தங்களுக்கிடையே தீர்த்துக் கொள்ள முடியாத போது கணவன் பக்கமிருந்து ஒருவரும் மனைவி பக்கமிருந்து ஒருவரும் சமரச முயற்சிகளை மேற்கொள்ள முன்வரவேண்டும்.
- இம்முயற்சிகள் யாவும் தோற்றுப் போனால் கனிவன்போடு தலாக்கை செய்வதற்கான ஏற்பாடுகளை முன்னெடுக்க வேண்டும். ''முறைப்படி அவர்களை மனைவியராக வைத்துக் கொள்ளலாம். அல்லது (அவர்கள் மீது யாதொரு குற்றமும் சுமத்தாமல்) அழகிய முறையில் (நன்றியுடன் கனிவன்புடன்) அவர்களை விட்டுவிடலாம். (2:229) என அல்குர்ஆன் கூறுகின்றது.

சட்ட அறிஞர்கள் விவாக விலக்கை மூன்று பிரதான பிரிவுகளாக வகுத்துள்ளனர்.

**1. தலாக்** **2. பஸ்கு** **3. குல்உ**

***1. தலாக்:***

கணவன் மனைவியை விவாக பந்தத்திலிருந்து விடுவிக்கும் முறை தலாக் ஆகும். மூன்றுமுறை தலாக் சொல்லும் உரிமை கணவனுக்கு உண்டு. ஆயினும் ஒரு தடவை மாத்திரம் சொல்வதே பாதுகாப்பானதும் புத்திசாலித்தனமானதுமாகும். ''உன்னை நான் தலாக் செய்துவிட்டேன்'' என்று கூறினால் அது ஒரு தலாக் ஆகும். இதனை எழுத்து மூலமாகவும் செய்யலாம். இதனை விளையாட்டாகச் சொன்னாலும் எழுதி அனுப்பினாலும் தலாக் நிறைவேறிவிடும்.

*2. பஸ்கு:*

இது விவாகம் செல்லுபடியற்றது என்பதைக் குறிக்கும். குறித்த ஒரு திருமணத்தின் நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்படவில்லை எனத் தெரிய வந்ததும் நிகாஹ் செல்லுபடியற்றதாகிவிடும். உதாரணமாகக் கணவனும் மனைவியும் மஹ்ரம் எனத் தெரிய வருவதைக் கூறலாம். அவ்வாறே திருமண உடன்படிக்கை நிலைத்திருப்பதைத் தடுக்கும் காரணம் நிகழ்வதன் மூலமும் பஸ்கு இடம்பெறலாம். உதாரணமாக தம்பதியருள் ஒருவர் மதம் மாறுதல். இவ்வேளையில் காரணம் தெளிவானதாயின் இருவரும் உடனே பிரிந்துவிட வேண்டும். குறித்த பிரச்சினையை வாதங்கள் மூலம் தெளிவுபடுத்த வேண்டுமாயின் காழியை அணுகி தீர்வினைப் பெற வேண்டும்.

*3. குல்உ:*

மனைவி கணவனிடமிருந்து விவாக விடுதலை கோரிப் பெறுவதையே இது குறிக்கும். இதன்போது அவள் கணவனுக்கு நன்கொடையாக எதையேனும் வழங்கியோ அல்லது கணவன் தந்த மஹரைத் திருப்பிக் கையளித்துவிட்டோ விவாக விடுதலையைப் பெற்றுக் கொள்ள முடியும். ஆயினும் இச் செயற்பாடுகள் காழி முன்னிலையிலேயே நிறைவேற்றப்பட வேண்டும்.

வேண்டாத மனைவியிடமிருந்து விடுதலை பெறுவதற்கு கணவனுக்குரிய உரிமையாகத் தலாக் இருப்பது போல, வேண்டாத கணவனிடமிருந்து விடுதலை பெறுவதற்கு மனைவிக்குரிய உரிமையாக குல்உ காணப்படுகின்றது.

**தலாக் சொல்லப்படும் முறை, சந்தர்ப்பம் ஆகியவற்றைக் கருத்திற் கொண்டு தலாக்கை இரு வகையாகப் பிரித்து நோக்கலாம்.**

1. முறையற்றது
2. முறையானது

*முறையற்றது (தலாக் பிதஈ):*

மூன்று தலாக்குகளையும் ஒரேமுறையில் சொல்லல் அல்லது மனைவி மாதவிலக்கில் இருக்கும்போது சொல்லல் அல்லது துஹ்ர் காலத்தில் உடலுறவு கொண்ட நிலையில் தலாக் சொல்லல்.

*முறையான தலாக் (தலாக் ஸுன்னி) :*

இவ்வகைத் தலாக் பின்வரும் நிபந்தனைகளுக்குற்பட்டிருத்தல் வேண்டும்.

1. பெண் சுத்தமாக இருக்கும் (துஹ்ர்) காலத்தில் சொல்லல்.
2. அக்காலத்தில் உடலுறவு கொள்ளாத நிலையில் சொல்லல்.
3. அடுத்த சுத்தமான காலத்தில் (துஹ்றில்) இரண்டாம் தலாக் சொல்லல்.
4. அதற்கடுத்த சுத்தமான காலத்தில் (துஹ்றில்) மூன்றாம் தலாக் சொல்லல்.

ஒன்று அல்லது இரண்டு தடவையுடன் நிறுத்திக் கொண்டாலும் முறையான தலாக் ஆகவே அமையும்.

''துஹ்ர்'' என்பது ஒரு பெண் மாதவிடாயை விட்டு நீங்கி சுத்தமாக இருக்கும் காலத்தைக் குறிக்கும்.




***தலாக் ரஜஈ (மீளத்தக்கது):***

இது நிரந்தரப் பிரிவினையை ஏற்படுத்தாத மீள இணைந்து வாழ வாய்ப்புள்ள தலாக் ஆகும். முதலாம் அல்லது இரண்டாம் தலாக் சொல்லப்பட்டுப் பிரிந்த மனைவியை இத்தாக் காலம் முடிவதற்குள் மீட்டிக் கொள்வதையே இது குறிக்கும்.

***தலாக் பாஇன் (மீள முடியாதது) :***

இது இரு வகைப்படும். முறையான தலாக்கின்போது மூன்றாம் தலாக் சொல்லப்படாத நிலையில் இத்தாக் காலம் பூர்த்தியாகிவிடுமானால் புதியதோர் நிகாஹ் ஒப்பந்தத்தின் மூலம் தம்பதிகள் மீண்டும் இணைந்து வாழ அனுமதியுண்டு இது ***பைனூனதுஸ் ஸுக்ரா'' (சிறிய பிரிவினை)*** எனப்படும்.

மூன்று தலாக்கும் முடிவுற்றால் பிரிவினை மிகத் தெளிவானதாகிவிடும்.இது **பைனூனதுல் குப்ரா (பெரிய பிரிவினை)** ஆகும். இச் சந்தர்ப்பத்தில் இருவரும் மீண்டும் சேர்ந்து வாழ விரும்பினால் அவளை வேறு ஒருவர் மணமுடித்து அவன் மூன்று தலாக்குகளையும் சொல்லி அதற்கான இத்தாவையும் அவள் அனுஷ்டித்து அதிலிருந்து நீங்கிய பின்னர் முன்னைய கணவனுடன் மற்றொரு புதிய நிகாஹின் அடிப்படையில் இணைவதாகும்.

தலாக் தொடர்பாகக் கணவன் பாவிக்கும் வார்த்தைகள் மற்றும் அவன் நடந்துகொள்ளும் முறையைக் கவனத்திற் கொண்டு தலாக் வேறு பெயர்களாலும் அழைக்கப்படுவதுண்டு. அவையாவன:

- ழிஹார்
- லிஆன்
- ஈலாஉ

*ழிஹார்* என்பது ஒருவன் தனது மனைவியை உடல் ரீதியாகத் தனது தாய்க்கு ஒப்பிடுவதைக் குறிக்கும். இவ்வாறு ஒப்பிட்டமைக்காகக் குற்றப்பரிகாரம் - கப்பாரா நிறைவேற்றி மீண்டும் இணையலாம். இன்றேல் தலாக் நிகழ்ந்து விடும்.

*லிஆன்* என்பது ஒருவர் தன் மனைவி மீது விபச்சாரக் குற்றம் சுமத்தி சத்தியம் செய்து இறுதியில் பிரிவதாகும்.

*ஈலாஉ* என்பது ஒருவன் தன் மனைவியை விளித்து ''அல்லாஹ் மீது ஆணையாக நான் உன்னுடன் உடலுறவு கொள்வதில்லை'' என சத்தியமிடுவதைக் குறிக்கும். இவ்வாறு சொன்னவருக்கு நான்கு மாத காலம் தவணையுண்டு. அதற்குள் அவர்கள் மீண்டும் இணைந்து கொள்ள முடியும். இன்றேல் தலாக் நிகழ்ந்து விடும்.

இவை தொடர்பாக விரிவான சட்டதிட்டங்கள் காணப்படுகின்றன.

## இத்தா

இத்தா என்ற சொல்லுக்குக் ''கணக்கிடல்'', ''கணித்தல்'' என்று பொருள்படும். மூன்று மாதம் என்றோ அல்லது நான்கு மாதம் பத்து நாட்கள் என்றோ எண்ணிக்கையால் இத்தாவின் காலம் எண்ணப்படுவதால் இதற்கு இப்பெயர் சூட்டப்பட்டுள்ளது. இஸ்லாமியக் கண்ணோட்டத்தில் கணவனை இழந்த பெண் அல்லது தலாக் சொல்லப்பட்ட பெண் குறிப்பிட்ட காலம் பிரத்தியேகமான சில நியதிகளுக்குக் கட்டுப்பட்டு இருப்பதையே இது குறிக்கின்றது.

இத்தா இறை கட்டளையாகும். அதனை நிறைவேற்றுவது இபாதத் ஆகும். இத்தா பல நன்மைகளைத் தருகின்றது.

1. இறை கட்டளை என்ற வகையில் நன்மை கிடைக்கின்றது.
2. பெண் கர்ப்பம் தரித்திருப்பின் அதனை அறிந்து கணவனை நிச்சயித்துக் கொள்ள வாய்ப்பாகின்றது.
3. தலாக் ரஜஈ ஆயின் மீண்டும் சேர்ந்து வாழ்வதற்கான அவகாசம் கிடைக்கின்றது.

இத்தா அனுஷ்டிக்கும் பெண்ணின் நிலைமைக்கேற்ப அதற்குரிய காலம் வேறுபடுவது போல அனுஷ்டிக்கும் காரணத்திற்கேற்பவும் அதற்குரிய காலம் வேறுபடுகின்றது. ஆயினும் திருமணம் செய்த பெண்ணுடன் வீடு கூடுவதற்கு முன்னரே அவளைத் தலாக் செய்தால் அவள் இத்தா இருக்க வேண்டிய அவசியமில்லை.

### 1. கணவனின் மரணத்திற்கான இத்தா:

கணவன் மரணித்தால் அவருடைய எல்லா மனைவியரும் இத்தா அனுஷ்டிப்பது கடமையாகின்றது. பருவம், வயது வேறுபாடின்றி அனைவரும் நான்கு மாதங்களும்

பத்து நாட்கள் இத்தா அனுஷ்டிக்க வேண்டும். *''உங்களில் எவரேனும் மனைவியை விட்டு மரணித்தால் அம்மனைவியர் நான்கு மாதம் பத்து நாட்கள் இத்தா அனுஷ்டிக்கட்டும். (2 அல் பகறா 234)*

***2. கர்ப்பிணியின் இத்தா:***

கணவன் மரணிக்கும்போது மனைவி கர்ப்பிணியாக இருந்தால் அவளது இத்தாக் காலம் பிரசவம் நிகழும் வரையிலாகும். *''...கர்ப்பிணியான பெண்களுக்கு அவர்களுடைய (இத்தாவின்) தவணை அவர்கள் பிரசவிக்கும் வரையிலாகும்...'' (65 அத்தலாக் 4)*

***3. தலாக் ரஜஈக்கான இத்தா:***

முதாலாம் அல்லது இரண்டாம் தலாக் சொல்லப்பட்ட பெண்கள் இத்தா அனுஷ்டிக்க வேண்டும் *''தலாக் கூறப்பட்ட பெண்கள் மூன்று மாதவிடாய் வரும் வரை காத்திருங்கள். (2 அல் பகறா 228)*

இத்தாக் காலத்தில் பெண் அலங்காரங்கள் ஒப்பனைகளிலிருந்து தவிர்ந்திருத்தல் வேண்டும். இது ''இஹ்தாத்'' எனப்படுகிறது. பொதுவாக இத்தாக் காலத்தில் திருமணம் முடிப்பதோ அல்லது திருமணப் பேச்சு வார்த்தைகளில் ஈடுபடுவதோ கூடாது. அவ்வாறே ஆபரணங்களையும் தவிர்த்திருத்தல் வேண்டும். கணவனுடைய வீட்டிலேயே இத்தா இருப்பது சிறப்பாகும். இத்தா அனுஷ்டிக்கும் மனைவிக்கான தாபரிப்புச் செலவை (நபகா) வழங்குவது தலாக் சொன்ன கணவன் மீது கடமையாகும்.

மேற்கூறப்பட்டவற்றிலிருந்து தலாக், இத்தா பற்றித் தெளிவான வரையறைகளை இஸ்லாம் முன்வைத்துள்ளதை அறிய முடிகிறது. இஸ்லாத்தில் குடும்பவாழ்வு முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக இருப்பதால், இது சிதையாதிருப்பதற்கான சீரமைக்கப்பட்ட ஒழுங்கொன்றாகவே இதனைக் கண்டுகொள்ளலாம்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

۞ الطَّلَاقُ والعِدَّةُ ۞ الوَاجِبُ ۞ السُنَّةُ ۞ الحَرَامُ ۞ المُبَاحُ ۞ الفَسْخُ ۞ الخُلْعُ ۞
الطَّلَاقُ البِدَعِيُّ ۞ الطَلَاقُ السُّنِّيُّ ۞ الطَّلَاقُ الرَّجَعِيُّ ۞ الطَّلَاقُ البَائِنُ ۞ الصُّغْرَى
۞ الكُبْرَى ۞ الطُّهْرُ ۞ الظِّهَارُ ۞ اللِّعَانُ ۞ الإِيْلاءُ ۞ الإِحْدَادُ ۞ النَّفَقَةُ

## பயிற்சி

*1.* பின்வரும் பதங்களை விளக்குக.

★ தலாக் ★ பஸ்கு ★ குல்உ

*2.* இஸ்லாம் தலாக்கை எவ்வாறான சந்தர்ப்பங்களில் அனுமதித்துள்ளது?

*3.* தலாக் நிகழ்வதைத் தவிர்க்க இஸ்லாம் கூறும் வழிமுறைகள் யாவை?

*4.* இத்தாவின் போது பேணவேண்டிய ஒழுங்குகள் யாவை?

*5.* இத்தாவின் பயன்கள் யாவை?

# 30

# உலக வாழ்வு பற்றிய இஸ்லாமியக் கண்ணோட்டம்

هُوَ الَّذِىْ جَعَلَ لَكُمُ الْأَرْضَ ذَلُوْلًا فَامْشُوْا فِىْ مَنَاكِبِهَا وَكُلُوْا مِنْ رِّزْقِهِ وَإِلَيْهِ النُّشُوْرُ

அவனே உங்களுக்கு இப்பூமியை (நீங்கள் வாழ்வதற்கு) வசதியாக ஆக்கினான். ஆகவே, அதன் பல மருங்குகளிலும், நடந்து அவனுடைய உணவிலிருந்து புசியுங்கள்; இன்னும் அவனிடமே (யாவரும்) உயிர்த்தெழவேண்டியிருக்கிறது. (67அல் முல்க் 15)

உலக வாழ்வு பற்றிய இஸ்லாத்தின் தெளிந்த பார்வையை ஒரு முஸ்லிம் பெற்றிருப்பது இன்றியமையாததாகும். ஏனெனில் அது அவனது உலக வாழ்வை நெறிப்படுத்தி மறுமை வாழ்வின் விமோசனத்திற்கு வழி காட்டுகிறது. உலக வாழ்வு பற்றிய பிழையான புரிதல்கள் எப்போதும் ஒரு முஸ்லிமின் இலட்சிய வாழ்விற்குத் தடையாகவே அமைந்துவிடும்.

பொதுவாக உலக வாழ்வு பற்றி மனிதர்களிடையே காணப்படுகின்ற பல்வேறு கண்ணோக்குகளை அடிப்படையாக வைத்தே அவனது செயற்பாடுகளும் அமை கின்றன. உலகை முற்றாகத் துறந்து வாழவேண்டும் அதுவே விமோசனத்திற்கு வழி எனக் கருதுவோரும் உள்ளனர். இல்லை; உலக வாழ்வு நமக்கு வழங்கப்பட்ட ஒரே யொரு சந்தர்ப்பம் அது மீண்டு வரமாட்டாது ஆகவே கிடைத்த இச்சந்தர்ப்பத்தை நாம் முழுமையாக அனுபவித்திட வேண்டும். அதனைப் புறக்கணிப்பதும் அதிலிருந்து ஒதுங்கி வாழ்வதும் மடமையானது என்று கருதுவோரும் உள்ளனர்.

இஸ்லாம் இவ்விரண்டிற்கும் இடையில் மத்திமமான ஒரு கருத்தை முன்வைக் கின்றது. அது உலக வாழ்வைத் துறக்கவும் கூடாது, அதில் மூழ்கிவிடவும் கூடாது. மேலும் உலக வாழ்வு, மறுமை வாழ்வு எனப் பிரித்து நோக்கவும் கூடாது, மறுமை

வாழ்வின் விமோசனமே அவனது அடிப்படை இலக்காக இருந்தாலும் இம்மை வாழ்வின் முன்னேற்றத்திற்காக உழைப்பதை அது தடுக்கவில்லை. மாற்றமாக அதனை ஓர் இபாதத் என்றே கருதுகின்றது. ஆதலால் இவ்வுலகை வளப்படுத்துவதும் அதற் காகத் தன் அறிவைப் பயன்படுத்தி விவசாய, விஞ்ஞான, கைத்தொழில், கண்டுபிடிப்பு முயற்சிகளில் ஈடுபட்டு உழைப்பதும் நற்பணிகளைச் சார்ந்ததாகும். அது மனிதன் மீது சுமத்தப்பட்ட மூன்று பெரும் பணிகளில் ஒன்றான ''இமாரத்'' பணியைச் சார்ந்ததாகும். உலகைத் துறந்து ஒரு முஸ்லிம் வாழமுடியாது,அவ்வாறு வாழவும் கூடாது என்பதையே இது எடுத்துக்காட்டுகின்றது.

இதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலத்தில் நடந்த ஒரு நிகழ்வை உதாரணமாகக் கொள்ளலாம். உலக வாழ்வையும் அதன் இன்பங்களையும் முற்றாகத் துறந்து முழுமையாகத் தம்மை வணக்க வழிபாடுகளில் மாத்திரம் ஈடுபடுத்திக் கொள்வதாக மூன்று ஸஹாபாக்கள் கருத்துக்கொண்டனர். ''இரவில் தொடர்ந்து நான் நின்று வணங்கப் போகின்றேன்'' என்று முதலாமவரும் ''காலமெல்லாம் நான் நோன்பு நோற்கப் போகின்றேன்'' என்று இரண்டாமவரும் ''நானோ தொடர்ந்து மனைவியை விட்டும் ஒதுங்கி வாழப் போகின்றேன்'' என்று மூன்றாமவரும் கூறியபோது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''உங்களில் அல்லாஹ்வை மிகவும் அஞ்சி நடப்பவனாகிய நானோ இரவில் நித்திரை செய்கின்றேன். வணக்கமும் புரிகின்றேன் ஸுன்னத்தான நோன்பு நோற்கின்றேன் நோற்காமலும் இருக்கின்றேன் மணவாழ்விலும் ஈடுபடுகின்றேன்'' *(புஹாரி)* என்று உபதேசித்துவிட்டு ''எனது வழிமுறையைப் புறக்கணிப்பவர் என்னைச் சேர்ந்தவரல்ல'' எனவும் எச்சரித்தமை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காட்டிய முன்மாதிரிகளுக்கு உயர்ந்த சான்றுகளாகும்.மேலும் உலகைத் துறந்து வாழ்வதைக் கண்டித்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''துறவறம் இஸ்லாத்தில் இல்லை'' *(அஹ்மத்)* எனவும் கூறியுள்ளார்கள்.

உலக வாழ்வு பற்றிய அல்குர்ஆனின் போதனைகளைத் தெளிவாகவும் முழுமை யாகவும் விளங்கிக் கொள்வதினூடாகவே உலக வாழ்வுக்கும் மறுமை வாழ்விற்கு மிடையில் சமநிலைத் தன்மையை ஏற்படுத்திக் கொள்ள முடியும்.

அல் குர்ஆனின் சில வசனங்களை மாத்திரம் நோக்கினால் அவை இந்த உலக வாழ்வு அற்பமானது, ஏமாற்றிவிடக்கூடியது, மாயையானது, மறுமை வாழ்வை பாழ்படுத்திவிடக்கூடியது, சோதனைக்குரியது போன்ற கருத்துக்களைத் தருகின்றன. உதாரணமாக:

*''இந்த உலக வாழ்வு வேடிக்கையும் வீண் விளையாட்டுமாகும். நிச்சயமாக மறுமை வாழ்வே நிலையானது'' (6 அல் அன்ஆம் 32)*

*''செல்வமும் பிள்ளைகளும் இவ்வுலக வாழ்க்கைக்குரிய அலங்காரங்களே (அன்றி நிலையானவையல்ல) (18 அல் கஹ்ஃபு 46)*

*உங்களுடைய பொருள்களும் உங்களுடைய சந்ததிகளும் ஒரு சோ தனையாகவே உள்ளன.(64 அத்தகாபுன் 15)*

மற்றும் சில வசனங்களை நோக்கும்போது அவை இவ்வுலக வாழ்வு பெறுமதி யானது, உலகம் மனிதனுக்கு வசப்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளது, எனவே அவற் றைப் புறக்கணிக்கக் கூடாது போன்ற கருத்துக்களைத் தருகின்றன. எடுத்துக்காட்டாக

''அவன் தான் உங்களுக்குப் பூமியை (நீங்கள் வசிப்பதற்கு) வசதியாக ஆக்கி வைத்தான். ஆகவே அதன் பல கோணங்களிலும் சென்று அவன் (உங்களுக்கு) அளித்திருப்பவைகளைப் புசித்துக் கொண்டிருங்கள்'' (67 அல்முல்க் 15)

''குதிரைகள் கோவேறு கழுதைகள் ஆகியவற்றை நீங்கள் ஏறிச் செல்வதற்காகவும் (உங்களுக்கு) அலங்காரமாகவும் (அவன் படைத்திருக்கின்றான்) (16 அந்நஹ்ல் 80)

இவ்விரு வகையான வசனங்களிலிருந்தும் நாம் தெளிந்த ஒரு முடிவினைப் பெறவேண்டியுள்ளது. அதாவது மறுமையின் நிலையான, இன்பமான வாழ்வோடு இவ்வுலக வாழ்வை ஒப்புநோக்கினால் உண்மையில் இவ்வுலக வாழ்வு அற்ப மானதுதான். ஆனால், மறுமை வாழ்வின் வெற்றிக்கு வழியாக இவ்வுலகைப் பார்த்தால், இவ்வுலகைப் பயன்படுத்தியே மறுமையில் விமோசனம் பெறமுடியும். இதைப் புறக்கணித்துவிட்டு அல்லது துறந்துவிட்டு மறுமையில் வெற்றி பெற முடியாது என்ற வகையில் இவ்வுலக வாழ்வு முக்கியமானது என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது.

இவ்வுலக வாழ்வு பற்றிய மிகச் சரியான புரிதலுக்கு அல் குர்ஆன் கற்றுத் தருகின்ற ஒரு பிரார்தனை துணைநிற்கின்றது. ''எங்கள் இறைவனே! (எங்களுக்கு வேண்டியவற்றை) உலகிலேயே தந்து விடுவாயாக!'' என்று கோருவோரும் மனிதர் களில் உள்ளனர். ஆனால் இத்தகையோருக்கு மறுமையில் எத்தகைய பாக்கியமும் இல்லை. மேலும் ''எங்கள் இறைவனே! எங்களுக்கு நீ இம்மையிலும் நன்மை அளிப்பாயாக! மறுமையிலும் நன்மை அளிப்பாயாக! நரக நெருப்பின் வேதனை யிலிருந்தும் எங்களை நீ காப்பாற்றுவாயாக!'' (2 அல் பகறா 201) என்று கோருவோரும் மனிதர்களில் உள்ளனர்.

எப்போதும் மனிதர்களில் இரு பிரிவினரைக் காண முடியும். அவர்களில் ஒரு பிரிவினரின் முழுக்கவனமும் உலகிலேயே இருக்கும். உலக இலாபங்களையும் அதன் இன்பங்களையும் அடைவதிலேயே இவர்கள் கண்ணும்கருத்துமாக இருப்பார்கள். அவர்களது பிரார்த்தனைகள்கூட எப்போதும் உலக இன்பங்களையும் வசதிகளையும் அடைவதனையே நோக்காகக் கொண்டிருக்கும். அவர்கள் ''எங்கள் இறைவனே எங்களுக்கு எல்லாவற்றையும் உலகில் தந்து விடுவாயாக'' என்றே பிரார்த்திப்பார்கள். மனிதர்களில் இப்பிரிவினர் அன்று போலவே இன்றும் உலகில் காணப்படுகின்றனர். உலகமே அவர்களது முழுக்கவனமும் ஆகும். உலக வசதிகளைப் பெற்றுக் கொள்வதிலும் இன்பங்களை அடைந்து கொள்வதிலும் வாழ்க்கை வசதிகளைத் திரட்டிக் கொள்வதிலுமே அவர்களின் கவனம் குவிந்திருக்கும். அல்லாஹ்வைப் பிரார்த்திக்கின்ற போது கூட அவர்கள் உலகையே கேட்கின்றனர். அல்லாஹ் இவர்களின் பங்கை உலகில் கொடுத்துவிட முடியும். ஆனால் மறுமையில் இவர்கள் எத்தகைய பாக்கியங்களையும் பெற மாட்டார்கள்.

மனிதர்களில் உள்ள அடுத்த பிரிவினர் உலக வாழ்வு பற்றி விரிந்த நோக்கும், பரந்த உள்ளமும், தெளிந்த பார்வையும் பெற்றவர்கள். அவர்கள் இவ்வுலக வாழ்வின் நன்மையை எதிர்பார்த்தாலும் மறுமையையும் அதன் பாக்கியங்களையும் மறக்க மாட்டார்கள். அவர்கள் எப்போதும் அல்லாஹ்விடம் ஈருலக நன்மைகளையே வேண்டுவார்கள்.

எனவே ஒரு முஸ்லிமுக்கு இம்மை, மறுமை ஆகிய இரண்டு வாழ்வும் முக்கியமானவை அவை இரண்டையும் கருத்திற் கொண்டே செயற்பட வேண்டும்.

உலக வாழ்வை மாத்திரம் இலக்காகக் கொண்டோரை அல் குர்ஆன் இகழ்கின்றது. உலகையும் மறுமை வாழ்வையும் இணைத்துப் பார்ப்போரை அது புகழ்கின்றது. இவை இரண்டையும் தவிர மறுமையை மட்டும் எதிர்பார்த்து துறவறத்தை நாடும் ஒரு குழுவை அல்லாஹ் விரும்பவில்லை. அவ்வாறு வாழ்வதும் நடைமுறைச் சாத்தியமற்றது.

எனவே இவ்வுலக வாழ்வு பற்றிய மிகச் சரியான இஸ்லாமியக் கண்ணோக்கைப் புரிந்து மறுமை வாழ்வின் ஈடேற்றத்திற்கான வழியாக இவ்வுலக வாழ்வை அமைத்து ஈருலகிலும் வெற்றிபெற அல்லாஹ் அருள்புரிவானாக.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

❁ العِبادَةُ ❁ العِمَارَةُ ❁ الخِلَافَةُ

**பயிற்சி**

1. இவ்வுலக வாழ்வு பற்றிய ஒரு முஸ்லிமின் நோக்கு எவ்வாறு அமைய வேண்டும்?
2. உலகப் பொருட்கள் பற்றிய அல்குர்ஆனின் நோக்கினை தர்ஜுமதுல் குர்ஆனின் துணையோடு தேடி எழுதுக.
3. உலக வாழ்வு, மறுமை வாழ்வு குறித்து எவ்வாறு ஒரு முஸ்லிம் அல்லாஹ்விடம் பிரார்த்திக்க வேண்டும்?

# 31

# இஸ்லாமும் தொடர்பூடகங்களும்

وَأَنْذِرْ عَشِيْرَتَكَ الْأَقْرَبِيْنَ

**இன்னும், உம்முடைய நெருங்கிய உறவினர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்வீராக! (26 அஷ்ஷுஅரா 214)**

இன்றைய உலகில் பலமும் செல்வாக்கும் மிக்க ஒரு சக்தியாக தொடர்பூடகங்கள் காணப்படுகின்றன. அவற்றின் புரட்சிகரமான வீச்சை மட்டிட முடியாதுள்ளது. அவை இன்று அனுமதியின்றியே வீடுகளுக்குள் நுழையவும் முன்னறிவிப்பின்றியே செவிகளை அடையவும் சக்தி பெற்றுள்ளன. அறிவூட்டுவதில், உணர்ச்சிகளைத் தூண்டுவதில் அவற்றிற்குப் பாரிய பங்குண்டு. அவை பல்வேறு வடிவங்களில் வழக்கில் வந்துள்ளன. அதுமட்டுமன்றி நாளுக்கு நாள் புது வடிவங்களையும் பெற்றுவிடுகின்றன. ஊடகங்களின் செறிந்த பங்களிப்பினால் செய்திப் பரிமாற்றம், தகவல் தொடர்பு வணிகவியல், இன்பியல், நுகர்வியல் போன்ற அனைத்திலும் விருத்தியும் மாற்றமும் ஏற்படுகின்றன.



மனிதனின் தொடர்பாடல் தேவையை நிவர்த்திக்கவே ஊடகங்கள் அறிமுகமாயின. ஆரம்பத்தில் மனிதன் தனது கருத்தை மற்றொருவருக்கு வெளிப்படுத்துவதற்குச் செய்கை, முகக்குறி, ஒலிக்குறி, அடையாளக்குறி, பேச்சு, எழுத்து போன்ற வடிவங்களைப் பயன்படுத்தினான். அவற்றின் பரிணாமமாகவே இன்று பல்வேறு வடிவங்களில் ஊடகங்கள் தோன்றியிருக்கின்றன. அச்சு ஊடகங்கள்,

இலத்திரனியல் ஊடகங்கள், சமூக ஊடகங்கள் என அவை வகைப்படுத்தி நோக்கப் படுகின்றன. ஆதலால் தொடர்பூடகங்கள் பற்றிய இஸ்லாத்தின் கண்ணோட்டத்தை விளங்கிக் கொள்வது அவசியமாகும்.

இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்களான அல்குர்ஆன், ஸுன்னா ஆகிய இரண்டும் முழு மனித சமூகத்துக்கும் வழிகாட்டும் மிகவும் பழமை வாய்ந்த தொடர்பூடகங்களாகும்.



நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்குர்ஆனையே தனது பிரதான ஊடகமாக - ஆயுதமாக பயன்படுத்தினார்கள். இப்படிச் செய்யும்படிதான் அல்லாஹ்வும் அவர்களுக்குக் கட்டளையிட்டான்.

''... நபியே நீர் அதனை (அந்தக் குர்ஆனை) ஊடகமாகக் கொண்டு அவர்களுக்கெதிராக பெரும் யுத்தமொன்றைச் செய்வீராக.'' (25 புர்கான் 52)

எனவே அல்குர்ஆன் ஓர் அற்புதமான இலக்கியம்சார் ஊடகமாகும். பெரும் கவிஞர்கள், இலக்கியவாதிகள்கூட அதன் மொழிநடைக்கு முன்னால் மௌனித்துப் போயினர். அதன் வசீகர சக்தியால் கட்டுண்டுபோய் மெய்மறந்தனர். ஆத்மாக்களைத் தொட்டு உலுப்பிவிடும் அதன் சக்தியைக் கண்ட எதிரிகள், இவ்வூடகத்திற்கு எதிராக சிந்தனாரீதியான போராட்டமொன்றையே வரலாற்றில் முடக்கவிட்டனர்.

''இந்தக் குர்ஆனுக்கு நீங்கள் கவனத்தை செலுத்தாமல் வேறு விடயங்களில் கவனமாக இருங்கள்'' என காபிர்கள் பிரசாரம் செய்தனர். நள்ர் இப்னு ஹாரித் என்பவர் ஒரு பாடகியை விலைகொடுத்து வாங்கினார். இஸ்லாத்தைத் தழுவ விருப்பம் கொண்டோரைத் தேடிப்பிடித்து அவர்களை அந்தப் பாடகியிடம் அழைத்துச் சென்று ''பெண்ணே! இவர்களுக்குச் சாப்பாடு கொடு. தண்ணீர் புகட்டு. பாடல்களை இசைத்துக்காட்டு'' என்று கூறிவிட்டு, ''மனிதா! முஹம்மத் உங்களைத் தொழுகை, நோன்பு, வீர மரணப் போராட்டம் என்பவற்றில் பங்குகொள்ள அழைக்கிறாரே

அவற்றைவிட இது உங்களுக்கு நல்லது'' எனக் கூறினார்.



இந்தச் சூழ்நிலையில்தான் *''மனிதரில் பலர் இருக்கிறார்கள். அவர்கள் (பொய்யான கட்டுக் கதைகள் முதலிய) வீணான விடயங்களை விலைக்குவாங்கி (அவற்றை மக்களிடம் ஓதிக் காண்பித்து) அல்லாஹ்வுடைய வழியில் இருந்து எவ்வித அறிவுமின்றி மக்களை வழிகெடுத்து அதனைப் பரிகாசமாகவும் எடுத்துக் கொள்கின்றனர் (31 லுக்மான் 6)* என்ற வசனம் இறங்கியது.

ஆனால் இவ்வாறான குறுக்கு வழிகளைக் கையாண்டு மக்களை இஸ்லாத்தின் வழிகாட்டலிலிருந்து தூரப்படுத்த முயற்சித்த வேளையில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வாளாவிருக்கவில்லை. அவர்களும் களம் இறங்கி னார்கள். அக்காலத்தில் காணப்பட்ட சகல ஊடகங்களையும் பயன்படுத்தி அசத்தியத்தின் போலித் தன்மையை வெளிப்படுத்தியதுடன் இஸ்லாத்தின் மாண்மியத்தை எடுத்துக்காட்டித் தெளிவுபடுத்தினார்கள். காபிர்கள் தன்மீது வசைக் கவிபாடி இஸ்லாத் திற்கு அபகீர்த்தியை ஏற்படுத்த முயற்சித்த வேளையில் ஹஸ்ஸான் பின் ஸாபித், கஃப் இப்னு மாலிக், அப்துல்லாஹ் இப்னு ரவாஹா போன்ற ஸஹாபாக்களை அழைத்து காபிர்களை எதிர்த்து கவிதைபாடும்படி பணித்து ஊக்குவித்தார்கள்.

*''நபியே! உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுங்கள் (26 அஷ் ஷுஅரா 214)''*

என்ற அல்குர்ஆன் வசனம் இறங்கியவுடன் ஸபா மலைக் குன்றிலேறி நின்று தன் குடும்பத்தவர்களான குறைஷிகளை உரத்த குரலில் அழைத்து இஸ்லாத்தை அறிமுகப்படுத்தினார்கள். ஜாஹிலிய்யாக் கால வழக்கில் முக்கியமான ஒரு செய்தியை சொல்வதற்கு உயர்ந்ததோர் இடத்தில் ஏறி ஆடைகளைக் களைந்துவிட்டு குறித்த செய்தியை முன்வைக்கும் மரபு காணப்பட்டது. அந்த மரபையே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கையாண்டார்கள். எனினும் அவர்கள் ஆடைகளைக் களையவில்லை. கண்ணியமாக நடந்துகொண்டார்கள். இந்த நிகழ்வானது பிறர் உருவாக்கிய ஊடக வழிமுறைகளை ஷரீஅத்தின் எல்லைக்குள் நின்று ஒரு முஸ்லிம் பயன்படுத்த முடியும் என்பதை கற்றுத்தருகிறது. தற்கால நவீன ஊடகங்களையும் இக்கண்ணோட்டத்திலேயே அணுக வேண்டும். ஸபா மலைக்குன்று மட்டுமன்றி ஒட்டகையின் முதுகு, உக்காழ், மிஜன்னா, துல்மஜாஸ் முதலிய சந்தைகள், மஸ்ஜித் மின்பர், மஃதனா முதலியவற்றையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஊடகமாகப் பயன்படுத்தியுள்ளார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன் தோழர்களின் நன்மை கருதி, தனது கருத்துக்களை மிக இலகுவாகவும் தெளிவாகவும் விளங்கிக் கொள்வதற்காக வித்தியாசமான பல்வேறு ஊடகங்களைப் பயன் படுத்தியிருக்கிறார்கள். ஒருமுறை தன் கையால் நிலத்தில் ஒரு கோட்டைக் கீறினார்கள். பின்னர் இது அல்லாஹ்வின் நேரான பாதை என்றார்கள். பின்னர் அதன் இடமாவும் வலமாகவும் சில கோடுகளைக் கீறினார்கள். இந்த ஒவ்வொரு கோட்டிலும் இருந்துகொண்டு ஷைத்தான் அழைத்துக் கொண்டிருக்கின்றான் எனக் கூறிவிட்டு,

*''இது எனது நேரான வழி. அதனைப் பின்பற்றுங்கள். வேறு பாதைகளைப் பின்பற்றாதீர்கள்...'' (6 அல்அன்ஆம் 153)* என்ற அல்குர்ஆன் வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்.

*மற்றொரு சமயம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சந்தையில் நடந்து சென்றார்கள். மக்கள் அதன் இரு புறமும் இருந்தார்கள். அப்போது காது அறுபட்ட ஆட்டுத் தலையொன்றினைக் கண்டு அதனைக் கையிலெடுத்த அவர்கள் ''இதனை ஒரு திர்ஹத்திற்கு பெற்றுக்கொள்ள விரும்புகிறீர்களா?''* எனக் கேட்டார்கள்.

*''இதனை விலைகொடுத்து வாங்கி என்ன பயன்? நாம் அதனை வாங்க மாட்டோம். ஏனெனில் அது உயிருடன் இருந்தால்கூட காது அறுபட்ட அதனை நாம் விரும்ப மாட்டோம்'' என ஸஹாபாக்கள் பதிலுரைத்தார்கள். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''இப்பொருள் உங்களுக்கு எவ்வளவு இழிவாகத் தெரிகிறதோ அதைவிடவும் இவ்வுலகம் அல்லாஹ்விடத்தில் இழிவானது'' (முஸ்லிம்)* என்றார்கள்.

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''நானும் அநாதையைப் பராமரிப்பவனும் சுவர்க்கத்தில் இவ்வாறிருப்போம்'' என தனது சுட்டு விரலையும் நடு விரலையும் இணைத்து எடுத்துக்காட்டினார்கள். (புஹாரி)*

ஜுமுஆ, ஈத் பெருநாட்களின் குத்பாக்கள், கிரகணத் தொழுகை, மழை வேண்டித் தொழும் தொழுகை என்பவற்றில் நிகழ்த்தும் குத்பாக்கள், ஹஜ்ஜின்போது நிகழும் அரபாப் பேருரை, நிகாஹின்போது இடம்பெறும் குத்பா என்பவற்றை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொடர்பூடகமாகப் பயன்படுத்தி தனது சிந்தனைகளை முன்வைத்தார்கள். மஸ்ஜிதுன் நபவியின் ஒரு பக்கத்தில் அமைந்த திண்ணை அஸ்ஹாபுஸ் ஸுப்பாக்களின் தொடர்பூடக மையமாகவும், ஹல்கா எனப்படும் கல்வி வட்டங்களின் தளமாகவும் பயன்படுத்தப்பட்டது. ஜமாஅத் தொழுகைக்காகப் பெரும் கூட்டம் கூடியுள்ள வேளைகளில் எழுப்பப்படும் அஞ்சல் முறையான தக்பீர் ஒலியும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கையாண்ட தொடர்பூடக உத்திகளுக்கு மற்றோர் உதாரணமாகும். இவ்வாறான பகிரங்க தொடர்பாடல் முறைகளைப் பயன்படுத்திய நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மறைமுக முறைகளையும் பயன்படுத்தினார்கள்.

மறைமுக தொடர்பாடலில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கடிதங்களையும் தூதர்களையும் பயன்படுத்தினார்கள். அதேநேரம் தீவானுல் இன்ஷா என்ற பதிவுத் திணைக்களத்தையும் உருவாக்கியிருந்தார்கள். தமது தூதைக்கொண்டு செல்வதற்காகவும் எழுத்து மூல தொடர்பாடலை நடைமுறைப்படுத்துவதற்காகவும் அவர்கள் விசேட தூதுவர்களையும் எழுத்தாளர்களையும் அமர்த்தியிருந்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது மக்கா வாழ்க்கைப் பகுதியில் (நுபுவ்வத் 5) அபீசீனியாவிற்கு ஜஃபர் இப்னு அபூதாலிப் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் தலைமையில் ஒரு தூதுக் குழுவை அனுப்பி வைத்தார்கள். மதீனாவுக்கு (நுபுவ்வத் 11) முஸ்அப் இப்னு உமைர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை தனது பிரதிநிதியாக அனுப்பி வைத்தார்கள். மதீனா வாழ்க்கைப் பகுதியில் யமனுக்கு முஆத் இப்னு ஜபல் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைப் பிரதிநிதியாக அனுப்பி வைத்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முத்திரையிடப்பட்ட கடிதங்களை நபித்தோழர்கள் பலர் சுற்றுவட்டாரத்தில் ஆட்சிசெய்த மன்னர்களுக்கும் ஆளுநர்களுக்கும் எடுத்துச் சென்றார்கள். அபீசீனிய மன்னன் நஜ்ஜாஷிக்கு அம்ர் இப்னு உமையா ரழியல்லாஹு அன்ஹு அவர்களும், எகிப்து நாட்டு மன்னன் முகவ்கிஸுக்கு ஹாதிப் இப்னு அபூ பல்தஆ ரழியல்லாஹு அன்ஹு அவர்களும், பாரசீக மன்னன் கிஸ்ராவுக்கு அப்துல்லாஹ் இப்னு ஹுதாபா ரழியல்லாஹு அன்ஹு அவர்களும், உரோம நாட்டு மன்னன் ஹிரக்கீலுக்கு திஹிய்ய இப்னு கல்பி ரழியல்லாஹு அன்ஹு அவர்களும், யமாமா நாட்டு மன்னன் ஹவ்தா இப்னு அலிக்கு வலீத் இப்னு அம்ர் அல் ஆமிரி ரழியல்லாஹு அன்ஹு அவர்களும், சிரியா நாட்டு மன்னன் ஹாரில் இப்னு அபூ ஹமீருக்கு ஷுஜா இப்னு வஹப் ரழியல்லாஹு அன்ஹு அவர்களும், ஓமான் நாட்டு மன்னன் ஸஃபருக்கு அம்ர் இப்னு ஆஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களும் கடிதங்களைக்கொண்டு சென்றார்கள்.

இவ்வாறு அனுப்பி வைக்கப்பட்ட கடிதங்களை அடியொட்டியே உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தீவானுல் பரீத் என்ற தபால் திணைக்களத்தை உருவாக்கினார்கள். இது உமையாக்கள் காலத்தில் தீவானுல் பரீத் வல் அக்பார் என்ற பெயரில் தபால் செய்தித் திணைக்களமாக வளர்ச்சியடைந்தது. அப்போது புறாக்கள், தபால் வண்டிகள் என்பனவும் பயன்படுத்தப்பட்டன. இதுதவிர இத்தொடர்பூடகப் பணியை தீவானுர் ரஸாஇல், தீவானுல் காதம், தீவானுல் காதிப் ஆகிய திணைக் களங்களும் செய்து வந்திருப்பதைக் காணலாம்.

ஒரு முஸ்லிம் தகவல்களில் விழிப்பாகவும் நுணுக்கமாகவும் இருக்க வேண்டும். தகவல்களைத் தெரிந்திருப்பதும் இன்றியமையாததாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மதீனா ஹிஜ்ரத்தின்போது ஸவ்ர் குகையில் மூன்று நாட்கள் தங்கினார்கள். மக்கத்துக் குறைஷிகளின் நடவடிக்கைகளை இரகசியமாகச் சேகரித்து வருவதற்கு அப்துல்லாஹ் இப்னு அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை நியமித்தார்கள். முஷ்ரிகீன்களின் நடவடிக்கைகளைத் தெரிந்து

கொள்வதற்காக அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை மதீனாவுக்குத் தாமதித்து வருமாறு கடிதம் எழுதினார்கள். எதிரிப் படையின் வருகையை அறிய ஒட்டகை மலத்தைப் பரிசீலனை செய்தார்கள். ஒரு குகைக்குள்ளே இருப்பினும்கூட தன்னைச் சூழ நிகழ்பவை பற்றி விழிப்பாக இருக்க வேண்டும். அவ்வாறு மறைவான இடத்திலிருந்தாலும் தொடர்பூடக உத்திகளைக் கையாண்டு தகவல்களைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதை இவை எடுத்துக்காட்டுகின்றன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன்னைச் சூழவிருந்த தூர நாடுகளில் நிலவிய சூழ்நிலைகளை நன்கு தெரிந்து வைத்திருந்தார்கள். அபீசினியா மன்னன் யார்? அவனது சமயம் எது? அவனதும் அந்நாட்டு மக்களதும் பண்புகள் எத்தகையன? அந்நாட்டின் வெளிநாட்டுக் கொள்கை யாது? என்பவற்றையெல்லாம் தெரிந்து வைத்திருந்ததாலேயே முதல் ஹிஜ்ரத் குழுவை அங்கு அனுப்பி வைத்தார்கள். ஸபஃ நாட்டு இளவரசி பல்கிஸ், ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் ஆகியோர் தூர நாடுகளின் செய்திகளைத் தெரிந்துகொள்ள ஹுத்ஹுத் பறவையை பயன்படுத்திய செய்தியை அல்குர்ஆன் சொல்கிறது. இதுவும் சூழ நடப்பவை குறித்து விழிப்புணர்வு தேவை என்பதற்குச் சான்றாக உள்ளது. மேற்சொன்ன பல்வேறு உத்திகளும் சந்தர்ப்பத்திற்கும் தேவைக்கும் ஏற்ப பிற்காலத்தில் வெவ்வேறு அமைப்புக்களில் கையாளப்பட்டு வருகின்றன.

இன்றைய நவீன தொடர்பூடகங்களின் வளர்ச்சி முழு உலகையும் விரல் நுனியால் ஆட்டிப் படைக்கிறது. சிந்தனைப் போராட்டங்களையே நடத்தி வருகின்றது. வல்லரசு நாடொன்றின் கடற்படை, விமானப்படை, தரைப்படையின் பலத்தையும் செல்வாக்கையும் தொடர்பூடகங்கள் மிகைத்துவிட்டன. அவையே ஒரு நாட்டின் வெற்றி தோல்வியைத் தீர்மானிக்கும் பலம்மிகு சக்தியாகத் திகழ்கின்றது. அதுதரும் நன்மைகள் ஏராளம்; தீமைகளும் ஏராளம். மனிதனது பாரம்பரிய சமூகம், சமயம், கலாசாரம் என்பவற்றுக்கு மாறாக அவனை ஆட்டிப் படைக்கிறது. அதன் தீமைகளைக் கட்டுப்படுத்த முடியாதுள்ளது. குற்றச் செயல்களின் பிரவாகத்திற்கும் அறிவுக்கும் அது வழிகோலுகின்றது. வயோதிபர், இளையோர் என்ற எல்லையைத் தாண்டி தவழும் குழந்தையும் அதன் ஆதிக்கத்திற்குட்பட்டிருப்பதைக் காணலாம். எனவே தொடர்பூடகங்களை முறையாகப் பயன்படுத்தினால் அதுதரும் நன்மைகள் எண்ணிலடங்கா. எனவே அது பற்றிய இஸ்லாமிய நோக்கைத் தெரிந்து பயன்படுத்த வேண்டும்.

''அடிப்படையில் அனைத்து அம்சங் களும் ஆகுமானவை'' என்ற சட்ட விதிக்கேற்ப ஒவ்வொரு காலப் பிரிவுகளிலும் காணப் படுகின்ற, கண்டுபிடிக்கப் படுகின்ற தகவல் தொழில்நுட்ப ஊடகங்களையும், உத்திகளையும், நல்ல கருத்துக்களைப் பரப்புவதற்கும் சிறந்த கருத் தோட்டங்களை ஊட்டுவதற்கும் சமூக பண்பாடு வளர்வதற்கும் ஆன்மீக உறுதிப்பாடு நிலவுவதற்கும் ஒழுக்க விழுமியங்களைப் பாதுகாப்பதற்கும்



இஸ்லாம் அனுமதி வழங்கு கின்றது. அத்துடன் அவ்வூடகங்கள் எத்தகைய பண்பாடுகளைப் பெற்றிருக்க வேண்டும் எனவும் தெளிவாகக் கூறியுள்ளது. அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தி விளக்கலாம்.

### 1. ஆதாரபூர்வமானவை

தொடர்பூடகங்கள் வெளியிடும் தகவல்கள் ஆதாரபூர்வமானவையாக இருக்க வேண்டும். தனக்குக் கிடைக்கும் தகவல்கள் அனைத்தையும் நிச்சயப்படுத்திக் கொள்ளாதவரை வெளியிடலாகாது. ''ஒருவன் தனது காதில் விழும் தகவல்கள் அனைத்தையும் (ஊர்ஜிதப்படுத்தாமல்) எடுத்துக் கூறுவது அவன் சொல்லும் பெரிய பொய்யாகும்'' (முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஒரு தடவை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து பனூமுஸ்தலக் கோத்திரத்தினர் மதம் மாறிவிட்டதாக ஒருவர் தெரிவித்தபோது அந்தச் செய்தியை அடிப்படையாக வைத்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் சில நடவடிக்கைகளை மேற்கொள்ள முயன்றார்கள். அவ்வேளையில்தான், ''நம்பிக்கை யாளர்களே! யாதொரு விஷமி உங்களிடம் யாதொரு செய்தியைக் கொண்டு வந்தாலும் (அதன் உண்மையை அறியும்பெருட்டு அதனைத்) தீர விசாரித்து தெளிவு பெற்றுக் கொள்ளுங்கள். இல்லையெனில் அவனுடைய சொல்லை நம்பி அறியாமையின் காரணமாக ஒரு சமூகத்தைப் பாதிக்கும் முடிவுகளுக்கு வந்துவிடக்கூடும். பின்னர், நீங்கள் செய்தவைகளைப் பற்றி நீங்களே துக்கித்து கவலைப்படவும் நேர்ந்துவிடும் (49 அல் ஹுஜ்ராத் 6) என்ற அல்குர்ஆன் வசனத்தை அல்லாஹ் இறக்கினான்.

எனவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இந்தத் தகவலை ஆதாரபூர்வமானதா என ஊர்ஜிதப்படுத்த காலித் இப்னு வலீத் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை அனுப்பி வைத்தார்கள். அவர் தனது ஒற்றர்களை இரவு வேளையில் அனுப்பி பனூ முஸ்தலக் கோத்திரத்தினரை அவதானித்தார். அப்போது அவர்கள் மதம் மாறவில்லை என்ற உறுதியான தகவல் அவருக்குக் கிடைத்தது. எனவே ஊடகங்கள் வெளியிடும் அறிக்கைகள், புள்ளி விபரங்கள் அனைத்தும் ஆதாரபூர்வமானவையா என்பதை உறுதிபடுத்திக் கொண்ட பின்பே வெளியிட வேண்டும்.

''...நீங்கள் உண்மை சொல்பவராக இருந்தால் உங்களுடைய அத்தாட்சிகளைக் கொண்டு வாருங்கள்'' (27 அந் நம்லு 64) என்று அல்குர்ஆன் கூறுகின்றது.

### 2. நம்பகத் தன்மை

உண்மையும் அமானிதமும் ஊடகவியலாளருக்கு இருக்க வேண்டிய முக்கிய பண்புகளாகும். மூலாதாரங்களிலிருந்து தகவல்களைப் பெறும்போதுகூட அவை சரியானவையா என்பதில் அமானிதத்தைப் பேண வேண்டும். ஊகம், கற்பனை, பிரமை, இருட்டடிப்பு, பொய், கலப்பு போன்றவற்றைத் தவிர்த்து நம்பகத் தன்மை கொண்ட செய்திகளை மாத்திரம் வெளியிட வேண்டும்.

*''...நீங்கள் உண்மை சொல்பவராக இருந்தால் ஆதாரத்துடன் இதனை நீங்கள் எனக்கு அறிவியுங்கள்'' (6 அல் அன்ஆம் 143)* என்று அல்குர்ஆன் கூறுகின்றது.

### 3. நடுநிலை தவறாமை

தார்மீகப் பொறுப்புடைய ஊடகவியல் ஒருபோதும் சமூக சார்பெண்ணங்களுக்கோ, பக்கசார்புகளுக்கோ பலியாகிவிடக் கூடாது. செய்திகளை மாற்றியும், திரித்தும், மிகைப்படுத்தியும், குறை மதிப்பீடு செய்தும் வெளியிடுவது விழுமியத்திற்கு அப்பாற்பட்டதாகும்.

*''விசுவாசிகளே! நீங்கள் நீதத்தின் மீதே நிலைத்திருங்கள். '(நீங்கள் சாட்சி கூறினால் அது) உங்களுக்கோ அல்லது உங்கள் பெற்றோருக்கோ அல்லது நெருங்கிய உறவினருக்கோ பாதகமாக இருந்தபோதிலும் அல்லாஹ்வுக்காக (உண்மையையே) சாட்சி கூறுபவர்களாக இருங்கள். (நீங்கள் யாருக்காக சாட்சி கூறுகிறீர்களோ) அவர் பணக்காரராயினும், ஏழையாயினும் (உண்மையையே கூறுங்கள். ஏனென்றால்) அல்லாஹ் அவ்விருவருக்குமே (உதவி செய்ய) மிகத் தகுதியானவன். ஆகவே நீங்கள் (உங்கள்) ஆசை (அபிலாஷை)களைப் பின்பற்றி வரம்பு மீறாதீர்கள். (4 அன்னிஸா 135)*

### 4. பொதுநலன் பேணல்

ஒவ்வொரு தனிமனிதனுக்கும் கருத்துச் சுதந்திரம் உண்டு. இந்த வகையில்தான் ஊடகவியற் சுதந்திரமும் அங்கீகரிக்கப்படுகின்றது. ஆனால் இந்த உரிமையைப் பயன்படுத்தும்போது பொது மக்களின் நலன்களைப் பாதிக்காத வகையில் அது அமைய வேண்டும். தவறான வழிக்கு இட்டுச் செல்லும் எதனையும் ஒலிபரப்புவது, காட்சிப்படுத்துவது, வெளியிடுவது என்பன அத்துமீறலும் துரோகமுமாகும். ஏனெனில் தொடர்பூடகங்கள் குற்றச் செயல்களை மென்மேலும் வளரவிடாது தடுக்க வேண்டும். கற்பொழுக்கத்தோடு வாழ வழிசெய்ய வேண்டும். சமூகத்தில் இடம்பெறும் பாலியல் ரீதியான அத்துமீறல்களைத் தாராளமாக அம்பலப்படுத்தும்போது பலவீனமானோர் தாமும் அதில் வீழ்ந்துவிட தூண்டுதலாகவும் அமையக் கூடும். எனவே இத்தகு கீழ்த்தரமான செய்திகளைப் பரப்புபவர்களை அல்லாஹ் கடுமையாகக் கண்டிக்கிறான்.

*''நிச்சயமாக எவர்கள் (இதற்குப் பின்னரும்) நம்பிக்கையாளர்களுக்கிடையே இத்தகைய மானக்கேடான வார்த்தைகளைப் பரப்ப விரும்புகிறார்களோ அவர்களுக்கு நிச்சயமாக இம்மையிலும் மறுமையிலும் மிக்க துன்புறுத்தும் வேதனை உண்டு. (அதனால் ஏற்படும் தீங்குகளை) அல்லாஹ்தான் நன்கறிவான். நீங்கள் அறிய மாட்டீர்கள்'' (24 அந்நூர் 19)*

### 5. பண்பாடு பேணல்

எந்தவொரு தகவலையும் நெறி தவறாமல் பண்பாடான முறையில் முன்வைக்க வேண்டும். கீழான உணர்வுகளைத் தூண்டாத, குரோதங்களை பகைமைகளை வளர்க்காத நாகரிகமான வார்த்தைப் பிரயோகங்கள் கடைப்பிடிக்கப்பட வேண்டும்.

*''தீய வார்த்தைகளைக் கூறி கூச்சலிடுவதை அல்லாஹ் விரும்புவதேயில்லை'' (4 அன்னிஸா 148)*

*'நீங்கள் அவர்களுடன் மிக அழகிய முறையிலேயே வாதம் புரியுங்கள்'' (16 அந் நஹ்ல் 125)*

சுதந்திரமான தொடர்பூடகத் துறையானது முழு மனித சமுதாயத்தினரதும் நலனை நோக்காகக் கொண்டு நீதி, சுதந்திரம், மனித உரிமை முதலியவற்றை உறுதிப் படுத்தவும் பாதுகாக்கவும் துணை புரிவதோடு தனிமனித, குடும்ப, தேசிய மட்டத் திலான, சர்வதேச மட்டத்திலான ஒழுக்க மாண்புகளைப் பேணவும் ஒற்றுமையை நிலைநாட்டவும் வளமான எதிர்காலத்தை உறுதிப்படுத்தவும் வழிசெய்ய வேண்டும் என்பதே இஸ்லாத்தின் எதிர்பார்ப்பாகும்.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

۞ الجُمْعَةُ ۞ العِيْدُ ۞ المَسْجِدُ ۞ عُكَّاظٌ ۞ ذُو المَجَازِ ۞ المِنْبَرُ ۞ المَأْذَنَةُ ۞
الخُطْبَةُ ۞ أَصْحابُ الصُّفَّةِ ۞ الحَلْقَةُ ۞ دِيْوانُ الإِنْشاءِ ۞ دِيْوانُ البَرِيْدِ والأَخْبَارِ ۞
دِيْوانُ الرَّسائِلِ ۞ دِيْوانُ الخَاتَمِ ۞ دِيْوانُ الكاتِبِ ۞ هُدْهُدْ ۞ بَنُو المُصْطَلَق

## பயிற்சி

1. ஊடகத் தேவையின் முக்கியத்துவம் பற்றி விளக்குக.
2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிமுகப்படுத்திய, கைக்கொண்ட ஊடக முறைகள் சிலவற்றைக் குறிப்பிடுக.
3. ஊடகங்கள் பின்பற்ற வேண்டிய பண்புகள் பற்றிக் குறிப்பிடுக.
4. ஊடகப் பயன்பாடுகளில் நாம் அடைந்துகொள்ளும் சாதக, பாதக முறைகளைக் குறிப்பிடுக.

# 32

# உம்மத் பற்றிய கண்ணோட்டம்

وَمَا كَانَ النَّاسُ إِلاَّ أُمَّةً وَّاحِدَةً فَاخْتَلَفُوْا...

''மனிதர்கள் அனைவரும் (ஆரம்பத்தில் ஒரே மார்க்கத்தைப் பின்பற்றும்) ஒரே உம்மத்தாக இருந்தனர். பின்னர் (தமக்குள் ஏற்பட்ட பொறாமையின் காரணமாக) பல வகுப்பினராகப் பிரிந்துவிட்டனர்.'' (10 யூனுஸ் 19)

உம்மத் என்ற சொற்பிரயோகம் மொழிரீதியாக ''தாய்'', ''சமூகம்'' என்ற அர்த்தங்களில் பொதுவாகப் பிரயோகிக்கப்பட்டாலும் சமூகவியல் அறிஞர்கள் அதனை ஒரு மூலத்தில் இருந்து உருவான மக்கள் கூட்டம், பரம்பரைப் பண்புகளால் ஒன்றுபட்ட சமூகம், ஒரே கொள்கை ஒரே இலக்கு என்பவற்றால் ஒன்றுபட்ட மக்களணி, சமயத்தால் அல்லது பிரதேசத்தால் அல்லது காலத்தால் ஒன்றிணைந்தவர்கள் எனப் பல்வேறு விதமாக வரைவிலக்கணப்படுத்துகின்றனர்.

இஸ்லாமிய மரபில் சன்மார்க்க சமூகவியல் சார்ந்த ஒரு கலைச் சொல்லாகவே இது பயன்படுத்தப்படுகிறது. பல்லின மக்கள் வாழும் தேசத்தைச் சேர்ந்தவர்கள் என்ற வகையில் நாம் உம்மத் பற்றிய விளக்கத்தை சமய சமூகக் கண்ணோட்டங்களில் அறிந்திருக்க வேண்டும்.

அல்குர்ஆன் உம்மத் என்ற சொல்லை ஐம்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் பிரயோகித்துள்ளது. அவற்றைத் தொகுத்து நோக்கும்போது ஒரே தாய் தந்தையருக்குப் பிறந்து ஒரே கொள்கையுடன் ஒரே உம்மத்தாக வாழ்ந்த மனிதர்கள் தமக்குள் கருத்து வேறுபாடுபட்டதனால் பல குழுக்களாகப் பிரிந்தனர் என்றும் அவ்வாறு பிரிந்த ஒவ்வொரு குழுவையும் **லாஇலாஹ இல்லல்லாஹ்** என்ற கலிமாவின் மூலம் ஒன்று படுத்துவதற்காக அல்லாஹ் நபிமார்களை அனுப்பியுள்ளான் என்றும் தெளிவாகின்றது.

*''மனிதர்கள் அனைவரும் (ஆரம்பத்தில் ஒரே மார்க்கத்தைப் பின்பற்றும்) ஒரே உம்மத்தாக இருந்தனர். பின்னர் (தமக்குள் ஏற்பட்ட பொறாமையின் காரணமாக) பல வகுப்பினராகப் பிரிந்துவிட்டனர்.'' (10 யூனுஸ் :19)*

*''தூதர்களே! பரிசுத்தமானவற்றில் இருந்தே உண்ணுங்கள். மேலும் நற்காரியங்களைச் செய்யுங்கள். நீங்கள் செய்பவற்றை நான் அறிந்தவனாக உள்ளேன். மேலும் இதுதான் ஒரே உம்மத்தாகிய உங்களது உம்மத்தாகும். நான் உங்களது ரப்பாவேன். எனவே என்னையே பயந்து கொள்ளுங்கள்.'' (23 அல் முஃமினூன் :51,52)*

மனிதர்கள் வேறுபாடுகளை மறந்து ஒரே அல்லாஹ்வை விசுவாசித்து ஓர் உம்மத்தாக ஒன்றிணைவது அல்லாஹ்வின் அருளுக்குரிய விடயம் என்றும் அல் குர்ஆன் கூறுகிறது.

*''அல்லாஹ் நாடியிருந்தால் உங்களை ஒரே உம்மத்தாக ஆக்கியிருப்பான். என்றாலும் அவன் நாடியவர்களையே தனது அருளினுள் நுழைவிக்கின்றான்.'' (42 அஷ்ஷூரா :8)*

*''உங்கள் இறைவன் எண்ணியிருந்தால் மனிதர்கள் அனைவரையும் ஒரே உம்மத்தாக ஆக்கியிருப்பான். (அவ்வாறு நாடவில்லை) அவர்கள் தங்களுக்குள் மாறுபட்டுக் கொண்டே இருப்பார்கள். அவர்களில் உங்கள் இறைவன் அருள் புரிந்தவர்களைத் தவிர.'' (11 ஹூத் :118)*

இஸ்லாமிய சமூகவியல் சிந்தனையாளர்களாகிய இமாம் இப்னு ஹல்தூன், பாராபி, ரஷீத் ரிழா போன்றோர் உம்மத் தொடர்பாக விளக்கும்போது முஸ்லிம் உம்மத் என்ற சொற்பிரயோகத்தை ''இஸ்லாம் மார்க்கத்தைச் சேர்ந்தவர்கள் என்ற பொதுவான அம்சத்துடன் நடுநிலைத் தன்மை, நன்மையை ஏவித் தீமையைத் தடுத்தல், மக்களுக்குச் சான்றுபகர்தல் ஆகிய சிறப்பம்சங்களைக் கொண்ட தனிநபர்களின் சேர்க்கை என்று வரைவிலக்கணப்படுத்துகின்றனர். இது முஸ்லிம் உம்மத் பற்றிய அல்குர்ஆனின் கூற்றுக்களில் இருந்து பெறப்பட்ட வரைவிலக்கணமாகும்.

*''மனிதர்களுக்கு அனுப்பப்பட்ட சிறந்த உம்மத்தாக நீங்களே உள்ளீர்கள். நீங்கள் நன்மையை ஏவுகின்றீர்கள், தீமையைத் தடுக்கின்றீர்கள்.'' (3 ஆல இம்ரான் :110)*

*''நீங்கள் மக்களுக்குச் சான்று பகர்வோராய் இருப்பதற்காக உங்களை நாம் நடுநிலை உம்மத்தாக ஆக்கினோம்...'' (2 அல் பகரா :143)*

மேற்கூறப்பட்ட வரைவிலக்கணத்தின் படி மனித வர்க்கத்தில் காணப்படும் தேசிய, இன, மத, மொழி, நிற வேற்றுமைகள் எதனையும் கவனத்திற் கொள்ளாது **லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்** என்ற கலிமாவை மொழிந்து இஸ்லாத்தை வாழ்க்கை முறையாகக் கொண்ட ஒவ்வொரு தனிநபரும் முஸ்லிம் உம்மத்தின் அங்கத்தவராகக் கருதப்படுகின்றார்.

முஸ்லிம் உம்மத்தின் தோற்றம் நபிமார்களின் தந்தையாகிய இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களினதும் இஸ்மாஈல் அலைஹிஸ்ஸலாம் அவர்களினதும் இலட்சியக் கனவாகும். அவர்கள் ''யாஅல்லாஹ் எம்மிருவரையும் உனக்குக் கட்டுப் பட்ட முஸ்லிம்களாக ஆக்குவாயாக. எமது சந்ததியில் இருந்து உனக்கு கட்டுப்பட்ட ஒரு முஸ்லிம் உம்மத்தை உருவாக்குவாயாக'' என்று பிரார்த்தித்தார்கள். அவர்கள் கஃபாவைக் கட்டும் போதே அவ்வாறு பிரார்த்தித்ததாக அல்குர்ஆன் கூறுகிறது. முஸ்லிம் உம்மத்தின் ஸ்தாபகராகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஸ்மாஈல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பரம்பரையில் வந்தமையும் கஃபா உலகில் உள்ள அனைத்து முஸ்லிம்களையும் ஓர் உம்மத்தாக ஒன்றிணைப்பதும் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களினதும் இஸ்மாஈல் அலைஹிஸ்ஸலாம் அவர் களினதும் பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப்பட்டது என்பதற்கு அடையாளமாகும்.

அல்குர்ஆனும் ஸுன்னாவும் உம்மத் எனும் கட்டமைப்பைப் பாதுகாப்ப தற்காகவும் விரிவு படுத்துவதற்காகவும் பல்வேறு வழிகாட்டல்களை வழங்கியுள்ளன. அவற்றுள் சில வருமாறு:

1. அல்குர்ஆனையும் ஸுன்னாவையும் பற்றிப்பிடித்தல்
2. தலைமைத்துவத்துக்குக் கட்டுப்படுதல்
3. கூட்டுக் கடமைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்தல்
4. தனி நபர்களுக்கான கருத்துச் சுதந்திரம்
5. பொது விவகாரங்களில் கருத்து வேறுபாடு வரும்போது ஏகோபித்த முடிவை ஏற்றல்
6. முஸ்லிம்கள் ஒன்றுபட்டு இயங்குதல்
7. சான்று பகர்தலும் முன்மாதிரியாக நடத்தலும்
8. சகோதரத்துவத்தைப் பேணி நடத்தல்
9. சமத்துவம் பேணல்

மேற்கூறப்பட்ட வழிகாட்டல்களை ஏற்று உம்மத்தின் ஐக்கியத்தைப் பேணுவது ஒவ்வொரு முஸ்லிமினதும் கடமையாகும். ஏனெனில் ஒவ்வொரு தனிநபரினதும் பலமும் பாதுகாப்பும் உம்மத்தின் பலத்திலும் பாதுகாப்பிலுமே தங்கியுள்ளது. அவ்வாறே மறுமை விமோசனமும் உம்மத்துடன் இணைந்து வாழ்பவர்களுக்கே கிடைக்கின்றது.

உம்மத் பிளவுபடுவதை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெறுத்தார்கள். முன்சென்ற சமூகங்கள் பிளவுபட்டதனால் ஏற்பட்ட விளைவுகளை நினைவுபடுத்தி முஸ்லிம் உம்மத்தைப் பின்வருமாறு எச்சரித்தார்கள்.

''பனூ இஸ்ரவேலர்கள் எழுபத்தியொரு கூட்டத்தினராகப் பிரிந்தனர். எனது உம்மத்தினர் எழுபத்தி மூன்று கூட்டத்தினராகப் பிரிவர். அதில் ஒரு கூட்டத்தைத் தவிர மற்ற அனைத்தும் நரகம் நுழையும். அந்த ஒரு கூட்டம் தான் **ஸுன்னா வல் ஜமாஆ** ஆகும்'' (இப்னு மாஜா)

மேலுள்ள ஹதீஸ் முஸ்லிம் உம்மத்துக்கு ஓர் எச்சரிக்கையாகும். அதை நாம் பிழையாக அர்த்தம் கொள்ளக்கூடாது. முஸ்லிம் உம்மத்தினுள் பிர்கா, தாஇபா, ஹிஸ்ப், ஜமாஅத், மத்ஹப், ஹரகத், தரீக்கத், ஜம்இய்யத் என பல அமைப்புக்கள் காணப்படுகின்றன. இவை இஸ்லாமிய அகீதாவையும் ஷரீஅத்தையும் ஏற்றுக் கொள்ளுமாயின் நரகம் நுழையும் கூட்டங்களில் ஒன்றாகக் கருத முடியாது. உம்மத் எனும் அடிப்படைக் கட்டமைப்பை மதித்து அதன் இருப்புக்காகவும் பரவலுக்காகவும் உழைக்கின்ற தனிநபர்களும் அமைப்புக்களும் சுவர்க்கம் நுழையும் கூட்டமாகிய ஸுன்னத் வல் ஜமாத்தைச் சேர்ந்தவர்களே ஆவர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உம்மத் பற்றிய சிந்னையை மிகப் பரந்த மனத்துடன் முன்வைத்துள்ளார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''யார் எமது தொழுகையைத் தொழுகின்றாரோ எமது கிப்லாவை முன்னோக்குகின்றாரோ நாம் ஸப்ஹ் செய்தவற்றை உண்கின்றாரோ அவர் எம்மைச் சார்ந்தவராவார்.''

இந்த ஹதீஸ் அற்ப விடயங்களுக்காகப் பிரிந்து செல்வதை விட அடிப்படை விடயங்களுக்காக ஒன்று சேரவேண்டும் என்பதையே உணர்த்துகின்றது.

சமூகவியலாளர்கள் பிரதேசத்தால் ஒன்றுபட்டவர்களையும் ஓர் உம்மத்தாக நோக்குவதை ஏற்கனவே பார்த்தோம். அதற்கமைய சர்வதேச முஸ்லிம் உம்மத்தைச் சேர்ந்தவர் என்ற வகையிலும் இலங்கை உம்மத்தைச் சேர்ந்தவர் என்ற வகையிலும் எமது பொறுப்புக்களை நாம் சரியாக அறிந்து நிறைவேற்றுவது எமது தார்மீகக் கடமையாகும்.

இலங்கை மக்கள் என்ற வகையில் நாம் கடைப்பிடிக்க வேண்டிய வழிகாட்டல் களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

- தேசத்தின் மீது அன்பு வைத்தல்.
- தேசத்துக்கு விசுவாசமாக நடத்தல்.
- தேச மக்களின் உணர்வுகளுக்கு மதிப்பளித்தல்.
- தேசத்தின் ஐக்கியத்துக்காகப் பங்காற்றுதல்.
- தேசம் எதிர் கொள்ளும் சவால்களுக்கு முகம் கொடுத்தல்.
- தேசத்தின் சிவில் சட்டங்களுக்கு மதிப்பளித்தல்.
- இன மத சுயநலன்களைக் கைவிடல்.
- சமூக விரோத செயல்களை ஒழிப்பதற்கு ஒத்துழைப்பு வழங்கல்.
- பிற சமூகத்தாரோடு பழகுவதில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது வாழ்வில் காட்டிய முன்மாதிரிகளைக் கடைபிடித்தல்.
- சமய, கலாசார தனித்துவங்களையும் ஷரீஆ வரையறைகளையும் பேணல்.
- சகோதர இனத்தவர்களுடன் சினேகபூர்வமான கலந்துரையாடல்களை ஏற்படுத்திக் கொள்ளல்.
- சுதேச மொழிகளைக் கற்றல்.
- பொதுக் குறிக்கோள்களைக் கடைபிடித்தல்.
- தேசத்துக்காகப் பிரார்த்தித்தல்.

மேற்கூறப்பட்டவை அனைத்தும் இஸ்லாத்தின் பொதுவான வழிகாட்டல்களில் இருந்து பெறப்பட்டவைகளாகும். முஸ்லிம் உம்மத் நடுநிலை உம்மத் என்ற வகையில் தேசப் பற்றுக்கும் சமூகப் பற்றுக்கும் இடையே இணக்கம் காண்பது கடினமானதல்ல.

**பாடத்தில் இடம்பெற்றுள்ள அரபுச் சொற்கள்**

الأُمَّةُ ✽ ابنُ خَلْدُون ✽ الفِرْقَةُ ✽ الطَّائِفَةُ ✽ الحِزْبُ ✽ الجَماعَةُ ✽ المَذْهَبُ ✽ الحَرَكَةُ ✽ الطَّرِيْقَةُ ✽ الجَمْعِيَّةُ

## பயிற்சி

1. உம்மத் என்ற சொல்லின் மொழிக் கருத்தையும் வரைவிலக்கணத்தையும் குறிப்பிடுக.
2. முஸ்லிம் உம்மத் பற்றிய வரைவிலக்கணத்தில் குறிப்பிடப்படும் முஸ்லிம் உம்மத்தின் சிறப்பான பண்புகள் மூன்றைக் கூறுக.
3. இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களினதும் இஸ்மாஈல் அலைஹிஸ்ஸலாம் அவர்களினதும் பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப் பட்டது என்பதற்கான அடையாளம் யாது?
4. முஸ்லிம் உம்மத் எனும் கட்டமைப்பைப் பாதுகாப்பதற்கு நாம் கடைப்பிடிக்க வேண்டிய வழிகாட்டல்கள் எவை?
5. இலங்கை உம்மத் என்ற வகையில் எம்மிடம் இருக்க வேண்டிய பண்புகள் யாவை?